# KADAMBARI

IN TAMIL

AN ABRIDGED TRANSLATION OF
SRI BHATTA-BANA'S
SANSKRIT KADAMBARI

BY

AYURVEDA BHUSHAN
PANDIT M. DURAISWAMI AIYANGAR,
AYURVEDIC MEDICAL PRACTITIONER,
*Vice-President and Examiner, The All-India Ayurveda Vidya Pittha,*
*Translator of ancient Sanskrit Ayurvedic Works—'Ashtanga Hridaya,' 'Sarngadhara Samhita,' 'Madhava Nidana' &c. into Tamil and also Kalidasa's 'Meghasandesa' and Editor of the "Vaidya Kalanidhi" &c. &c.*

---

2nd Revised Edition.

---

PUBLISHED BY
**THE VAIDYA KALANIDHI OFFICE,**
VEPERY, MADRAS :
1923

[Copyright Reserved.]

ஸ்ரீ

# காதம்பரீ

ஸ்ரீ பட்ட பாணனது

## ஸம்ஸ்க்ருத காதம்பரியின்

## சுருக்கமான மொழி பெயர்ப்பு

எல்லா இந்திய ஆயுர்வேத மஹாமண்டல வித்தியாபீடங்களின்
பரீக்ஷகரும் உபாக்கிராஸனாதிபதியும், டிப்ளோமா
பெற்ற ஆயுர்வேத சிகித்ஸகரும், 'மேகஸந்தேசம்'
என்னும் ஸம்ஸ்க்ருத காவியம், ஸம்ஸ்க்ருத ஆயுர்வேதக்
கிரந்தங்களான 'அஷ்டாங்க ஹ்ருதயம்', 'சார்ங்தர ஸம்ஹிதை'
'மாதவநிதாநம்' முதலிய நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தவரும்
வைத்திய கலாநிதி பத்திராசிரியருமான
ஆயுர்வேத பூஷணம்
பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார் ஏ. கே. ஏ. ஸி.
அவர்கள் இயற்றியது.

---

சீர்திருத்திய இரண்டாம் பதிப்பு.

---

வைத்திய கலாநிதி ஆபீஸ்,
வேப்பேரி, மதராஸ்.

1923.



ஆயுர்வேத பூஷணம்
பண்டித எம். துரைஸ்வாமி ஐயங்கார்.

## ஆசிரியர் குறிப்பு

### (இரண்டாம் பதிப்பு)

பண்டைக்காலத்தில் கவிகளுக்கிருந்த அறிவு அஸாதாரணமானது, மாசற்றது. காளிதாஸன், பவபூதி, பட்டபாணன் முதலிய ஸம்ஸ்க்ருத கவிகள் மதியினால் மஹிமையினால் வாக்தேவதையை வசப்படுத்தியவர்கள். அன்னாரியற்றிய காவ்யங்கள் பாரத நாட்டின் பிராசீன நாகரிகக் கொள்கைகளைப் பிரகாசப்படுத்துகின்றன; பண்டைக்காலத்தியவரின் ஸச்சரித்திரங்களை விளக்கிப் படிப்பவரின் மனதைப் பண்படுத்துகின்றன; சிற்றறிவைக் கற்றோருவக்குமாறு சீர்படுத்தும் கருவிகளாயிருக்கின்றன. இந்நூல்களில் அடங்கிய அரிய தத்துவாம்சங்களை வடமொழியறியாத நம் தமிழருணர்ந்து பயன் பெற வேண்டுமென்பது எனது மனோரதம். ஆகவே பன்னிரண்டு வருடங்களுக்கு முன் காதம்பரியை யான் முதலில் மொழிபெயர்க்க முயன்றேன். அதை 1910-ம்௵ அச்சிட்டு வெளியிட்டேன். அம்மொழிபெயர்ப்பை வடமொழி வல்லோரான ஸ்ரீமான் எம். கிருஷ்ணமாசாரியர், எம். ஏ. எம். எல். எம். ஆர். ஏ. எஸ் (டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப்), அபிநவபட்டபாண ஆர். வி. கிருஷ்ணமாசாரியர் முதலானோரும், தமிழ்ப்புலவரான மஹா மஹோபாத்யாய வே. ஸ்வாமிநாத ஐயர் முதலானோரும் பெரிதும் பாராட்டியிருக்கின்றனர். கல்வியாலும் கீர்த்தியாலும் உத்தியோகத்தாலும் உன்னததசையிலிருந்த ஸ்ரீமான் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்

அவர்களுக்கு அம்மொழி பெயர்ப்பை அர்ப்பணஞ்செய்ய அவர்க
அங்கீகரித்ததற்குக் காரணம் காதம்பரிக்குள்ள மேன்மையு
அம்மொழிபெயர்ப்புக்குள்ள குணமுமேயாம். காதம்பரியின்
அம்முதற்பதிப்பின் பிரதிகள் ஐந்தாறு வருடங்களுக்கு முன்பே
முற்றிலும் செலவாயின. மறுமுறை இதை அச்சிட மத்தியில்
இவ்வைந்தாறு வருடங்களில் எனக்கு இயலாமற்போயிற்று. இதற்
குக் காரணம் எனது தொழிலே. இந்நூல் இத்தொழிலுக்கு
புறம்பானது. எனது வைத்தியத்தொழிலும், அத்தொழிலு
குற்ற நூல்களியற்றுவதும், அதற்குச் சம்பந்தமான மற்றப் பல
களும் பொதுவாய் ஸாஹித்ய நூல்களிற் புகச் சிலகாலமா யெனக்கு
இடந்தரவில்லை. இதற்குள்ளாகப் பல நண்பர்கள் இதை மீண்
டும் வெளியிடத் தூண்டினர். வேறு பல பண்டிதர்கள் மாணாக்
கருக்கு முதவும்படி வர்ணனைகளைச் சுருக்கிப் பிரசுரிக்கவேண்
மென்றனர். இஃதனைத்தையும் ஆலோசித்து இப்பொழுது இ
பதிப்பை வெளியிடலானேன். இம்மொழிபெயர்ப்பில் அநேக
சீர்திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. வர்ணனைகளிற் பெரு
பான்மையும் சுருக்கப்பட்டன. வாக்கியங்களெல்லாம் எளிதாக்க
பட்டன. மிகவும் இனிய சில வர்ணனைகள் மாத்திரம் மாற்ற
பீடாமலிருக்கின்றன. நூலுக்குள்ள மற்ற இயற்கையான அ
சங்கள் யாவும் சிறிதும் இதில் இனிமையிற் குன்றாது அமைந்
ளன. இரஸிகரான தமிழ்நாட்டினர் புராதன வடமொழி
கதையின் இப்புதிய பதிப்பைப் படித்து இன்புறுவரென
கிறேன்.

7—3—1923. மே. து.

# பிழை திருத்தம்.

குறிப்பு:—இப்புத்தகத்திலுள்ள அச்சுப் பிழைகளை இதனடியிற் குறித்தபடி தயைகூர்ந்து முதலில் திருத்திக் கொள்ளவும்.

—:o:—

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| வீற்றிருக்ரும் | வீற்றிருக்கும | 4 | 16 |
| மயிற் | மயிர்ச் | 5 | 4 |
| மேல் | மெல் | ,, | 10 |
| அக்கினி | அக்கினி | 11 | 1 |
| சம்பார் | சம்பர | 15 | 16 |
| யிருந்[illegible] | யிருந்தது | 28 | 23 |
| குற | குர | 45 | 21 |
| உனது | உமது | 58 | 19 |
| மஹாரஸரஸ் | மஹாஸரஸ் | 70 | 27 |
| பிரதக்ஷ | பிரதக்ஷி | 75 | 9 |
| குடு | குடி | 80 | 16 |
| செழித்தோங்கச்செ, | செழித்தோங்கச்செய் | 81 | 12 |
| காப்பவள், | காப்பவள் வந்து | 95 | 18 |
| யறிந்து. | யறிந்து | ,, | 19 |
| போப்வரு | போய்வரு | ,, | 23 |
| வள்து | வந்து | 96 | 3 |
| பாராட்டாது | புராராட்டாது | ,, | 12 |
| கபிஞ்ஜ | கபிஞ்ஜ | 98 | 7 |
| நீ | நீர் | 104 | 7 |
| ஜனங்கள்ள | ஜனங்களை | ,, | 23 |
| யனைத்தையும். | யனைத்தையும் | 110 | 7 |
| மொழிந்தான் | மொழிந்தாள் | 110 | 9 |
| ய[illegible]ந்தன | யடைந்தனன். | 111 | 28 |

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| மாகவும். | மாகவும் | 112 | 5 |
| அவளிடம் | அவர்களிடம் | 116 | 23 |
| பிரதீஹா | பிரதீஹார | 129 | 2 |
| இந்திராயுதம் | இந்திராயுதத் | 131 | 24 |
| புறப்பட்டாள் | புறப்பட்டான் | 134 | 2 |
| நிர்மிதத் | நிர்மித்த | 137 | 1 |
| அளிக | அளிக்க | 140 | 8 |
| அவனை | அவளை | ,, | 26 |
| பிரீது | பிரீதி | 142 | 24 |
| பெருவிற் | பெருவிர | 143 | 2 |
| இங்கு. | இங்கு | 146 | 17 |
| வந்த | வந்து | ,, | 23 |
| வீட்டு | விட்டு | 147 | 12 |
| நிறக | நிற்க | ,, | 14 |
| ஹமாச் | மஹாச் | 160 | 22 |
| முடியாதா | முடியாத | 166 | 22 |
| வியப்புற்று. | வியப்புற்று, | 167 | 9 |
| சந்திரா; | சந்திரா | ,, | 10 |
| சாஸ்தி | சாஸ்திரம் | 168 | 30 |
| பிரிங்கிரு | பிரிந்திரு | 169 | 17 |
| இத்தகைவோர்க்கும் | இத்தகையோர்க்குக் | 171 | 9-10 |
| சென்ருன். | சென்றான். | 174 | 24 |
| செய்தாள். | செய்தான் | 177 | 16 |
| கேட்டாள். | கேட்டான். | 181 | 28 |
| தவதனுய் | தவனுய் | 185 | 5 |
| தறு | று | 197 | 1 |
| குன் | குள் | 219 | 13 |
| யாகும், | யாகும் | ,, | 14 |
| ஒதிங்கி | ஒதுங்கி | 221 | 13 |

## காதம்பரியிற் குறிக்கப்படும் கதாநாயகர் முதலியவர்களும் இடங்களும்.

புருடர்:—

சந்திராபீடன்—கதாநாயகன்.
வைசம்பாயனன்—சந்திராபீடனது தோழனை மந்திரிகுமாரன்; கிளி.
சூத்திரகன்—விதிசாநகரத்து அரசன்.
குமாரபாலிதன்—சூத்திரகனுடைய பிரதான மந்திரி.
தாராபீடன்—உஜ்ஜயினீ நகரத்து அரசன்; சந்திராபீடனுடைய பிதா.
சுகநாஸன்—தாராபீடனது மந்திரி; வைசம்பாயனனுடைய பிதா.
சந்திரன்.
புண்டரீகன்—மஹாச்வேதையின் கணவன், (இருஷிகுமாரன்).
கபிஞ்ஜலன்—புண்டரீகனுடைய தோழன் (இருஷிகுமாரன்).
ச்வேதகேது—புண்டரீகனுடைய பிதா (தேவருஷி).
ஜாபாலி—வைசம்பாயனனது வரலாற்றைக் கூறும் மஹர்ஷி.
ஹாரீதன்—வைசம்பாயனக்கிளியைக் காப்பாற்றும் ஜாபாலி புத்திரன்.
சித்திரரதன்—கந்தர்வராஜன், காதம்பரீ பிதா.
ஹம்ஸன்—மற்றொரு கந்தர்வராஜன், மஹாச்வேதை பிதா.
மங்களகன்—சுகநாஸ மந்திரியின் ஸேவகன்.
வலாஹகன்—தாராபீடனுடைய ஸேனாபதி.
மாதங்ககன்—வேடர்படைத்தலைவன்.
மேகநாதன்—சந்திராபீடனது ஸேனைத்தலைவன், வலாஹக புத்திரன்.
கைலாஸன்—கஞ்சுகி.
க்ஷீரோதன்—சித்திரரதனுடைய கஞ்சுகி.
கேயூரகன்—காதம்பரியின் வீணையேந்தும் கந்தர்வகுமாரன்.
த்வரிதகன்—சந்திராபீடனுடைய பாலஸேவகன்.
திரவிடதார்மிகன்—தமிழ்ப் பூசாரி.
இந்திராயுதம்—சந்திராபீடனுடைய குதிரை.
பரிஹாஸன்—ஒரு கிளி.

ஸ்திரீகள்:—

காதம்பரீ—கதாநாயகி; சந்திராபீடனுடைய மனைவி.
மஹாச்வேதை-புண்டரீகனுடைய மனைவி; காதம்பரியின் உயிர்த்தோழி
சண்டாளகன்னிகை—சூத்திரகனிடம் கிளியைக் கொண்டுவருபவள்.
விலாஸவதி—தாராபீடனுடைய பட்டமஹிஷி.
மனோரமை—சுகநாஸமந்திரியின் மனைவி.

பத்திரலேகை—குலூதேச்வரனின் புதல்வி; சந்திராபீடனுடைய அந்தரங்க ஸகியான தாம்பூல பரிசாரிகை.
மகரிகை—விலாஸவதியின் தாம்பூல பரிசாரிகை.
குலவர்த்தனை—விலாஸவதியின் அந்தப்புரத்துத் தலைமைப்பரிசாரிகை.
முனி—கந்தர்வராஜனான சித்திரரதனுடைய மாதா.
அரிஷ்டை—மற்றொரு கந்தர்வராஜனான ஹம்ஸனுடைய மாதா.
கௌரீ—மஹாச்வேதையின் மாதாவான கந்தர்வராஜமஹிஷி.
மதிரை—காதம்பரியின் மாதாவான கந்தர்வராஜமஹிஷி.
தரளிகை—மஹாச்வேதையின் தோழி.
மதலேகை—காதம்பரியின் தோழி.
தமாலிகை—காதம்பரியின் மற்றொரு தோழி.
ரேவதி—சந்திரன் மனைவி.
மஹாலக்ஷ்மீ—புண்டரீகன் மாதா.
காளிந்தீ—காதம்பரிக்கு அருமையான ஒரு பெண் கிளி.

இடங்கள் :—

உஜ்ஜயினீ—தாராபீடனுடைய ராஜதானீ.
அவந்தீ—உஜ்ஜயினியை இராஜதானியாக வுடைய தேசம்.
விதிசை—சூத்ரகனின் இராஜதானீ.
வேத்ரவதீ—விதிசாநகரத்தைச் சேர்ந்த நதீ.
சிப்ரை—உஜ்ஜயினிக்கு அருகிலுள்ள நதி.
விந்தியாடவீ—விந்திய மலைக்காடு.
அகஸ்தியாச்ரமம்—விந்தியாடவியிலுள்ளது.
பம்பாஸரஸ்—ஜாபாலியின் ஆச்ரமத்துக்கு அருகிலுள்ள குளம்.
இலவமரம்—வைசம்பாயனன் பிறந்த விருக்ஷம்.
ஹேமகூடம்—காதம்பரீ மஹாச்வேதைகளின் இருப்பிடமான கந்தர்வ ராஜ்யத்தைச் சேர்ந்த பர்வதம்.
ஸுவர்ணபுரம்—வடதிசையில் மறவர்களின் ஒரு பட்டணம்.
அச்சோதம்—ஒரு மஹாஸரஸ்.
சந்திரப்ரபை—அச்சோதஸரஸ்ஸின் கரையிலுள்ள ஒரு சிவாலயம்.
சைத்திரரதம்—அச்சோத குளக்கரையிலுள்ள ஒரு பெரிய சோலை.
ஸ்ரீ மண்டபம்—காதம்பரீ அரண்மனையிலுள்ள கொலு மண்டபம்.
மந்தரம்—காதம்பரீ அரண்மனையைச்சேர்ந்த ஒரு சிறிய சிங்காரக்ருஹம்.
ஹிமக்ருஹம்—காதம்பரியின் அரண்மனையிலுள்ள குளிர்ச்சி பொருந்திய க்ருஹம்.
காளிகோயில்—தசபுரத்துக்கும் அச்சோதத்துக்கும் இடையிலுள்ளது.
தசபுரம்—உஜ்ஜயினிக்கு ஸமீபமாயுள்ள ஓர் ஊர்.
மஹோதயம்—சந்திரலோகத்திலுள்ள ஸபாமண்டபம்.

# முகவுரை

காதம்பரீ வெகு பண்டைக் காலத்திய வடமொழி வசன காவ்யம். 1300-ஆண்டுகளுக்கு முன் இது ஸ்ரீ பட்ட பாணன் என்னும் மஹா கவியால் இயற்றப் பெற்றது. முற்காலத்திய மஹாகவிகள் வசன நடையில் இயற்றிய காவ்யங்கள் எண்ணிக்கையிற் சிறு பான்மையன. அவற்றுள் காதம்பரீயானது பல வகையிலும் மேன்மையுற்றது. காதம்பரியின் வாக்கிய நடையை வாணாள் முடியவும் பன்முறை படித்தாலும் வெகுட்டலுண்டாகாது. அதன் பொருட்சுவையோ பின்னும் போற்றக் கூடியது. சுபாவோக்தி யென்னும் இயற்கை யமைப்புகளைப்பற்றிய வர்ணனைகளின் வனப்பைக் காதம்பரியிலன்றி வேறெவ்வசன காவ்யத்திலும் காண்பதரிது. கதையின் வரலாறோ தேனினும் இனிது. அவ்வரலாற்றை இக்கவிவாணன் வெகு விசித்திரமாய் மிக நுட்பமா யிணைத்திருக்கிறான். இதிலடங்கிய அகப்பொருட்களின் அருமை இதை ஆதியோடந்தமாகப் படிக்கும் இரஸிகருக்கே புலப்படும். 'காதம்பரீ ரஸஜ்ஞாநாம் ஆஹாரோபி ந ரோசதே'—காதம்பரியைப் படிக்கக் கையிலெடுத்தால் இரஸிகருக்கு உணவிலும் மனம் செல்லாது—என்று வெகு நாட்களாகவே வடமொழி வல்லோர் முதுமொழி யொன்று வழங்குவர். விதிசை முதலிய நகரங்களின் நாகரிகம், விந்தியாடவீ முதலான காடுகளின் காட்சி, அச்சோதஸரஸ் முதலானவற்றின் அற்புதத் தோற்றம், ஹேமகூடம் முதலானதின் மேன்மை, காளிகோயில் முதலியதிற் காணப்படும் விநோத அமைப்பு, மஹாச்வேதை முதலானவர்களின் மனோஹரமான மஹத்துவம், தமிழ்ப்பூசாரி முதலியவர்களின் விநோதக் கூற்று ஆகிய இவை முதலான வர்ணனைகளைப்படிக்கையில்,இக்கவிராயன் உலகக் காட்சிகளில் ஈடு பட்டு அனுபவத்திற் கிணங்க அவற்றைக் கூர்மையாகக் கூறுகிறா னென்கிற உண்மை வெளிப்படும்.

'ஹர்ஷ சரிதம்' என்று இந்த பட்டபாணன் மற்றொரு வசன காவ்யம் இயற்றி யிருக்கிறான். அதில் தன் சரித்திரத்தையும் இக்கவி வர்ணித்திருக்கிறான். காதம்பரியிலடங்கிய வைசம்பாயனனது வரலாற்றுக்கு இக்கவியின் சரித்திரத்தோடு சற்றேறக் குறைய ஒருமைப்

பாடு அமைந்திருக்கிறது. ஆகவே காதம்பரியின் முக்கியமான கதா பாகங்களில் ஒன்றாகிய வைசம்பாயனனது வரலாற்றை இவன் அமைத்ததாகக் கருதப்படுகிறது. இவ்வைசம்பாயனனுடைய கதைக்கு ஸுமனஸ் என்னும் மன்னவனது கதை ஆதாரமென்றும், ஸுமனஸ் என்பவனது கதையை ஒருவாறு மாற்றி இவ்வரலாற்றை வரைந்ததாகவும் கூறுகிறார்கள். இந்த ஸுமனஸ் என்பவனின் கதை, பண்டைக்காலத்திய கதைகளுக்குக் கடலெனத்தகும் ப்ருஹத்கதை யென்னும் வடமொழி நூலில் மொழியப்பட்டுளது.

மஹாகவி பட்டபாணன் அந்தணர் குலத்திலே வத்ஸ வம்சத்திலே பிறந்தவன். ‘இராஜதேவி,’ ‘சித்திரபானு’ என்பவர்கள் முறையே இவனுக்கு அன்னையும் பிதாவுமாவர். ‘சோணம்’ என்கிற ஆற்றின் மேற்கரையிலே, ‘ப்ருது கூடம்’ என்கிற பதியிலே இவன் பிறந்து வளர்ந்தது. இந்தியாவுக்கு வடபுறமாயுள்ள கான்னியகுப்ஜமென்னும் இராஜ்யத்திலே செங்கோற் செலுத்திய ‘ஸ்ரீஹர்ஷன்’ என்னும் இராஜனால் இக்கவி ஆதரிக்கப் பெற்றவன். ஆறாவது ஏழாவது நூற்றாண்டுகளுக்கு இடையே இக்கவியின் ஜீவிதகால மென்று சரித்திரக்காரருடைய கொள்கை. இந்தியாவில் 629 கி. பி. இல் ஹியௌன்த்ஸாங் (Hieoen Thsang) என்னும் சீன தேசத்து யாத்ரிகன் பிரயாணஞ் செய்தபோது, இந்த ஸ்ரீஹர்ஷனது பெயரைத் தன் யாத்திரைப் புத்தகத்திற் குறித்திருப்பதை இக்காலநிர்ணயத்திற்கு முக்கிய ஆதாரங்களில் ஒன்றாகக் கூறுகின்றனர்.

காதம்பரியை முற்றிலும் இயற்றுவதற்குள் ஸ்ரீ பட்டபாணனுக்கு ஆயுள் முடிந்து விட்டது. ‘ஜஞாஸ்யஸி மரணேந ப்ரீதிம் ++’—யான் உயிரிழந்த பிறகாவது எனது அன்பையறிவாய் ++—என்று, காதம்பரீ பத்திரலேகையினிடம் மொழியும் செய்தியைப்பற்றிய வாக்கியத்தோடு பட்டபாணன் இயற்றிய பாகம் நிற்கிறது. அவ்வளவு மட்டிலும் இயற்றியதும், தனக்கு மரணம் நேர்ந்து விட்டதாக அவ்வாக்கியத்தைக் கொண்டு மஹாகவி குறிப்பிடுகிறான் போலும். அதற்கு மேலுள்ள பாகம் பட்டபாணனின் புத்திரனியற்றியது. இவனும், நிபுணமான பொருட்களடங்கிய நிகரில்லா வாக்கின் திறமையினால் தன்னை பட்டபாணனுடைய புதல்வனென்றே நிரூபித்து விட்டான். இவற்றுள்

பட்டபாணன் இயற்றியது 'பூர்வ காதம்பரி' அல்லது 'பூர்வ பாகம்' என்றும், புத்திரனியற்றியது 'உத்தர காதம்பரி' அல்லது 'உத்தர பாகம்' என்றும் வழங்கப்படும். இப் பூர்வோத்தரபாகங்களுக்கு இடையில் கதையின் முக்கியமான அம்சம் எதுவும் முடிவு பெறவில்லை. மேலும் காதம்பரீ பத்திரலேகையினிடம் சொல்லும் செய்தி பூர்வபாகத்தின் இறுதியில் அரைகுறையாகவே நிற்கின்றது. இதைக் கொண்டே பூர்வ பாகம் எனப்படுவது உண்மையில் கதையின் ஒரு பிரகாணத்தைக் குறிப்பிடும் பாகமல்ல வென்றும், பூர்வபாகத்தின் முடி வெனப்படும் அம்சம் எழுதுகையில் பட்டபாணனுக்கு ஆபத்து நேர்ந்திருக்கு மென்றும் நாம் நிச்சயிக்கலாம். ஆனல் பூர்வபாகத்தில் கதைக்கு அடிப்படையான அம்சம் அனைத்தும் அமைந்திருக்கிறது. இப்பாகத்தில் வர்ணனை விரிவு. உத்தர பாகத்திலோ, அப்பாகத்தின் அளவுடன் கதையின் அம்சத்தை ஒத்திட்டுப் பார்த்தால் வர்ணனை வெகு குறைவென்றும், கதையின் அம்சம் அதிக மென்றும் தெரிய வரும். உத்தர பாகத்திலே கதையின் வரலாற்றில் ஒவ்வோர் அம்சமும் மிகவும் ஆச்சரியகாமாக முடிவுக்கு வருகிறது. இறுதியில் ஒன்றுகூடப்போகும் முக்கியமான கதாநாய கர்களை நூலின் ஆரம்பத்திலேயே நுட்பமாகக் கூட்டிக் கூறி யிருப்பது கவியின் அஸாதாரணமான புத்தி சாதுர்யத்தைக் குறிப்பிடுகிறது. நூலை முற்றிலும் படித்துப் பார்த்தாலே யொழிய இந்த சூக்ஷ்மம் விளங்காது. பூர்வஜன்மத்தில் ஒருவரோடொருவர் எப்பொழுதும் கூடி வாழ்ந்த தோழராயினும், உடன் பிறந்தோராகிலும், மற்ற உற்றோராகிலும் மறு ஜன்மத்தில் ஒருவரோடொருவர் எதிரில் ஸந்தித்த போதிலும், முற் பிறப்பிலிருந்த பலமான் தமது ஸம்பந்தத்தை அறியமுடியாமல் பிரக்ருதி யென்னும் மாயை கனத்த திரைச்சீலை போல் அவர்களுக் கிடையில் கவிந்திருக்கின்றது என்கிற பிரக்ருதியின் பிரபாவம் காதம்பரியில் ஆரம்பத்திலேயே திருஷ்டாந்தத்தினல் விளக்கப்பட்டிருக்கிறது.

வடமொழியிலுள்ள மூல காதம்பரியானது கதையின் அளவைக் கடந்து விரிவான வர்ணனைகளால் நிரம்பி யிருக்கிறது. இக்காலத்தில், அதிலும் வட மொழியில் விசேஷ பரிசயமில்லாத பலருக்கு அவ்வளவு வர்ணனைகளையும் படிக்கப் பொறுமையிராது. பலவிதமான சிலேடைகளடங்கிய அவ்வடமொழி வர்ணனைகளடர்ந்த வாக்கியங்

ளைத் தமிழில் முற்றிலும் எளிய நடையில் மொழி பெயர்ப்பதும் முடியாத காரியம். ஆகவே இதன் முதற் பதிப்பை மொழி பெயர்ப்பதற்கு ஸம்ஸ்க்ருதத்திலுள்ள காதம்பரீஸங்கிரஹத்தை ஆதாரமாகக் கொண்டேன். 'அபிநவ பட்டபாண' என்று தமது ஸாமர்த்தியத்திற்குத் தகுதியான பட்டப் பெயர் பெற்ற வித்வத்சிரோமணியான பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியஸ்வாமிகள் அளவிறந்த வர்ணனைகளிற் சில பாகத்தை விலக்கி, பட்டபாணனது வசனத்தைக் கொண்டே அக் காதம்பரீஸங்கிரஹம் வரையப்பட்டதென்பது பிரஸித்தம். ஸம்ஸ்க்ருத மூலக்கிரந்தத்திற் பொதிந்துள்ள வகைவகையான வர்ணனைகளின் இராசிகளைப் படிக்காத நமது தமிழ் வாசகநேயர்களுக்கு அக் காதம்பரீ ஸங்கிரஹத்தின் மொழிபெயர்ப்பான என் காதம்பரியின் முதற்பதிப்பில் அமைந்துள்ள வர்ணனைகளும் ஒரு சிறிது தெவிட்டலுண்டாக்கியதாகத் தெரிந்தது. இதை யான் சின்னாட்களாக யோசித்து, எனது காதம்பரியின் முதற்பதிப்பிலடங்கிய வர்ணனைகளில் அதிகமெனத் தோற்றிய அநேக அம்சங்களைக் குறைத்து, இப்பதிப்பை வெளியிட முயன்றேன். முற்பதிப்பிற் கடினமாகத் தோன்றிய வசனநடைகளும் எளிதாக மாற்றப்பட்டன. ஆனால் விஷயங்களிலாவது, மிக முக்கியமான வர்ணனைகளிலாவது, சொற்சுவை பொருட் சுவைகளிலாவது குறை நேரிடாவண்ணம் மற்ற அம்சங்கள் யாவும் ஒழுங்காய் அமைய பெரிதும் ஊக்கமெடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

இக்காலத்தில் நாவல்கள் என்று ஏதேதோ கதைகள் நாநாவிதமாய் வெளியாகின்றன. அவை யெல்லாம் வெகு ஸாதாரண மனிதரால் இயற்றப் பெற்றவை. அவற்றில் விசேஷமான உட்கருத்துகளும் படிப்பவரது விவேகத்தை விருத்திசெய்யக்கூடிய குணங்களும் பொருந்தி யிருக்குமென்று அறிஞர் எவரும் எதிர்பார்ப்பதற்கில்லை. பிராசீன மஹாகவிகளான ஸ்ரீ பட்டபாணன் முதலியவர்களுடைய அஸாதாரணமான அறிவுக்கும், இக்காலத்தில் நாவல் எழுதும் நாடோடிகளான மனிதரின் அறிவுக்கும் உள்ள ஏற்றத் தாழ்வைப்பற்றி நாம் பிரித்துரைப்ப தவசியமில்லை. இமயமலைக்கும் ஓர் இம்மிக்கும் பரிமாணத்திலுள்ள வித்தியாஸத்தை விளக்கிக் கூறவேண்டிய அவசியமுண்டோ? ஆகவே, ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் பட்ட

பாணன் போன்ற மஹாகவி இயற்றிய ஆக்யாயிகை (நாவல் போன்ற கதை) என்னும் காவ்யத்திற்குள்ள மதிப்பும் மஹிமையும் மற்றவைக்கு அரிது. இவ்விதமான பிராசீன காவ்யங்களிற் புறப்பொருளிலும் அகப்பொருளிலும் இரத்தினங்களைப்போலே செறிந்துள்ள குணவிசேஷங்களை வடமொழி யறியாத இரஸிகரான தமிழராது மனதிற் பதியச்செய்ய யான் கருதி, முதலிற் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு இதைச் சம்ஸ்க்ருதத்திலிருந்து மொழிபெயர்த்து வெளியிட்டேன். இதில் அமைந்துள்ள தத்துவார்த்தங்கள் யாவும் படிப்பவரின் மனதை அடாதவழிகளிற் செல்லவிடாது அறநெறியிற்றானே தூண்டுவதற்கு முற்றிலும் ஏற்றவைகளா யிருக்கின்றன. மஹாராணி விலாஸவதியானவள் புத்திரப் பேறு வேண்டி கடுங்கஷ்டங்களையும் கருதாது அரிய விரதங்களை அனுஷ்டிக்கும் விதங்களையும், மந்திரி சுகநாஸன் இளவரசாகப்போகும் சந்திராபீடனுக்கு மொழியும் விரிவான உபதேச மொழிகளையும், மஹாச்வேதை காதம்பரீ இவர்கள் தமது கணவர் நிமித்தம் அகில ஐச்வர்ய போகங்களென்ன பெற்றோர் முதலிய உறவினரென்ன அனைத்தையும் அலக்ஷ்யம் செய்து, பதிவ்ரதா தர்மமே பெண்டுகளுக்குப் பெருஞ்செல்வமெனக் காரியத்தில் விளக்கிக் காட்டும் வகைகளையும், அங்ஙனம் அவர் தமது கற்பைக் கருத்துடன் காக்கப் பெருமுயற்சி செய்ததால் இறந்துபோன கணவரும் எழுந்து வந்தன ரென்னும் விஷயங்களையும், வைசம்பாயனன் இந்திரியங்களை அடக்காது அடாதவழிகளில் மனதைச் செலுத்தியதால், தன்னைச் சேர்ந்தவரோடு கூட பல ஜன்மங்களிற் பெருந்துயரம் அனுபவிக்க நேரிட்டதென்பதையும், சிறியோர் பெரியோர் முதலியவர் ஒருவருக்கொருவர் அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கேற்ப நடந்து கொள்ள வேண்டிய மரியாதைகளின் மாதிரிகளையும் இந்நூல் விளங்கக் கூறுவதால், இனிய கதையுருவமான உதாரணங்களைக்கொண்டு அரிய குணங்களைப் போதிப்பதற்கு ஏற்ற கருவியாகிறது. அல்லாமலும் தாராபீடன் என்னும் மன்னவனும், அவன் அமைச்சன் சுகநாஸனும் தவம் புரிந்தடைந்த தனயரோடும், ஸம்ருத்தமான செல்வத்தோடும் வாழ்ந்துவா சொற்ப நாட்களிலேயே தம் அரும்புதல்வருக்கே ஆபத்து நேர்ந்திடவே, பின்னர் ஸம்ஸாரம் ஸாரமற்றதெனவும் பரலோக வாழ்வே பாழடையாப் பாக்கிய மெனவும் ஆலோசித்து, அவர், ஸகல ஐச்வர்யத்தையும் துறந்து முனிவர்களைப்போல மஹாரண்ணியம் சென்று முத்திபெறும் மார்க்கத்தைத் தேட முயன்றனர் என்று கூறுவதை நோக்கின், இது கேவலம் சிருங்காரரஸத்தைப் பிரதானமாகக் கொண்ட காவ்யமல்ல வென்பதும் புலப்படும்.

இதில் அகப்பொருளாயமைந்துள்ள முக்கியமான இன்னும் அநேகம் தத்துவாம்சங்களுள் ஒன்றையும், இந்நூலின் பெருமைப்பைப்

பற்றிய திருஷ்டாந்தமாகக் குறிப்பிட விரும்புகிறேன்.* ஜாபாலி
முனிவர் வைசம்பாயனன் என்னும் சுகத்தின் வரலாற்றை முற்றிலும்
கூறிய பிறகு, அதற்குத் தன் பூர்வஜன்மங்களின் நினைவு விளங்கத்
தோன்றியது. முதல் ஜன்மத்து ஜாதி மேன்மையினால் பயிற்சியின்
விசேஷத்தால் அதற்கு அவ்வளவு கல்வியும் பேசுந்திறமையும் உடனே
உண்டாயின ; ஆனால் ஒரு முறை தீவினையிற் ப்ரவ்ருத்தி யுண்டா
னால், அக்கர்மத்தின் கவர்ச்சியானது மாயையென்னும் பிரக்ருதி
பாசத்தினால் வலுப்பட்டு, வேறு துஷ்கர்மங்களிலும் அந்தப்
பிராணியின் மனதைத் தூண்டுவது இயல்பு. இத் தத்துவம்
வைசம்பாயனனை ஜாபாலியின் ஆச்ரமத்திலேயே, பிரக்ருதகர்ம
பந்தம் நிலைபுமளவும் இருக்கவேண்டுமெனக் கபிஞ்ஜலனைக் கொண்டு
ச்வேதகேது ஆஞ்ஞாபிக்கும் ஸந்தர்ப்பத்தில் முக்கியமாய் அடங்கியிருக்
கிறது. இக்கிளிக்கு விவேகம் உதித்திருந்தும், ச்வேதகேது ஆஞ்ஞா
பித்திருந்தும் அது பிராக்ருத கர்மபந்தம் தீருவதற்கு முன் வெளியேற
முயன்றது. இதன் கருத்தென்ன? பிரக்ருதியானது கர்மமென்னும்
வலையிற் சிக்கியவனை வேறு கர்மங்களை வலியச் செய்யத் தூண்டி ஸம்
ஸாரத்தில் உழலவிடச் செய்வது இயல்பு என்னும் உண்மை இதனால்
குறிக்கப்படுகிறது. பக்தி புரஸ்ஸரமாகத் தன்னை ஆச்ரயித்த, அல்லது
தான் அபிமானித்த புத்திமானான சீடன், தற்செயலாய் தகாத
வழியிற் செல்ல முயன்றதை யறிந்து தயாளுவான ஆசாரியன், அவனைச்
சிக்ஷித்து ருஜுமார்க்கத்தில் திருப்ப விரும்புவது நியாயம். ஆகவே ஒரு
கர்மபலனை அனுபவித்துவரும் வைசம்பாயனனை வேறு கர்மத்திற்
செல்லாதபடி தனை கூர்ந்து தடுப்பதற்கு ச்வேதகேது முயன்றார்.
இதற்கு பகவத்தனையின் உருவமே யெனத்தகுந்தவளும் ஸகல
லோகமாதாவும் முக்கியமாகப் புண்டரீகனுக்குத் தாயுமான மஹாலக்ஷ்
மியின் ('அகில ஜகன்மாதரம் அஸ்மன்மாதரம்' என்னுமாப்போலே) அவ்
யாஜ கருணை தூண்டுதலாகவும் ஆயிற்று. 'ப்ராரப்தம் பரிபுஜ்ய
கர்மசகலம் ப்ரக்ஷீணகர்மாந்தர:' என்கிறபடி, பிரக்ருதம் அனுபவிக்க
வேண்டிய வினைப்பயன் தீர்ந்த பிறகு, வேறு கர்ம பந்தத்தில் ஜீவன்
சிக்கிக்கொள்ளாமல் இந்த்ரிய நிக்ரஹாதிகளால் வெகு முன்னெச்சரிக்
கையோடு நடந்து கொள்ளவேண்டுமென்கிற தத்துவத்தை மனதிற்
கொண்டு, ஆசாரியனும் பிதாவுமான ச்வேதகேது, ப்ராரப்த கர்ம பந்தத்
திலிருந்து விமோசனமாவதற்கு அவச்யமான பிராயச்சித்தங்கள்
என்னும் பரிஹாரங்களைச் செய்ய, வைசம்பாயனனென்னும் ஜீவனத
மாதாவான மஹாலக்ஷ்மி, இதர கர்மங்களில் அதற்குப் பற்றுண்டாகாத
படி கருணையுடன் கட்டிப்போட்டாள் என்றும், இவ்விதம் வேறு வினை
களிற் பிரவ்ருத்தி யில்லாமற் செய்து விட்டே முக்தனுக்கு மோக்ஷ
ஸாம்ராஜயம் போல, வைசம்பாயனனுக்குச் சாச்வதமான ஆயுளும்

அனந்தமான ஆனந்தமும் இறுதியில் உண்டாயிற்று என்றும் ஆகிய சாஸ்திரரஹஸ்யங்கள் இதில் அகப்பொருளாய் அடங்கியிருக்கின்றன. வைதிக மதத்தை அவலம்பித்தவருக்குப் பெரும்பாலும் கர்ம விபாகம், முக்தி முதலியதைப்பற்றிய கோட்பாடுகள் பொதுவானவையே; ஆகவே இக்கவி சைவனாயிருந்தும் இப்பொதுவான சாஸ்திரதர்மங்களை இந் நூலில் உட்கருத்தாக அமைத்திருப்பதாயறிக.

'கார்யம் நிதாநாத் ஹி குணாந் அதிதே'—கார்யத்திலுள்ள குணங்கள் யாவும் மூலகாரணத்திலிருந்தே பிறக்கின்றன—என்கிற இது முதலிய இயற்கைச் சக்தியின் தத்துவத்தைப் பிராசீன கவிகளும் கருத்துடன் ஆராய்ந்துணர்ந்தனர். மஹர்ஷியின் மாசற்ற முகதேஜஸ்ஸானது மஹாலக்ஷ்மியின் மனதைக் கவர்ந்து அவளிடம பிரதிபலிக்க, அவருக்கு அனுரூபமாகப் புண்டரீகன் ஆவிர்ப்பவித்தான். ஆனால் க்ஷேத்திர தோஷம் அவனது தாதுக்களில் அதிநுட்பமாக லயித்திருந்தது. நிர்மலமான க்ஷேத்திரத்தையும் முறை தவறிய அவாவும் மோஹமும் சேர்ந்து ஒரு சிறிது மலினமாக்க, அதிலிருந்து இவன் ஜனித்தான். அவனது தாதுக்களில் லயித்திருந்த அத்தோஷம் தகுந்த காலமும் இலக்கும் நேரிடவே ஒருவாறு பரிணாமமடைந்து இவனது குணத்திலும் வெளிப்படையாக அவா மோஹம் எனப்படுகிற அதே க்ஷேத்திரதோஷத்தை விளக்கி விட்டன. அக் காம மோஹங்களுக்குப் பரிணாமகாலம் யௌவனவயது; இலக்கு யுவதியான மஹாச்வேதை. காரணத்திற்கு ஏற்றவாறே காரியமும் இருக்குமென்கிற இயற்கைத் தத்துவம் காதம்பரியின் இப் பிரகாணத்தில் திருஷ்டாந்தத்தைக் கொண்டு நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. இதில் புண்டரீகனுக்கும் மற்றவருக்கும் நேர்ந்த துன்பமெல்லாம் புண்டரீகனுடைய தவறுதலாலேயே. ஒருவன் ஒழுங்கீனமாய் நடந்தால், அவன் எவ்வகையிலும் அதற்கான பலன்களை அனுபவிப்பதும் விதிப்ராப்தம்; அத்துடன் அவனைச் சேர்ந்தவர்களையும் அக்குற்றம் ஒருவாறு தாக்குவதியல்பு. ஆகவே புண்டரீகன் பலமுறை பெருந்துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தது. இருஷிபுத்திரனான புண்டரீகனுக்கு அனுசிதமாகக் காமம் மனதிற் குடிகொண்டது; உடனே பகுத்தறிவு போய், நிர்துஷ்டனான சந்திரனிடம் அவன் சினங்கொண்டான்; அப்பால் மதிமாறுட்டமுண்டாய் தன்னைத்தீவினைகளாகும் அந்தகாரத்தில் வீழ்த்திப் பாழாக்கிக்கொண்டான். இது முக்கியமாக 'காயாத் க்ரோதோ பிஜாயதே. க்ரோதாத் பவதி ஸம்மோஹஸ் ஸம்மோஹாத் மதி விப்ரம: - - - -' என்கிற தத்துவத்தை நிலை நிறுத்துவதற்கான திருஷ்டாந்தமாகும். உண்மையில் சந்திரன் எவ்வித தவறுதலும் செய்தவனல்ல; ஆகிலும் இருஷிகுமாரனது சாபச் சொல் வீணாகுதென்கிற ஸித்தாந்தத்தின்படி மதியும் மண்ணுலகில் இரு

முறை மனிதஜென்ம மெடுக்க நேர்ந்தது. ஆனால் எந்த ஜன்மத்திலும் அவனது தேக மனோநிலைமைகளில் புண்டரீகனுக்குப் பற்றியதுபோல ளத்தோஷமும் சேர்ந்ததில்லை. சந்திராபீடனுக்குக் காதம்பரியினிடம் பற்றுதலுண்டாயிற்றென்றாலும், அது அவனது குலத்திற்காவது ஆசாரத்திற்காவது பிரதிகூலமானதல்ல. அன்றியும் அவளிடம் பற்றுதலைப் பெற்றும், அவளைப் பரிக்ரஹிப்பதற்கு மனம் போனபடி விரைந்துப் பிரவ்ருத்திக்கவில்லை; உடனே அவன் தனது இதர கடமைகளையுமிழந்துவிடவில்லை; தாய்தந்தையராது கட்டளையின்றி அவன் எதையும் செய்தவனுமல்ல. முறைவழுவாத மேலான சீலங்களுக்கும் அறிவுக்கும் அழகுக்கும் முற்றிலும் உபமான புருஷனல்லவோ சந்திராபீடன்? 'வ்யதிஷஜதி பதார்த்தாந் ஆந்தர: கோபி ஹேது:' வெவ்வேறு பதார்த்தங்களை ஒன்றோடொன்று சேர்த்து வைப்பது மிகவும் நுட்பமான ஸூக்ஷ்ம காரணமாம்—என்கிற தத்துவத்தை இந்திராயுதம், பத்திரலேகை, சந்திராபீடன் முதலானவர்களுக்கு அன்யோன்னியம் ஏற்பட்ட ப்ரீதி ஸம்பந்தமும், வைசம்பாயனனுக்கு அச்சோதஸரஸ்ஸின் கரையின் லதாமண்டபத்திலும் மஹாச்வேதையினிடமும் அவனையுமறியாது தோன்றிய அகற்ற வியலாத அவாவும் விளக்குகின்றன. மேலும் மஹாச்வேதையின் கற்பைப்பற்றி நாம் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். மஹாச்வேதை மஹாபதிவ்ரதை; அழகில் அஸாதாரணமானவள்; இளவயதிலும் மனதையடக்கி முனிவரைப் போல யமநியமங்களை யனுஷ்டிக்கும் மனோதிடத்தைப் பெற்றவள். இவ்வள விருந்தும் திடமான ஸத்துவ குணமமையாத புருஷனைக் கணவனாக வரிக்க நேர்ந்தது. இவளைக் கண்ட க்ஷணத்திலேயே முனிவருக்கு இயல்பான தைரியத்தை விட்டு, விவேகத்தை யிழந்த புருஷனது குணத்தை இவள் தெரிந்துகொண்டும், தானும் விவேகமிழந்து அவனிடம் ஆவல்கொண்டு, தன் தைரியத்தைத் துறந்தது அவ்வளவு யுக்தமல்லவெனக் கருதியவன் போல பட்டபாணன் இந்நூலை மஹாச்வேதையின் பெயரால் அழைக்க விரும்பவில்லை போலும். ஸ்த்ரீகளுக்கு விசேஷமாய் அவச்யமான உத்தம குணங்களை இந்நூலைக் கொண்டு இக்கவி கற்பிக்க வெண்ணினான் எனக் கருதுகிறேன். காதம்பரீ கற்பில் தேர்ந்தவள்; உத்தம கந்தர்வஸ்த்ரீ; பகுத்தறிவைப் பெற்றவள். கல்வியில் தேர்ந்தும் குணங்கள் நிரம்பியும் குற்றமற்றவனுமான கணவனை வரித்தவள் காதம்பரீ. கதாநாயகனான சந்திராபீடனுக்கு எல்லா விதத்திலும் ஏற்ற நாயகியா யமைந்த இவ்வுத்தமியின் பெயரையே இந்நூலுக்கிடுவது மஹாகவிக்கு இனிதெனத் தோற்றியது.

மே. துரைஸ்வாமி ஐயங்கார்.

ஸ்ரீ

# காதம்பரீ.

## பூர்வ பாகம்.

முன்னொரு காலத்தில் மாளவதேசத்தில் அரசரனை வரது சிரங்களால் தொழுதாதரிக்கப்பெற்ற தனதாணையை யுடையவனும், நாற்புறமும் மாலைபோல் கடல்களால் சூழப்பட்ட பூமியனைத்துக்கும் அதிபதியும், பராக்கிரமத்தாலும் பிரீதியாலும் தன் பாதத்திற் பல சிற்றரசர்களாற் பணியப்பெற்றவனும், மிகவாச்சரிய காரியங்களைச் செய்பவனும், யாகங்களையனுஷ்டிப்பவனும், ஸகல சாஸ்திரங்களுக்கும் கண்ணாடி போன்றவனும், கலைகளுக்கெல்லாம் உற்பத்தியிடமும், நற்குண மனைத்துக்கும் குடியிருக்கும் அகமும், ரஸிகர்களுக்கெல்லாம் ஆதாரமானவனுமான சூத்திரகன் எனப் புகழ்பெற்ற வேந்தனொருவன் இருந்தான்.

இவனது மனத்தில் தர்மதேவதையும், சினத்தில் இயமனும், குளிர்ந்த எண்ணத்திற் குபேரனும், ஆண்மையில் அக்கினியும், புயத்திற் பூமியும், கண்ணிற் கமலையும், வாக்கில் வாணியும், முகத்தில் மதியும், வன்மையில் வாயுவும், அறிவில் அமரகுருவும், அழகில் அனங்கனும், ஒளியிற் கதிரவனும் குடிகொண்டிருந்தமையால் இவ்வரசன் ஸர்வதேவதாஸ்வரூபியான விச்வரூபம் வாய்ந்த ஸ்ரீமந்நாராயணனை யொத்திருந்தனன்.

ஜயகுஞ்ஜரங்கள் விழுந்தமிழ்ந்தி நீராடுவதால் அவற்றின் கும்பஸ்தலங்களினின்று கலந்து கரைந்துவிடும் ஸிந்தூரங்களால் ஸந்தியாகாலத் தச் செவ்வானம்போல் சிவந்த ஜலத்தையுடைய வேத்திரவதீ யென்கிற நதியினால் சூழப்பெற்ற விதிசை யென்னும் நகரம் அவ்வேந்தனுக்கு இராஜதானியாகவிருந்தது.

இவ்வரசன் அகண்ட பூமண்டலத்தையும் வென்றது பற்றி சிந்தையேதுமற்றவனாய், புயத்தினால் வளையைப் போல் மிகவெளிதாகவே இப்புவனபாரத்தை வஹித்துவந்தான். பிருஹஸ்பதியையும் இகழ்கின்ற மதிமகிழ்ச்சி வாய்ந்தவரும், அநேக குலவரிசையாய் அமர்ந்தவரும், நீதிநூல்களை நன்காராராய்ந்துணர்ந்ததால் மாசற்ற மனத்தையுடையவரும், அன்னியர் பொருளில் ஆசையற்றவரும், அரசனிடம் அன்பார்ந்தவரும், அனவரதமூக்கமுள்ளவருமான அமைச்சர் அவனுக்கு அமைந்திருந்தனர். மேலும் தனக்குச் சமானமான வயது வித்தை வேடமுடையவரும், அரசர்களுக்கேற்ற பரிஹாஸங்களிற் பண்டிதரும், இங்கிதக்குறிகளை யெளிதில் அறியும் வல்லமை புரிந்தவரும், சிங்கக்குட்டிகளைப் போல் எப்பொழுதும் வியக்கத்தக்க விக்கிரமத்திற்றானே விருப்பமுடையயோராயினும் வினயந்ததவறாது விவஹரிக்குந்தன்மையரும், தனது பிரதிபிம்பம் போன்றவருமான இராஜகுமாரர் அவனுக்குத் தோழராயிருந்தனர். இவ்வரசன் இவர்களோடு விநோதமாயிருந்து இளமைப்பருவத்தை வெகு நாளளவும் அவ்விராஜதானியில் மிகவும் இன்பத்துடன் கழித்தான். இங்ஙனம் இளமைப் பருவத்தில் இருந்தும், சிறந்தஸௌந்தர்யம் வாய்ந்தும், அவன் ஐம்புலன்களையும் அடக்கியாளுந்தன்மையனும், மஹாஸத்வம் அமர்ந்தவனுமானதால் பெண்டிரைப் பேதையராகப் பாவித்தவனாய், இவ

னுக்கு ஸந்தானம் வேண்டுமென விரும்பும் அமைச்சர்களால்வேண்டப்பட்டும் இவனுக்கு மாதர்களின்மீது மனவெறுப்புண்டானதுபோலும். அழகும் அடக்கமும் குலமும் குணமும் அமைந்த இருதயத்தைப் பறிக்கும் அந்தப்புரத்தேவிமார் இருப்பினும், அவன் சிலநேரம் மிருதங்கமடித்து ஸங்கீதப் பிரஸங்கம் செய்தும், சிலவேளை வேட்டையாடியும், சிலகாலம் காவ்யப்பிரபந்தமியற்றியும், சில ஸமயம் சாஸ்திரவிசாரம் செய்தும், சிறிதுகாலம் சித்திரமெழுதியும், மற்றுஞ் சில ஸமயங்களில் தனது தரிசனத்திற்காக வந்த தபோதனர்களின் தாள்களைப் பணிந்தும், பெண்டீர்பால் பராமுகமாகவே பகற்பொழுதைப் போக்குவான் ; இவ்வாறு பற்பல பரிஹாஸங்களிலும் கிரீடைகளிலும் கைதேர்ந்தவர்களான தோழருடன் சேர்ந்தே பகலைப்போல் இரவையும் கழிப்பான்.

இங்ஙனமிருக்கையில் ஒருக்கால் ஆதித்தனுதித்து ஆகாயத்திற் சிறிது தூரத்தில் தோன்ற, மாதர்களின் வழக்கத்திற்கு மாறாக இடையின் இடதுபுறத்தில் தொங்கும் வாளாயுதத்தினால் தயங்கவும் மயங்கவுந்தகுந்த தனதுருவத்தையுடையவளாகிய வாயிற்காப்பவள் ஒருத்தி ஆஸ்தானமண்டபத்தில் வீற்றிருக்கும் அரசன் பக்கலில் வந்து, பூமியில் முழந்தாளிட்டுப் பணிந்து இவ்வாறு விண்ணப்பம் செய்தாள்:—“தேவ! மாதங்க ஜாதியிலுதித்த மாதொருத்தி, கிளியொன்றைக் கூட்டிலடைத்தெடுத்துக்கொண்டு தென்தேயத்திலிருந்துவந்து அரண்மனைவாயிலில் இருக்கின்றாள். அவள் தேவலோகத்திற்குத் தன்து தேகத்துடன் ஏறிய திரிசங்குவினிடம் சினங்கொண்ட தேவேந்திரன் தனது ஹுங்காரத்தால் புவியில் தள்ளிய அத்திரிசங்குவின் இராஜலக்ஷ்மியோவெனத்தோன்றுகிறது. அவள் தேவனிடம் கேட்டுக்கொள்வதாவது:—‘உலகத்து இரத்தி

னங்கள் அனைத்துக்கும் கடல்போல், அரும் பொருளுக்கெல்லாம் பிரபுவே பிரதான பாத்திரம் ; இப்பறவையோ மிகவும் ஆச்சரியகரமானது, உலகத்திற்கே உயர்ந்த இரத்தினம் போன்றது என்று எண்ணி பிரபுவின் பாத மூலத்திற்கு அதை யெடுத்துவந்து தமது தரிசனத்தினலான பேரின்பத்தைப் பெற விரும்புகிறேன்' என்பதே ; இதைச் செவியுற்றுப் பிரபுவினது சித்தம்'' என மொழிந்தொழிந்தனள். வேந்தனும் அத்தருணம் ஆவனுடன் கூடியவனாய் அருகிலிருக்கும் அரசர்களின் முகங்களையுற்று நோக்கிவிட்டு, 'குற்றமென்ன ? அவளை வரச்செய்' எனக் கட்டளையிட்டான்.

உடனே வாயிற்காப்பவள் எழுந்துபோய் அம்மாதங்கமாதை அழைத்துவந்தாள். அம்மங்கையும் உள்ளே சென்று, ஆயிரக்கணக்கான அரசர்களின் மத்தியில் ஓர் மண்டபத்தில் சந்திரகாந்தக்கற்களிழைத்தச் சிறியதோர் மஞ்சத்தில் வீற்றிருக்கும் மன்னவனைக் கண்ணுற்றாள்; அம்மண்டபத்திற்கு நாற்புறமும் பெருத்த நல்முத்துச்சரங்கள் ஊசலாடின ; தங்கச்சங்கிலிகளால் தொடுக்கப்பெற்ற மணிமயமான நான்கு கால்களின் மேல், ஆகாசகங்கையினது நுரைகளின் திரள்கள்போல் வெண்மை நிறமானதும், அதிக பெரிதல்லாததும், வெண்பட்டு மயமுமான மேற்கட்டு அமைக்கப்பெற்றிருந்தது ; பொற்பிடிகளுள்ள பல சாமரைகள் வேந்தனுக்கருகில் வீசப்பட்டன. அவன் அமுதத்திரள் போன்றனவும், கோரோசனையால் சித்திரிக்கப்பட்ட ஆண் பெண்களான அன்னப்பறவைகளுடன் கூடிய ஓரங்களையுடையனவும், மெதுவாகச்சாமரைக்காற்றால் அலைக்கப்பெற்ற அழகிய தலைப்புகளையுடையவையுமான இரண்டு வெண்பட்டு உடைகளை உடுத்துக்கொண்டிருந்தான்; அவனது மார்பு மிகப்பரிமளம்

பொருந்திய சந்தனப்பூச்சால் வெளுத்திருந்தது ; அப்பூச்சின்மேல் குங்குமப்பொட்டொன்றும் விளங்கிற்று; நிர்மலமான வெள்ளித்தகடுபோன்றதும், அகன்றதும்; ஊர்ணை யென்கிற மயிர்ச்சுழியுடன் கூடியதுமாய் அவனது நெற்றிக்கட்டு துலங்கிற்று ; அவன் அளவற்ற பரிவாரங்களையுடையவனாயிருந்தும் * அத்விதீயனாகக் காணப்பட்டான்.

அம்மாது அரசனைப் பார்த்துவிட்டு தூரத்திலிருந்தவாறே, தனது வரவை அவனுக்கு அறிவிக்குமாறு மூங்கிற்றடியினால் அச்சபையின் தரையை ஒருமுறை மேல்லென அடித்தனள். அச்சிறு ஒலியினால் அங்கிருந்த அரசரது கண்கள் அனைத்தும் வேந்தனிடமிருந்து ஒருமிக்க அம்மங்கையின்பால் திரும்பின.

பிரபுவும் பிரதீஹாரியால் 'அதோ பாருங்கள்' எனக் காட்டப்பெற்ற அச்சண்டாளகன்னிகையைக் கண்டான். யௌவநமெல்லாம் நீங்கியும் அன்வரதமும் செய்யும் சரீர வுழைப்பினால் தளர்ச்சியடையா தேஹக்கட்டுகளையுடையவனை கிழவனொருவன் முன்செல்ல, இங்குமங்கும் அலைந்தாடும் காகபக்ஷமென்னும் பக்கக்குடுமியையுடைய ஒரு சண்டாளச்சிறுவன் கனகமயமான கம்பிகளால் ஆக்கப்பெற்ற கிளிக்கூடொன்றை யெடுத்துக்கொண்டு பின்தொடர, குதிகால்மட்டும் தொங்கும் கருநிறமான கஞ்சுகம் அணிந்து சிரஸ்ஸில் சிவப்புத் துகிலொன்றால் முக்காடணிந்து, இடையில் அரைநூண்மாலை அணிந்து, கண்டத்தில் மிகப் பருமனான நல்முத்துச்சரம் பூண்டு, நூதன யௌவனப் பருவத்துடன் கூடி வியக்கத்தக்க வடிவழகு வாய்ந்தவளான அம்மாதை அரசன் இமைகள் அசையாமற் பார்க்கலானான்.

* அத்விதீயன்:—ஸஹாயமில்லாதவன், ஒப்பற்றவன்.

அத்தருணம் ஆச்சரியபரவசனான அம்மஹீபதி இங்
ஙனம் ஆலோசிக்கலானான்:—'ஓகோ! பிரம்மதேவன்
தகாத விடத்தில் ரூபநிர்மாணம் செய்தானே! ஆம்; இவளை
அழகினால் உலகிலுள்ள மற்றவர் ரூபமனைத்தையும் இகழக்
கூடியவாறு அவ்வளவு மேன்மையாகப் பிறப்பித்தானே;
இவளை இங்ஙனம் பரிசிக்கவொணாத பஞ்சமகுலத்தில்
ஏன் படைக்கவேண்டும்! நான் எண்ணுகிறேன்; பஞ்சம
ஜாதியைப் பரிசிக்கத் தகாதென்றெண்ணி கரத்தினால்
தொடாமலே இவள் ஸ்ருஷ்டிக்கப்பட்டாள்; இல்லையேல்,
இவ்வடிவழகுக்கு வாட்டமென்பது சிறிதும் இங்ஙனம்
இல்லாதிருப்பதேன்? கரங்கள் பட்டுக் கசங்கிய அங்கங்
களுக்கு இத்தகைய காந்தி பொருந்தியிராதன்றோ?' என்
றும் இன்னும் பலவாறாகவும் சிந்தித்தான். இங்ஙனமிருக்
கையில், வேந்தனை அச்சிறுமியும் அலங்காரமாகக் காதில்
அணிந்திருந்த அழகிய தளிர் தளர்ந்து சற்றுக் கீழே நழுவ
வெகு பெருந்தன்மையோடு பணியலானாள்; அவள் அடி
பணிந்து மணிமய மேடையின்மீது உட்கார்ந்ததும், கூட
வந்த கிழவன் கூட்டிலிருந்தவாறே அக்கிளியை ஏந்திக்
கொண்டு சற்றருகிற் சென்று அரசனுக்கு முன். ஆதரத்
துடன் வைத்துச் செப்பியதாவது:—

'மஹா பிரபோ! இக்கிளி ஸகலசாஸ்திரங்களின்
பொருட்களையும் போதுமாறு அறிந்தது; ஸங்கீத சாஸ்
திரமுணர்ந்தது; காவ்யம், கதை, நாடகம் முதலிய பற்
பல பிரபந்தங்களைக் கற்றதும், அவற்றைத்தானே இயற்
றும் வல்லமையும் வாய்ந்தது; யானை, குதிரை, ஸ்த்ரீ, புரு
ஷர்கள் இவர்களுடைய இலக்ஷணங்களையறியும் திறமை
பொருந்தியது; சுருங்கச்சொல்லில் இது உலகத்திற்கே
இரத்தினம் போன்றது; வைசம்பாயனன் என இதற்குப்
பெயர். இரத்தினங்களுக்கெல்லாம் ஸாகரம்போல் அடை

தற்கரிய அரும்பொருள் அனைத்துக்கும் அரசனே அருகரெனக் கருதி, எங்கள் யஜமானனது புதல்வி தமது பாதமூலத்திற்கு இதை யெடுத்துவந்தாள்; ஆகையால் தம்முடையதாகவெண்ணித் தாம் இதை ஏற்கவேண்டும்' எனப் பகர்ந்து, பஞ்ஜரத்தைப் பூபதிக்கு முன்னிலையில் வைத்துத்தூர விலகினன்.

அவன் அப்புறம் போனதும் அப்பறவையரசு பாராளும் வேந்தனுக்கு எதிராகத் திரும்பி, தனது வலது காலைப் பணிவுடனெடுத்து, அரசனை நோக்கி மிகத் தெளிந்ததும் தேர்ந்ததுமான, ஸ்வரத்தோடும் எழுத்தோடும் ஜயசப்தம் மொழிந்து, வடமொழியில் அடியில் வருமாறு பொருள்பட்ப பாடியது:—

* "தரணியாளும் தேவா! தமது பகைவரது மங்கைகளின் கொங்கைகள் இரண்டும் கண்ணீர் அருவிதனில் நீராடி, மனத்துயரழலைக்கு அருகிலிருந்தவாறு, அம்பூண் ‡ அகற்றி, அருந்தவம் அனுட்டிப்பது போலும்." என்றவாறு.

அது கேட்டு அரசன் ஆச்சரியப்பட்டு, அடங்காமகிழ்ச்சியுடன் அருகில் அமர்ந்திருந்த அந்தணர்குலத்துதித்வரும், அகில அமைச்சருக்கும் தலைவரும், வயது முதிர்ந்தவருமான குமாரபாலிதன் என்கிற மந்திரியை நோக்கி மொழிந்ததாவது:—

'இப்பறவை மிகத்தெளிவாக எழுத்துக்களை உச்சரிப்பதையும், இதன் இனிய தொனியையும் கேட்டீர்களா? முதலில் ஒழுங்கு தவறாது நெடில் குறில் முதலி

---

* "ஸ்தநயுகமச்ருஸ்நாதம் ஸமீபதரவர்தி ஹ்ருதயசோகாக்நே:|| சரதி விமுக்தாஹாரம் வ்ரதமிவ பவதோ ரிபுஸ்த்ரீணம்||"

‡ அம்பூண், அம்=அழகிய, பூண்=ஆபரணம்; அம்பு=நீர் ஊண்=உணவு இவைகளை அகற்றி.

யதை நேர்மையாய் உச்சரித்துத் தெளிவாகப் பேசுவதே வியப்புறத் தக்கது; அதிலும் படித்துப் பயிற்சிபெற்ற புருடனைப் போல் பக்ஷிஜாதி பக்ஷமுள்ளவரிடம் பகுத்தறிவுடன் தன் பிரீதியைப் பிரகாசப்படுத்துவது பின்னும் ஆச்சரியமல்லவா? பெரும்பாலும் பறவைகளும் பசுக்களும் பயம், ஆஹாரம், நித்திரை, சில குறிகள் இம்மாத்திரம் அறிந்தவைகளாயிருக்கின்றன; இப்பறவையின் விஷயமோ வெகுவிசித்திரம்' என்றான் மன்னவன். அதுகேட்ட குமாரபாலிதன் சற்றுப் புன்னகை புரிந்து பின்வருமாறுரைத்தான்;—'தேவ! இதிலென்ன வியப்பு? சுகம் சாரிகை முதலிய பறவையினங்களுக்குச் செவியுற்ற விதமே செப்புந்திறமையுண்டென்பது தங்களுக்குத் தெரிந்ததே; மேலும் முற்பிறப்பிற் பயின்ற வாஸனையினாலோ, மனிதர் முயற்சியினாலோ இத்தகைய தேர்ச்சி உண்டாகின்றதென்பதில் வியப்பேதும் விசேஷமாயிலது. அன்றியும், பூர்வகாலத்தில் புருடரைப்போல் இப்பறவைகளுக்கும் செவ்வெனச் செப்புந்திறமையிருந்ததுண்டு. அக்கினி சாபத்தினால் கிளிகளுக்குப் பேசும் திறமை போய்விட்டது; அங்ஙனமே யானைகளுக்கும் நாவின் மாறுபாடுண்டாயிற்று' என்று அமைச்சன் மொழிந்துகொண்டிருக்கையில், நடுப்பகலில் ஊதப்படும் சங்கின் முழக்கமும், நாழிகைகளின் முடிவில் அடிக்கப்படும் பேரிகைகளின் பேரொலியும் ஆகாயத்தை அளாவியது. அதுகேட்டு அக்கோமானும் நீராடுவதற்காகக் கொலுவிருக்கும் மண்டபத்திலிருந்து எழுந்தனன். பின்னர் மற்ற அரசர்களும் ஆஸ்தான மண்டபத்திலிருந்து அவரவரது வாஸஸ்தலங்களுக்கு எழுந்தேகினர்.

பின்பு சூத்திரகன் 'இளைப்பாறலாம்' என அச் சண்டாள கன்னிகைக்கு மொழிந்து, தாம்பூலத்தட்டு தாங்கு

பவனைநோக்கி "வைசம்பாயனனை அந்தப்புரத்திற் கெடுத்துப்போ" எனக் கட்டளையிட்டு, மிகவும் ஆப்தர்களான சில இராஜகுமாருடன் அரண்மனைக்குள் சென்றான். அங்கு அணிகள் அனைத்தையும் அகற்றி கிரணங்கள் நீங்கிய கதிரவன்போலத் தோற்ற கெரடியாடும் இடத்திற்கேகினான்; அவன் அங்கு சில இராஜகுமாருடன் சில நேரம் சிலம்பம் பழகினான். உடனே, அக்காலை அதிகஜன நெருக்கம் இல்லாதிருப்பினும், அரசனது அகத்தில் ஆட்களை விலக்கும் அதிகாரத்தைக் கடமையாகச் செலுத்தும் கட்டியக்காரர்கள் வழிகாட்ட நீராடச் சென்றான். அங்கு நறுமணம் நிறைந்த தண்ணீர் ததும்பும் தங்கத் தொட்டியொன்று வைக்கப்பட்டிருந்தது; அதன் பக்கத்திற் படிகச் சிலையாற்செய்த ஓர் ஸ்நாநபீடம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது. மிக்க பரிமளம்பொருந்திய தண்ணீர் நிறைந்த ஸ்நானகலசங்கள் ஆங்கொருபுறம் விளங்கின. அரசன் அவ்விடத்தில் மஞ்சனமாடிவிட்டு, மிகவும் மெல்லிய இரண்டு வெண்பட்டுடைகளைத் தரித்துக்கொண்டு, தலைப்பாகையணிந்து, பித்ருதர்ப்பணஞ்செய்து, மந்திரமோதி மிகப் பரிசுத்தமாகிய அர்க்கியஜலத்தால் ஆதித்தனை ஆராதித்துவிட்டு தேவாலயஞ் சென்றான். ஆங்குச் சிவபெருமானைப் பூஜித்து, ஔபாஸநம் முதலிய சடங்குகளைச்சரிவர முடித்துக்கொண்டு, நறுமணங் கமழும் மல்லிகை மலரைச் சிரந்தனில் தரித்து, உடைகளைக் களைந்து வேறு துகில் உடுத்திக்கொண்டு, காதில் அணியும் மணியொன்றையே பூணாகவுடையவனாய், தன் கூடவிருந்து அருந்தத் தகுந்த சில பூபதிகளுடன் தனக்கு இஷ்டமான இனிய சுவைபொருந்திய உணவுகளை ஆசையுடன் அருந்தி உண்டிவினை முடித்துக்கொண்டான். பின்பு தூமபானம் பண்ணி, ஆசமநம்செய்து, தாம்பூலந்தரித்து, மணிமேடையினின்

றும் மன்னவன் எழுந்திருக்கவே, சற்றுத் தூரத்திலிருந்த வாயிற்காப்பவள் ஓடிவந்து கைலாகு கொடுக்க, அவளது கரத்தைப் பற்றிக்கொண்டு, முக்கியமான சில பரிஜனங்கள் பின்தொடரக் கொலுமண்டபம் சென்றான். அம் மண்டபமோ, அதன் பக்கங்களில் வெண்மையான வஸ்திரங்களால் திரைகள் இடப்பட்டிருந்தமையால், படிக மணி பதித்த பித்திகளால் அமைக்கப்பட்டதுபோல் தோன்றிற்று ; அம்மண்டபத்தின் தரையானது மணிமயமாகவும், கஸ்தூரிகலந்து ஸுகந்தம் வீசும் சந்தனநீர் தெளிக்கப் பெற்று குளிர்ந்து மிருந்தது ; அங்கு நாட்டப் பட்டிருந்த தங்கத்தூண்கள் செவ்வெனச் செதுக்கப் பெற்ற பற்பல பதுமைகளுடன் கூடியவைகளாகவும், ஸுகந்தமான ஜலத்தினால் கழுவப்பெற்று களங்கமற்று மிருந்தன ; அங்கு ஓர் மேடையின் மேல் மலர்களது மணத்தினால் வாஸனை யேற்றபட்ட விரிவஸ்திரமொன்று விரித்தும், தலைமாட்டில் பட்டுத்தலையணை போடப்பட்டதுமான ஓர் படுக்கையு மிடப்பெற்றிருந்தது. அரசன் அச்சயனத்தின்மீது அமர்ந்தனன். வாளேந்தும் மாதொருத்தி, தனது கத்தியை மடியின்மேல் வைத்துக்கொண்டு, பூமியில் உட்கார்ந்து, கோமளமான தனது கரங்களால் மெதுவாகப் பாதங்களைப் பணிவுடன் பிடிக்க, அந்த க்ஷணம் காணக்கூடிய மன்னவருடனும் மந்திரிமாருடனும் மித்திரர்களுடனுமாக பற்பல ஸல்லாபம் செய்து கொண்டு சற்றுநேரம் வீற்றிருந்தான். பிறகு அரசன் அக்கிளியின் விருத்தாந்தங்களை வினவ விரும்பியவனாய் சற்றுத் தூரத்திலிருக்கும் பிரதீஹாரியை நோக்கி, அந்தப்புரமிருந்து வைசம்பாயனனைக் கொண்டுவர ஆஞ்ஞாபித்தான்.

அதன் பின்னர் அவள் அந்தப்புரம் சென்று ஓர்

முகூர்த்த காலத்திற்குள்ளாகவே அக்கினியைக்கொண்டு வரச்செய்தாள். சற்றுக்கூனிய முதுகுடன் வெண்சட்டையணிந்த கஞ்சுகி பொற்பிறம்புடன் பின்பற்ற பஞ்ஜரத்திலிருந்தவாறு அக்கிளி அரசனது அருகில்வந்து சேர்ந்தது. அக்கஞ்சுகியும் புவிதனில் புயம் வைத்துப்பணிந்து, "வேந்தே! தமது உத்தீரவின்படி இவ்வைசம்பாயனனை நீராட்டி, ஆஹார மூட்டி, வாயிற் காப்பவளிடம் கொடுத்து தேவரது பாத மூலத்திற்கு தேவிகள் அனுப்புவதாக அறிவிக்கச் சொன்னார்கள்" என்று பிரபுவினிடம் விண்ணப்பம் செய்து அவன் போனதும், வைசம்பாயனனை நோக்கி, 'உனக்கு இன்பமான உனவுகள் அந்தப்புரத்தில் அளிக்கப்பட்டனவா?' என வேந்தன் வினவ, அதற்கு இப்பறவை பதிலுரைத்ததாவது:—'அண்ணலே! அங்கு நான் அருந்தாத பண்டமும் உண்டோ? மிக்க மதங்கொண்ட கோகிலங்களது கண்களின் காந்திபோல் கருஞ்சிவப்பான நற்சுவை பொருந்திய நாவற்பழங்களின் இரஸத்தைப் போதுமாறு பருகினேன்; சீறிய சிங்கத்தின் உகிர்களால் உடைக்கப்பெற்ற வெறிகொண்ட வேழங்களின் கும்பஸ்தலங்களிலிருந்து உதிரும் உதிரங்கலந்த நல்முத்துக்களின் ஒளியையுடைய மாதுளம்விதைகளைப் புசித்தேன்; தாமரையிலைபோல் பசுமையானவையும், திராக்ஷையைப்போல் மிகவும் இனிமையானவையுமான பழைய அருநெல்லிக்கனிகளை யதேஷ்டமாய் அருந்தினேன்; பலவாறு பேசுவதிற் பயனென்ன? தமது தேவிகளின் திருக்கரங்களால் அளிக்கப்பெற்றவை அனைத்தும் அமுதமாகவே இருந்தன என்று பகரும் அப்பறவையினது பேச்சை மெல்லென மறுத்து, மன்னவன் இங்ஙனம் மொழிந்தான்: 'இஃதெல்லாம் இருக்கட்டும்; நீ உனது வரலாறு அனைத்தையும் ஆதியோடந்தமாய் மொ

ழிந்து, எமதாவலைத் தீர்க்கக்கடவாய். நீ எவ்விடத்தில் எவ்வாறு பிறந்தாய்? எவர் உனக்கு இந்நாமகரணம் செய்தவர்? உனது தாய்தந்தையர் யாவர்? வேதங்கள் உனக்கு வந்ததெங்ஙனம்? சாஸ்திரங்களிற் பயிற்சி எவ் விதம் உண்டாயிற்று? எவரிடம் கலைகளைக் கற்றனை? இஃதுனக்கு ஜன்மாந்தர வாஸனையோ? அல்லது வரப் பிரதானமோ? இல்லையேல், நீ வெளியில் பறவை வேடம் பூண்டு மறைந்து வஸிக்கும் ஓர் முனிவரோ? இதற்குமுன் நீ எங்கு வஸித்தாய்? உனது பிராயம் யாது? கூட்டில் எவ்வாறு அடைபட்டாய்? சண்டாளரது ஹஸ்தத்தில் எவ்விதம் அகப்பட்டாய்? இங்குதான் எங்ஙனம் வந்தனை?' என்று ஆவல்கொண்டு அரசன் வினவ, வைசம்பாயன னும் ஒரு மூகூர்த்த நேரம்போல் ஆலோசித்து ஆதரவு டன் சொல்லத்தொடங்கியது. "ஈசனே! இக்கதையோ வெகு விரிவானது; ஆகிலும் ஆவலிருப்பின் செவியுறுவீர் களாக:—

"கிழக்கு மேற்குக் கடற்கரைகளைக் குருக்காய் அளா விக்கொண்டு, மத்தியதேசத்திற்கு * அலங்காரமான புவி யின் அரைஞாண் மாலைபோன்று விந்தியாடவீ யென்று பெயர்பெற்ற காடொன்றுண்டு. அஃது மிகவும் உன்னத மானவையும், ஆனதுபற்றி அவற்றின் சிகரங்களிற் சிந் கிய தாரகைக் கூட்டங்கள்போல் தோற்றும் மலர்களின் திரள்களைத் தலையால் தாங்குகின்றவையுமான விருக்ஷங்க ளால் விளங்கிற்று; மதுபானம் செய்த மதத்தினுற் சிவ ந்த கேரளதேயத்து மாதரது கபோலங்கள்போல் கோம ளமான காந்தி பொருந்தியவையும், அங்குமிங்குந் திரியும் வனதேவதைகளது சரணங்களிற் சாத்திய செம்பஞ்சுக்

---

* மத்தியதேசம்—'ஆர்யாவர்த்தம்' என்கிற ஓர் பிரதேசம்; பூமியாகிற ஸ்த்ரீயின் 'இடை' யென்று மற்றொரு பொருள்.

குழம்பினால் சிவக்கச் செய்தவைபோல் தோற்றுபவையுமான இளந்தளிர்கள் இடைவிடாது அவ்வடவியில் அடர்ந்திருந்தன ; அவ்வடவியில் அடங்கிய தண்டகாரண்ணியத்திற்கு இடையில் பூவுலகெங்கும் புகழ்பெற்றதும், தர்ம தேவதைக்குப் பிறப்பிடம் போன்றதும், கோதாவரியென்னும் புண்ணிய நதியினால் சூழப்பெற்றதுமான அகத்தியமாமுனிவரது ஆச்ரமம் ஒன்றுண்டு. அங்கு மேன்மை தங்கிய அகத்தியமாமுனிவருடைய மனைவியான லோபாமுத்திரை யென்பவள், தானாகவே பாத்திகட்டித் தன் கரங்களால் தண்ணீர் ஊற்றிப் புதல்வரைப்போல் வளர்த்த விருக்ஷங்கள் பல விளங்கின. பலாசதண்டந் தரித்து தொன்னையேந்தி பர்ணசாலைதோறும் பிக்ஷை யெடுத்து, விரதமனுட்டிப்பவனான திருடதஸ்யுவெனப் பெயருடைய அவர்களது புதல்வன் அப்பிரதேசத்தைப் பரிசுத்தமாகச் செய்து கொண்டிருந்தனன். இங்கல்லவோ முன்பு பஞ்சவடி யென்னும் ஓர் இடத்தில் தசரதரது சொற்களைச் சிரமேற் கொண்டு வேற்று ஸ்ரீராமன் அகத்தியமாமுனியின் அடிபணிந்துகொண்டு, இலக்ஷ்மணரால் அமைக்கப் பெற்ற அழகிய பர்ணசாலையில் ஸீதையுடன் ஸுகமாகச் சிலகாலம் வஸித்தனர்.

வெகு நாட்களுக்குமுன் நடந்த விருத்தாந்தங்களை யிப்பொழுதும் விசதமாக விளக்குவதான அவ்வகத்தியாச்ரமத்திற்கு அருகில் கடல்நீர் அனைத்தையும் அருந்திய அகத்தியரிடம் பொறுமைகொண்ட வருணபகவானால் ஏவப்பெற்ற பிரம்மதேவன் அவரது ஆச்ரமத்திற்கு அருகில் உற்பத்திசெய்த மற்றொரு மஹாஸமுத்திரமெனத் தகும், மிகவும் ஆழமானதும், நீருக்கு நிதிபோன்றதும், நிகரில்லாததுமான பம்பை யெனப் பெயர்பெற்ற பங்கயப்பொய்கை யொன்று இருக்கிறது. அக்குளத்தினில்

தாமரைமலர்களது மதுவையருந்தி, மதம்பட்ட காரன்னப் பேடுகள் கலகலவென்று அழகாய் ஆர்ப்பரிக்கின்றன; காற்றினால் எழுப்பப்பெற்ற அலைகளிலிருந்து கிளம்பும் திவலைகள் மாரிகாலத்தைத் துவக்குவனபோல் தோற்றுகின்றன; ஒருபுறம் இறங்கும் இருஷிஜனங்கள் ஜலம் நிரப்பும் கமண்டலங்களிலிருந்து தோன்றும் இனியதொனியால் மனோஹரமாயிருக்கின்றது; கொடிவீடுகளிலிருந்து கூத்தாடும் மயில்கூட்டங்களுடன் கூடியதும், பலவகையான புஷ்பங்களின் பரிமளங்களைப் பரவச் செய்வதுமான வனத்தின் வரிசையால் நாற்புரமும் அத்தடாகத்தின் தடம்தழுவப்பட்டிருக்கின்றது. அத்தாமரைக் கயத்தினது பச்சிமதீரத்தில் வனதேவதைகளுக்கு உலகமெல்லாம் காண்பதற்கான உப்பரிகைபோன்றதும், தண்டகாரண்ணிய மரங்களுக்கெல்லாம் அதிபதிபோலிருப்பதும், முதிர்ந்தது மான மிகப் பெரிய இலவமரம் ஒன்றுளது. இம்மரத்தின் அடித்தண்டில் திக்கஜங்களது துதிக்கைக்குத் துல்லியமான மலைப்பாம்புகள் சுற்றிக்கொண்டிருக்கும்; அது பார்ப்பதற்கு மரத்தைச்சுற்றிலும் பெரியதோர் பாத்திகட்டப்பட்டதுபோல்தோன்றும். இவ்விருக்ஷத்தின் கிளைகள் பலதிசைகளிலும் வெகுநீண்டு பரவியிருப்பதை நோக்குங்கால், பிரளயகாலத்தாண்டவத்தில் நாற்புறங்களும் பரப்பிய பல்லாயிரம் புயங்களையுடைய நடராஜனை நொடிப்பதற்கு அம்மஹாவிருக்ஷம் ஓங்கியிருப்பதுபோல்புலப்படும்; ஆகாயமார்க்கத்தில் உலாவும் கார்மேகத்திரள்கள் சற்று நேரம் ஜலச்சுமையால் அதன் கிளைகளின் இடைகளில் வந்து தங்குகின்றன; ஆனால் அம்மேகங்களாலும் காணப்பெறாத தனது சிகரத்தையுடையது அவ்விருக்ஷம். அதிக உன்னதமான அம்மரத்தில் சாகைகளது சிகரங்களிலும், இலைகளின் இடைகளிலும், கிளைகளின் ஸந்திகளிலும்,

நாட்பட்ட மரப்பட்டைகளின் சந்துகளிலும், பல்லாயிரம் பொந்துகளிலும் ஸங்கியையின்றி விசாலமான இடை வெளிகள் இருந்தமையால், கிளிக்கூட்டங்கள் அவற்றில் கூடுகளை அமைத்துக்கொண்டு, பற்பல தேயங்களிலிருந்தெல்லாம் வந்து பயமின்றி தங்கி வஸித்தன. அம்மரம் மிக்க முதிர்ந்திருப்பதால் உதிர்ந்துபோய் அங்குமிங்குமிருக்கும் சொற்ப இலைகளையுடையதாயிருந்தும், வந்தடைந்துள்ள கிளிக்கூட்டத்தினால் இடைவிடாது இலைத்திரளால் ப்சுமையாகவே இருப்பதுபோல் பார்க்கப்படும். அக்கிளிகள் அம்மரத்தினில் தமது கூடுகளில் ஒவ்வோர் இரவையும் கழித்து, காலையிலெழுந்து, ஆகாயத்தை வானவில்லுடன் கூடியது போல் செய்து கொண்டு இரை தேடும் பொருட்டு வானந்தனில் வரிசையாய் உலாவும். அவை ஆங்காங்கு உணவுகளை உண்டு, திரும்ப வந்து, கூடுகளிலுள்ள தம் குஞ்சுகளுக்குக் கனி ரஸங்களையும், சம்பாக்கதிர்களின் பிஞ்சான தானிய மணிகளையும் மூக்கினால் ஊட்டியூட்டி, ஒப்பற்ற ஆசையினால் அக்குஞ்சுகளை அணைந்துகொண்டு இரவுகளைக் கழித்துவந்தன.

அம்மரத்தின் வெகு பழைய பொந்தொன்றில் இல்லாளுடன் இருந்து வந்த என் தந்தைக்கு, அந்திமவயதில் ஏதோ விதிவசத்தால் நான் ஒரு ஆண்குஞ்சு பிறந்தேன். என்னைப் பெறும்போது பொறுக்கமுடியாது உண்டானப் பிரஸவ வேதனையால் எனது அன்னை ஆவி துறந்தது. என் பிதாவோ மனைவியின் மரணத்தினால் மிகப்படபடப்புடன் பொங்கியெழும்பும் சோகத்தை உள்ளடக்கிக் கொண்டு, எனதிடமிருந்த பிரீதியினால் என்னைக்காப்பாற்றுவதில் தானே கருத்தாயிருந்தது. மிகவும் வயது சென்றுவிட்டமையால் தோள் செரிந்து, உடல் ஸ்வாதீனமற்று, சிறகுகள் சிதறியிருந்தனவாகையால், அது நன்கு எழும்பிப்

பறக்கும் திறமை யிழந்துபோயிற்று. அங்கங்களுக்கு அதிக அஸௌகர்யத்தை அளிக்கும் தனது மூப்பை உதரிவிடுவதற்கு விரும்பியதுபோல் அதற்கு உடலில் உதறல் உண்டாயிற்று. ஆகவே பறந்தோடப் பலமற்ற என் பிதா, தேய்ந்து விரிந்த முனையையுடைய தன் அலகினுல் மற்றப் பறவைகளினது கூடுகளிலிருந்து கீழே இறைந்து கிடக்கும் சம்பாக் கதிர்களிலிருந்து நொய்யரிசிகளை அடிக்கடி யெடுத்துவந்தும், கிளிக்கூட்டத்தால் கோதியெறியப் பெற்று மரத்தடிகளிற் சிதறியிருக்கும் கனிகளின் கணங்களைப் பொருக்கி வந்தும் எனக்குக் கொடுக்கும். தினந்தோறும் நான் உண்டு மிகுந்த உணவையே அது அருந்தி வந்தது.

இங்ஙனமிருக்க ஒருக்கால் விடியற்காலம் நெருங்கிற்று. திசைகள் யாவும் விசாலமாய் விரிவையடைந்தன. கானகமானது உதயகிரி சிகரத்தில் உதிக்கும் ஆதித்தனை நோக்கிப் பனித்துளிகளையும் புஷ்பங்களையும் தளிர்களாகும் அஞ்ஜலிகளில் ஏந்தி அர்க்கியம்விடுவதுபோல் உதிர்த்தது. பம்பாஸரஸ்ஸிலிருக்கும் காரன்னங்களின் ஆர்ப்பரிப்பு காதுகளுக்கு இன்பமாய் இசைந்தெழும்பியது. சற்றுக்கெல்லாம் பிரகாசமான ஜோதியுடன் சூரியனும் உதயமாய் ஒரு முகூர்த்தகாலம் ஆயிற்று. கிளிக்கூட்டங்களும் திங்கள் தங்களுக்கு இஷ்டமான திசைகளை நோக்கிச் சென்றுவிட்டன. அப்பொழுதே முளைத்து வருபவையான வலிவற்ற சிறகுகளையுடைய நானும் என் தந்தைக்கு அருகில் ஒரு கூட்டில் அடைந்திருந்தேன். இச்சந்தர்ப்பத்தில் திடீரென அம்மஹாரண்ணியத்தில் ஸகல ஜீவராசிகளையும் நடுநடுங்கச் செய்யும் வேட்டையாடும் பேரொலியொன்று கிளம்பிற்று. அதனுல் பறவைகள் பயத்தினுல் பரபரப்புடன் பயந்தோடத் துவக்கின. யானை

கள் வெருண்டு சீத்காரம் செய்தன. காட்டுப் பன்றிகள்
முகங்களைத் தூக்கிக்கொண்டு கரகரவென்கிற உறுமலு
டன் ஒடின. குன்றுகளின் குகைகளில் உறங்கி யெழுந்த
சிங்கங்கள் பயங்கரமாக கர்ஜித்தன. நான் சிசுவாகையால்
அதற்குமுன் கேட்டிராத அப்பேரிரைச்சலைச் செவியுற்று
அஞ்சி நடுநடுங்கி, தற்காலம் தற்காப்புச் செய்துகொள்ளு
மெண்ணத்துடன், மூப்பினால் சிதறுண்ட என் தந்தையின்
சிறகுகளுக்கு இடையிற்போய் நுழைந்துகொண்டேன்.
அதன் பின்னர் அக்காட்டினிடையில் மஹத்தான
வேட்டையாடும் கோலாஹலத் தொனியொன்று காதில்
விழுந்தது. இதோ "காட்டெருமைக் கிடாக்கள் கொம்
புகளின் முனைகளாற் கொந்திய புற்றுகளிலிருந்து புழுதி
கிளம்புகின்றது; இதோ காட்டானைகளின் கூட்டம்;
இதோ சிங்கத்தினால் கும்பஸ்தலங்கள் பிளக்கப் படுவது
பற்றி கீச்சிடும் குஞ்ஜரங்களது கூக்குரல்; இதோ சதுப்
பான சேறு வீழ்ந்து அழுக்கடைந்ததான காட்டுப்பன்
றிகள் கடந்த வழி; இச்சவுரிமான்பந்தியைப் பின்
பற்றுங்கள்; துரிதமாய் இக்கானகத்திற்போய் நுழை
யுங்கள்; மரங்களின் மீது ஏறுங்கள்; அத்திசையைப்
பாருங்கள்; அச்சப்தத்தைச் செவியுறுங்கள்; வில்லைக் கையி
லேந்துங்கள்; ஜாக்கிரதையா யிருங்கள்; வேட்டைநாய்களை
அவிழ்த்து விடுங்கள்" என்றவாறு பரபரப்புடன் ஒரு
வருக்கொருவர் ஏவிக்கொண்டு, மரங்களடர்ந்த மஹாரண்
ணியத்தில் வேட்டையின் நிமித்தம் பேரியதோர் மனிதக்
கூட்டம்புகுந்தது. பின்பு சற்றுப்பொழுதுக்கெல்லாம், வே
டர்கள் அம்புகளால் அடித்த கேஸரியினது கர்ஜனையினா
லும், வேட்டைநாய்கள் வெகு வேகமாக அவயவங்களைக்
கடித்துப் பிடுங்குவதால் திகிலடைந்து வெருண்டு விழிக்கு
ம் கலைமான்களின் கருணைபுரியக்கூடியகூக்குரலாலும், விரு

க்ஷங்களின் உச்சிகளிலிருந்து உயரக் கிளம்பி பரபரப்புடன் பறக்கும் பறவைகளின் ஆரவாரத்தாலும் அவ்வடவியெல்லாம் அசக்கப்பட்டதுபோல் ஆயிற்று. சற்றுநேரத்தில் அவ்வேட்டையாடும் ஆரவாரம் அடங்கியது ; நானும் சற்றுப்பீதிதெளிந்து, தந்தையின் மடியிலிருந்து சிறிது வெளிவந்து, பொந்திலிருந்தவாறே, மீண்டும் பயத்தினால் கண்களின் கருவிழிகளிரண்டும் சுழலமிட, கழுத்தை நீட்டி இளமைப் பருவத்திற்கேற்ப அஃதென்னவென்று காண்பதில் ஆவல்கொண்டு அத்திசையை நோக்கிப் பார்த்தேன். அவ்வனாந்தரத்தில் உற்பாதவேளையில் உதித்த வேதாளக் கூட்டம்போல் அதிபயங்கரமான வேடர்களின் படையொன்று நானிருந்தவிடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது. உருவெடுத்து ஓரிடத்திற்கூடிய தீவினைத்திரள்போலவும், இராமனால் இயமனுக்கு இரையாக்கப்பட்ட கரதூஷணர்களின் ஸேனைகள் இராமன்பால் தீங்கெண்ணிய தோஷத்தால் பிசாசங்களாகப் பிறந்துவந்தன போலவும் புலப்பட்டது. மஹத்தான அவ்வேடர் படைக்கு இடையில், இளம்பிராயம் வாய்ந்த ஸேனைத்தலைவனொருவன் இருந்தான். அவனது புயங்களிரண்டும் திரண்டுருண்டு முழந்தாள் வரையில் நீண்டிருந்தன; எப்பொழுதும் உழைக்கும் வழக்கத்தினால் அவன் உதரம் தடுக்குப்போல் மெலிந்திருந்தது; துடைகளிரண்டும் இரண்டு கட்டுத்தரித் தூண்களை நகைக்கின்றன போலிருந்தன: ஆயாஸத்தால் வெகுதூரம் வெளிவந்திருப்பதான நாவினால் தமது கஷ்டத்தை அறிவிப்பவையும், சோழிகளாற் செய்த மாலைகள் கட்டிய கண்டத்துடன் கூடியவையும், சின்னஞ் சிறிய சரீரத்துடன் பிடரிமயிர் படாத சிங்கக்குட்டிகளோவெனக் கூடியவைகளும், வெவ்வேறு வர்ணங்களுள்ளவையுமான வேட்டைநாய்கள் அவனைப் பின்பற்றின. மேலும் அவன் தீவினை

களின் ஸஹோதரன் போலவும், கலிகாலத்தின் ஸாராம்சம் போலவும் தோற்றினான். அவன்பெயர் மாதங்ககன் என்று நான் பிறகு கேள்வியுற்றேன். "ஆ! இவ்வேடர்களது வாழ்க்கை வெகு அறிவீனமானது; ஸாதுஜனங்களால் வெறுக்கவும் பெற்றது; ஆம்; நரமாம்ஸங்களால் காளி முதலிய தைவத்திற்குப் பலியிடுவதில் அவர்களுக்கு தர்மபுத்தி; ஆஹாரமோ, ஸத்புருடர்களால் நிந்திக்கப்பெற்ற மது மாம்ஸம் முதலியன; நரிகள் ஊளையிடுவதே சாஸ்திரம்; நன்மை தீமைகளை உபதேசிப்பவர் ஆந்தைகள்; நாய்களை ஸஹவாஸத்திற்குரியவை; குரூரத்தன்மையான வேங்கைகளுடன் பழக்கம்; பசுக்களின் உதிரத்தினால் தேவதார்ச்சனை; களவாடுவதே ஜீவனம்" என்று நான் சிந்தித்துக் கொண்டிருக்கையிலேயே, அவ்வேடர் படைத்தலைவன் அடவியில் அலைந்து திரிந்ததனால் உண்டான ஆயாஸத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்பி, அதே இலவமரத்து அடிநிழலில் வந்து உட்கார்ந்தான். அவர்களுள் வேறொரு வேடவாலிபன் விரைவுடன் இறங்கிப் போய் அச்சோதஸரஸ்ஸிலிருந்து தாமரைத்தளிரால் ஆக்கிய தொன்னையில், நிரம்ப நிர்மலமாயிருக்கின்றமையால் பரிசித்துஅறியக்கூடியதான தண்ணீரையும், தாமரைக் கிழங்குகளையும் எடுத்துவந்து ஸேனைத்தலைவனிடம் அளிக்க, அவனும் அத்தண்ணீரை அருந்திவிட்டு, தாமரைக் கிழங்குகளையும் மெதுவாக மென்று தின்றான். பின்பு அவன் ஆயாஸந் தீர்ந்து எழுந்து, அந்த வேடர்களின் படையும் தண்ணீரை அருந்திவிட்டுப் பின் தொடர, மெள்ள மெள்ள த்ன் மனதுக்கிசைந்த திசையை நோக்கிச் சென்றுவிட்டான்.

அவர்களுள் கிழட்டு வேடனொருவன், அவனுக்கு மற்ற வேடர் கூட்டத்தினிடமிருந்து இறைச்சி கிடைக்க

வில்லை. ஆகவே அவனுக்கு இறைச்சி தேவையாயிருந்
தது. அப்பால் அவ்வேடர் படைத்தலைவன் அடவியில்
மறைந்ததும், அக்கிழட்டுவேடன் அவ்விலவமரத்தின்மீது
ஏற விரும்பியவனாய், எமது உயிர்களை உறிந்து விடுப
வன்போல் அவ் விருக்ஷத்தை அடிமுதல் நுனிவரை
யில் சிறிதுநேரம் ஏறயிறங்கப் பார்த்தான். அவனது அப்
பார்வையிலிருந்து பயந்த கிளிக் கூட்டங்களுக்கு ஜீவன்
கள் அந்த க்ஷணமே வெளிக்கிளம்பினபோலும். ஈரமில்லா
நெஞ்சத்தார் எதைத் தான் செய்யத் துணியார்? பல பனை
மரங்களின் உயரமுள்ளதும், ஆகாயத்தையளாவிய கிளை
களையுடையதுமான அம்மரததின்மீது படிகளில் ஏறுவது
போல் வெகு எளிதாகவே அவன் ஏறிவிட்டான். அதிலேறி,
சாகைகளின் சந்துகளிலிருந்தும் பொந்துகளிலிருந்தும்
அவ்விருக்ஷத்தினது கனிகளைப் பறிப்பது போல் கிளிக்
குஞ்சுகளை ஒவ்வொன்றாகப் பிடித்தான்; அவற்றுள் சில
பறந்தோடுந் திறமை பெறாதவைகளாகவும், வேறு சில
பிறந்து வெகு சொற்ப நாட்களேயானதால் கருப்பையி
லிருந்து பற்றிய காந்தியினால் செந்நிறம் பொருந்தியவை
களாய் அவ்விலவமரத்தினது பூக்களோவெனச் சங்கை
யை யுண்டுபண்ணுபவைகளாகவும், அப்பொழுதுதான்
இறகுகள் முளைத்துக்கொண்டிருந்ததால் சிலது பங்கயத்
தின் புதிய இதழ்களுக்கொப்பானவையாகவும், அவ்வபாய
த்திற்குப் பரிஹாரம் தேடுவதற்குத்திறமையற்றவைகளாக
வும் இருந்தன. அவைகளைப் பிடித்து உயிர்களையும் போ
க்கி ஒவ்வொன்றாய் புவியில் எறிந்தான்.

எனது தந்தையோ தடுக்கக்கூடாது திடீரென நேரி
ட்ட அம்மஹத்தான ஆபத்தைக் கண்டு, இரண்டத்தனை
உதறலுண்டாய், மரணபயத்தினால் திகைத்து அங்குமிங்கு
மாக விரண்டுப் பார்த்தது. தன் சிறகுகள் இரண்டாலும்

National Library,
Calcutta-27
6955dt 6.7.62
Rs1-00






என்னை மறைத்துக்கொண்டு, அதையே தற்காலத்துக்குத் தகுந்த தப்பிவிக்கும் வழியென்றெண்ணி, பிரீதிக்குப் பரவசமாகவும், என்னைக் காப்பாற்றுவதில்தானே கவலையுள்ளதாகவும், செய்வது யாதென்றறியாததாய் சிறகுகளாலும் மார்பினாலும் என்னை அணைத்துக்கொண்டிருந்தது. அக்கொடும்பாவியும் கிரமமாகக் கிளைவிட்டுக் கிளைதாவித் திரிந்துகொண்டு, எம் பொந்தின் வாயிலண்டை வந்து, கிழட்டுக் கிருஷ்ண ஸர்ப்பத்தின் உடல்போல் பயங்கரமான தனது இடது புயத்தை நீட்டினான். என் தந்தையோ தன் அலகினால் அவனை அடித்துக்குத்திக் கூக்குரலிட்டது. அதை அக்கொலைபாதகன் இழுத்து உயிரையும் இழக்கச் செய்தான். என்னையோ வெகு சிறியதாயிருந்தமையாலும், திகிலடைந்து உடலை யொடுக்கிக்கொண்டிருந்ததினாலும், ஆயுள் மிகுந்திருந்ததாலும் எவ்வகையிலோ என் தந்தையின் இறக்கைகளுக்கிடையில் புகுந்திருக்க அவன் காணவில்லை. உயிரிழந்த என் தந்தையையும், அந்தோ! கழுத்தைத் திருகித் தரையிலெறிந்தான். நானும் அதன் கால்களுக்கிடையில் கழுத்தை நுழைத்துக்கொண்டு அசைவின்றி மடிதனில் மறைந்தவாறே அதனுடன் கூடவே விழுந்தேன். பூர்வஜன்மத்திற் செய்த புண்ணியத்திற் சிறிது மிகுந்திருந்தமையால், அங்கு காற்றினால் குவிக்கப் பெற்ற இலைச்சிறகுகளினது குவியிலொன்றின் மீது என்னை விழக் கண்டேன்; அதனாலல்லவோ எனது ச்ரீரம் சிதறிப்போகவில்லை! அம் மரத்தின் உச்சியிலிருந்து அவன் இறங்கி வருவதற்குள்ளாகவே, நான் அங்கு இறைந்து கிடந்த இலைச்சிறகுகளுக்கேற்ற நிறமுடையதாயிருந்தது பற்றி, நன்கு காணக்கூடா வுருவத்துடன் கூடியதாய், உயிரிழந்த தந்தையைவிட்டுவிட்டு, பிராணனைப் பறிகொடுக்கத்தரும் தருணத்திலும், பாலத்தன்மையினால் ஜன்மத்

திற்கூடவே பிறந்த பயம் என்னைப் பீடிக்க, சிறிது முளைத்திருக்கும் சிறகுகளால் சரீரத்தைச்சற்று தாங்கிக்கொண்டு, அங்குமிங்குமாய் தள்ளாடி, நமன் வாயிலிருந்து தப்பி வெளிவந்ததாக வெண்ணிக்கொண்டு, சற்று அருகிலிருந்த பச்சிலைமரத்தின் வேரடியிற் போய் நுழைந்துகொண்டேன். அவ்வேடன் இவ்வளவு நேரத்திற்கெல்லாம் இறங்கி, நிலத்திற் சிதறிக்கிடந்த கிளிக்குஞ்சுகளின் உடல்களை ஒருமிக்கக் கட்டி யெடுத்துக்கொண்டு, . அச்சேனைத்தலைவன் சென்றவழியிலேயே தானும் சென்றுவிட்டான். அப்பொழுது பிழைத்தோம் என்று நினைத்தேன். பித்ருமரணத்தாலுண்டான புதிய துயரம் என் நெஞ்சை வாட்டியது. மிக்க உயரத்திலிருந்துவிழுந்த எனது தேஹம் விசேஷமாய் ஆயாஸமடைந்தது. பயத்தினால் உடல் வாடி தாங்க வியலாத வறட்சியுமுண்டாயிற்று. அவ்வளவு நாழிகைக்கெல்லாம் அப்பாவி வெகுதூரம் சென்றிருப்பானென நினைத்து, சற்றுத்தலை நிமிர்ந்து பயத்தினால் கண்கள்விரள திசைகளை யெல்லாம் பார்த்துவிட்டு, புல்லசைந்தாலும் மீண்டும் அப்பாதகன் திரும்பிவந்தானென, தீச்செயல்புரியும் அவ்வனையே அடிக்கடி நினைத்துக்கொண்டு, அப்பச்சிலைமரத்தின் அடியிலிருந்து வெளிவந்து, தண்ணீரிருக்கு மிடம் செல்ல முயன்றேன். இறகுகள் இன்னும் நன்கு முளைக்கவில்லையாகையால், அதிக திடமாக நடமாடமுடியாது தலைகீழாகக் கவிழ்ந்து கவிழ்ந்துத் தள்ளாடிக்கொண்டே சென்றேன். என் உடம்பைத்தாங்க ஸ்வாதீனமின்மையால் என் உடல் குறுக்காகவும் தலைகீழாகவும் அடிக்கடி விழும்; அப்பொழுது ஒரு புறத்துச் சிறகினால் தாங்கிக்கொண்டும், நிலத்தின்மீது நடந்துச் செல்ல வினைசையுடையதாயிருப்பினும் அதில் அப்யாஸமில்லையானதால், ஓர் அடிவைத்ததும் தலைதூக்கி யிடைவிடாது மேல்மூச்சு விட்டுக்

கொண்டும், உடல்முழுதும் புழுதி படிந்து நகர்ந்து செல்லுகையில் என் மனத்தில் தோன்றியதாவது:--"வெகு துன்பப்படும் நிலைமைகளிலுங்கூட உலகில் ஸர்வப்பிராணிகளின் பிரவ்ருத்திகளும் உயிரிடத்துமாத்திரம் உபேக்ஷையுள்ளவைகளா யிருப்பதில்லையன்றோ? இஜ்ஜகத்தில் ஜந்துக்களனைத்துக்கும் உயிரைக்காட்டிலும் உத்தமமான விரும்பக்கூடிய பொருள் வேறொன்று மில்லை. எனது தந்தை இவ்வாறு உயிர் துறந்திருக்கையிலும், இன்னமும் இதோ ஜீவித்திருக்கின்றேனே! சீ! கருணையற்றதும், கடோரத்தன்மையதும், நன்றியில்லாததுமான என்றனைச் சுடவேண்டும்! சிறிது நன்றிகூடப் பாராட்டப்படவில்லையே! எனது அன்னை இறந்து, அத்துயரத்தை என் தந்தை யடக்கிக்கொண்டு, வயது சென்றிருந்தும், என்னையெடுத்து வளர்ப்பதில் வருத்தங்கள் மிகுதியாயிருப்பினும்என்னிடம் வைத்த அன்பினால் அவற்றைக் கருதாமல் அவ்வவ்வுபாயங்களைக்கொண்டு என்னைப் பிறந்த நாள் முதல் பரிபாலித்ததே! இதையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் மறந்துவிட்டேனே! எனக்குப் பேருபகாரம் செய்த தந்தையை யின்னும் என் உயிர் பின்செல்லவில்லையல்லவா! இவ்வவஸ்தையிலுங்கூட என்னைத் தண்ணீருந்தும் ஆசை ஆயாஸப்படுத்துகின்றதே! குளக்கரையோ இன்னமும் தொலைதூரமெனத் தோற்றுகிறது; ஏனெனில், ஸாரஸங்களென்னும் நீர்வாழும் பறவைகளின் ஆர்ப்பரிப்புகள் தெளிவற்று நெடுந்தூரததிற் கேட்கின்றன. இப்பகற்பொழுதின் தன்மையோ வெகு கடுமையாயிருக்கிறது. கதிரவனும் வானத்தினுச்சியை யடைந்து தனது சுட்டொளிவீசும் வெயிலைத் தீப்பொறிகளது திரள்களைப்போல் இடைவிடாது இறைக்கின்றான். மிதமிஞ்சிய தாபத்தினால் சோர்ந்துபோன என் எளிய அங்கங்களுக்

குச் சிறுதும் நடமாடத் திறமையேயில்லை; நான் ஸ்வாதீன
மிழந்து எனது நெஞ்சம் அஞ்சித் துயரமுறுகின்றது. கண்
ணும் பஞ்சடைந்துபோகின்றதே! நான் விரும்பாமலிருப்
பினும் எனக்கு இந்த க்ஷணமே பாழுந் தைவம் மரணத்
தையளிக்குமோ?" என்று நான் இவ்வாறாகச் சிந்தித்து
க்கொண்டிருக்கையிலேயே அக்குளத்திற்குச் சற்றுத் தூர
த்திலிருக்கும் தபோவனத்தில் வஸிப்பவரான பெருந்த
வம் புரிந்த ஜாபாலி யென்கிற முனிவரது மைந்தனை
ஹாரீதன் என்னும் இருஷிகுமாரர் தனக்கீடான வேறு
சில ருஷிகுமாரருடன் அதே வழியாக அத்தாமரைக்குளத்
திற்கே நீராடவேண்டி வந்தார். மூன்று விபூதிக்கோடுக
ளிட்டு, அவரது அகன்ற நெற்றி அலங்கரிக்கப்பெற்றிருந்
தது; செந்நெல்தானியங்களின் ஆஹாரப்பிடிகளால் வள
ர்க்கப்பட்டுப் பழக்கமுண்டானதும், தனது கொம்பு முனை
யாற் கொந்திப்பெயர்க்கப்பட்ட ஸ்நானமிருத்திகையைச் †
சுமந்துகொண்டுவருகின்றதுமான தபோவனத்திலிருக்
கும் மானொன்று அவரைப் பின்பற்றியது. ஸத்புருடர்
களின் மனம் எப்பொழுதும் காரணமேதுமின்றி நேசப்
பான்மை பொருந்தியதாகவும், மிக்க இரக்கமுள்ளதாகவும்
இருக்கின்றதல்லவா? நான் அத்தகைய நிலைமையிலிருப்
பதைஅம்முனிகுமாரர் கண்டு இரக்கமுற்று, அருகிலிருந்த
இருஷிகுமாரர்களில் ஒருவனை நோக்கி இங்ஙனம் கூறினர்.
'இறகுகள் முளைக்காத இக்கிளிக்குஞ்சு எங்ஙனமோ
இம்மரத்தினுச்சியிலிருந்து தவறி விழுந்துவிட்டது; அல்
லது பருந்துவாயிலிருந்தாவது இஃது நழுவி விழுந்திருக்
கவேண்டும்; ஆம்: இது மிகவும் உயரத்திலிருந்து வீழ்ந்
திருப்பதால் இதற்குச்சொற்பந்தான் இன்னும் உயிர் மிகு
திருக்கிறது. கண்கள் மூடின; அடிக்கடி தலைகீழாகவும்

† ஸ்நானம் செய்யும்போது வைதிகர் உபயோகிக்கும் மண்.

கவிழ்ந்து வீழ்கின்றது ; அடிக்கொருமுறை அதிகமாய்ப் பெருமூச்சு விடுகின்றது ; பன்முறை தனது அலகைத் திறக்கின்றது ; ஆகையால் உயிர் துறப்பதற்குள்ளாகவே இதை யெடுத்துத் தண்ணீருக்கு அருகிற் கொண்டுபோய் விடுவாயாக' எனக் கூறி, என்னை அவனைக்கொண்டு குளக்கரையை யடைவித்தார். தண்ணீருக்கு அருகிற் சென்றதும், தானாகவே என்னை யேந்திக்கொண்டு முற்றிலும் சக்தியற்ற எனது முகத்தை நிமிர்த்தி, விரலால் சிறிது நீர்த்துளிகளைப் பானம் பண்ணி வைத்தார் ; பின்பு தண்ணீரையும் உடல்மீது தெளிக்கவே எனக்குப் புதியதாகப் பிராணன் வந்தது ; பிறகு என்னைக் கரையோரத்தில் படர்ந்திருந்த தாமரையிலையின் குளிர்ந்த நிழலில் விட்டுவிட்டு, முறைப்படி தமது நீராட்டத்தை அனுஷ்டித்தார். அப்பால் புதியதாகப் பறித்த செந்தாமரைப்பூக்களுடன் ஜலம் ஏந்திக் கதிரவக்கடவுளை நோக்கித் தலை நிமிர்ந்து அர்க்கியப் பிரதாநம் செய்தருளிக் கரையேறினர். பின்னர் சுத்தமான மரவுரியைத் தரித்து, என்னை யெடுத்துக்கொண்டு மெல்லெனத் தபோவனம் நோக்கிச் சென்றார்.

சற்றுத்தூரம் சென்றதும், பிரம்மலோகம் போன்ற மிகவும் அழகான ஓர் ஆச்ரமத்தைக் கண்டேன் ; அது எக்காலத்தும் கனிகளாலும் பூக்குலைகளாலும் பூர்ணமான அழகிய கானகங்களால் தழுவப்பட்டிருந்தது; அங்கு அடிக்கடிச் செவியுறப்படும் வஷட்காரமந்திரங்களைச் * சுககுலங்களும் ஓயாமல் உச்சரித்துக்கொண்டிருந்தன ; கிழவரும் கண்தெரியாதவருமான முனிவர்களை அவ்விடத்திற் பழக்கமுடைய வாநரங்கள், கைகொடுத்து ஆச்ர

* வஷட்காரமந்திரங்கள்- ஹோமம் பண்ணுகையில் ஓதப்படும் பிரார்த்தனைச் சொற்கள்.

மங்களில் அழைத்துச் சென்று கொண்டிருந்தன ; அதிதி வர்க்கங்கள் அங்கு அதிகமாயுபசரிக்கப்பட்டனர் ; சிரா த்தச்சடங்குள் சிரத்தையுடன் செய்யப்பட்டன ; யஞ்ஞ வித்தைகள் விரித்துரைக்கப்பட்டு வந்தன ; தர்மசாஸ்திர ங்கள் தர்க்கிக்கப்பட்டன; பற்பல நூல்கள் படிக்கப்படலா யின ; சாஸ்திரங்களனைத்தின் பொருள்களும் ஆராய்ச்சி செய்யப்பட்டன ; அவ்வாச்ரமம் முன்பு கலிகாலத்தினுற் காணப்படாதது ; அஸத்தியமென்பதை அங்கு அறிந்த வரில்லை. மேலும் அங்கு, மாசுமறுவென்பது ஹோமாக் கினியிலிருந்து கிளம்பும் தூமங்களிலன்றி ஒழுக்கங்களில் இல்லை ; முகச்சிவப்பு சுகங்களிடமல்லாது சினங்களிற் கிடையாது; தீக்ஷ்ணத்தன்மையென்பது தர்ப்பமுனைகளில ன்றி சுபாவங்களிற் காணப்படவில்லை ; சபலத்தன்மையா னது கதளீ தளங்களிலல்லாது சித்தங்களிற் கிடையாது. இத்தகைய அவ்வாச்ரமததின் மத்தியபாகத்தை அல ங்கரிக்கச் செய்வதான ஓர் ரக்தாசோகமரத்தின் அடிநிழ லில் மஹா மஹிமைதங்கிய ஜாபாலியென்னும் முனிச்ரேஷ் டர் வீற்றிருந்தார். அவர் வெகு நீண்டு நரைத்துப்போன உரோமச்சடைகளால் தைவலோகமேறுவதற்குச் சம்பா திக்கப்பெற்ற புண்ணியநூற்கயிறுகளுடன் கூடியவர் போல் விளங்கினர் ; வெகு சபலங்களான இந்திரியங் களாகும் குதிரைகளை உள்ளேயடக்கிக்கட்டும் வடக்கயிறு களோவெனத் தோன்றுமாறு நீண்டு படர்ந்திருக்கும் நாடி நரம்புகளால் அவரது கண்டம் சூழப்பெற்றிருந்தது ; தனது திடத்தன்மையை (மனோதைரியத்தைப்) பெருங் குன்றங்களுக்கும், காந்தியைக் கதிரவனுக்கும் பகுத்திடப வர்போல் பார்க்கப்பட்டார். அவரைத் தரிசித்ததும் யான் இவ்வாறு ஆலோசிக்கலானேன்:—“ஓ ! தவங்களின் மஹி மை மிக்க வியக்கத்தக்கது ; இவரது மூர்த்தி மிகச் சாந்த

மாகக் காணப்படினும், பழுக்கக் காய்ச்சிய பத்தரைமாற்றுத்தங்கம்போல் பிரகாசமாயிருப்பதால் மின்னற்கொடி போல் கண்ணைப் பறிக்கின்றதே! இவர் ஒன்றிலும் பற்றுப்பகையற்றவராயிருப்பினும், இவரது மஹிமை முதலில் நாடுபவர்க்கு அதிகம் அச்சம் தருகிறது. சொற்ப தவம் புரிந்த தாபஸர்களின் ஒளியே இயற்கையில் தாங்கக்கூடாதது; புவனமனைத்தாலும் பணியப்பெற்ற பாதங்களையுடையவரும், கடுந்தவம் புரிபவரும், உலகமனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோற் காண்பவரும், பாவங்களை யெல்லாம் பார்த்தவுடன் பறக்கச் செய்பவருமான இம்மஹானின் பேரொளி பொறுக்கக்கூடாததென்பதைக் கேட்க வேண்டுமோ? மாமுனிவரது திருநாமங்களைக் கீர்த்தனம் பண்ணுவதே புண்ணியமாம்; தரிசனம் செய்வதிற் கூறவும் வேண்டுமோ? இம்மஹானை அதிபதியாகவுடைய இவ்வாச்ரமம் வெகு பாக்கியம் செய்தது; இவ்விருடிகளும் புண்ணியவான்கள்; அல்லும் பகலும் இவர்கள் புண்ணிய கதைகளைக் கேட்டுக்கொண்டு, மற்றொரு பிரம்மதேவன் போன்ற இம் மஹர்ஷியைப் பணிந்து கொண்டிருக்கின்றனரல்லவா? இவரோ தேஜஸ்விகளுக்கெல்லாம் முதன்மையானவர்; இம்மஹான் தயாரஸப்பெருக்கு; ஸம்ஸாரக் கடலைக் கடக்கும் ஸேது; ஆசைகளென்னும் விஷக் கொடிகளின் அடவிக்குக் கோடரி; அஞ்ஞானமாகும் அந்தகாரத்திற்கு ஆதித்தன்; மங்களங்களுக்கெல்லாம் ஆலயம்; கலிகாலத்திற்கு எதிரி; தவத்திற்கு நிதி; ஸத்தியத்திற்கு ஸகா; புண்ணிய ஸமூஹத்திற்குப் பிறப்பிடம்; சிற்றின்பங்களுக்குச் சற்றும் வசப்படாதவர்; மற்றும் பல ஸுகங்களுக்கும் பராமுகமானவர். வெகு பூஜ்யரான இவரது அருளாற்றான் இத்தவஞ் செய்யுஞ்சோலை பகையைப் பரிஹரித்ததும், பொறுமை

யைப் போக்கியதுமாயிருக்கின்றது ; ஒ! மஹாத்மாக் களுக்கு என்ன மஹிமை ! இங்கு விவேகமற்ற விலங்கு களுங்கூடச் சாச்வதமாகத் தங்களிடமிருக்கும் இயல்பான பகைமையைப் பரிஹரித்து, மிகவும் அமைதியான சுபா வத்தைப் பெற்றவைகளாய்த் தபோவனத்தில் தங்கி வஸி க்கும் ஆனந்தத்தை யனுபவிக்கின்றன ; ஆம் ; இதோ நாகமொன்று வெயிலால் வாட்டப்பட்டு, மயிலினது தோகைக்குள் அஞ்சாமற் பதுங்குகின்றது ; இதோ மான் குட்டியொன்று, தன் தாயை விட்டுவிட்டுப் பிடரிமயிர் படராத சிங்கக்குட்டிகளுடன் கூடி விளையாடி சிங்கப்பே ட்டின் முலையை யுண்ணுகிறது.''

இவ்வாறாகச் சிந்தித்துக்கொண்டிருக்கும் என்னை அதே அசோகமரத்தின் அடிநிழலில் ஒருபக்கத்தில் விட்டு விட்டு, ஹாரீதன், தனது தந்தையின் பர்தங்களைத் தொட்டுத் தொழுது, அவருக்குச் சற்றுத் தூரத்திலிருந்த தர்ப்பாஸனமொன்றிற் சென்று அமர்ந்தான். என்னைப் பார்த்த அங்கிருந்த முனிவர் யாவரும் ஹாரீதனை நோக்கி 'இக்கிளிக்குஞ்சு எங்கிருந்து கொண்டுவரப்பட்டது ?' என வினவர். அவர்களை நோக்கி இவன் இங்ஙனம் விடையளித்தனன்:—'நான் ஸ்நானத்திற்குப் போகையில், இது குளக்கரை மரத்தின் கூட்டிலிருந்து கீழே விழுந்திரு ந்தது ; வெகு உயரத்திலிருந்து விழுந்ததால் மிகவும் களை த்துக் குற்றுயிராயிருந்து. அம்மரத்தின்மீது நம்போன்ற வர் ஏறமுடியாததால், இதைத் தன் கூட்டில் ஏற்றிவைப் பதியலாதெனக் கருதி மனமிரங்கி இதை யிங்கு எடுத்து வந்தேன் ; ஆகாயத்தில் எழும்பிப் பறக்குந் திறமை வருகி றவரையில் இவ்விடத்தில் ஓர் ஆச்ரமவிருக்ஷத்தின் பொந் தில் வைக்கப்பட்டு நம்மால் போடப்படும் செந்நெலரி சியின் நொய்ப்பொடிகளாலும், கனிகளின் இரஸங்களா

னும் வளர்க்கப்பெற்றுப் பிழைத்து வரட்டும்; அநாத பரிபாலனமென்பது எம்மைப்போன்றவரது கடமையல்லவா? நன்கு இறகுகள் முளைத்து வானத்திற் சஞ்சரிக்கும் வல்லமை வந்துவிட்டபிறகு, இது தனக்கு இஷ்டமான விடத்திற்குப் பறந்து போகட்டும்; இல்லையேல், நம்முடன் பழகி இவ்விடத்திலேயே இருந்தாலும் இருக்கட்டும்' என்று. இதுமுதலிய என்னைப்பற்றிய ஸம்பாஷணையை ஸ்ரீஜாபாலி முனிவரும் செவியுற்று, சற்றுக் குதூஹலமடைந்து சிறிது கழுத்தைத் திருப்பி மிகவும் சாந்தமான தமது திருஷ்டியினால் என்னை நோக்கிவிட்டு, நெடுநேரம் எதையோ நினைவுக்குக் கொண்டுவருபவர் போல் பல்முறை பார்த்து, 'தன் அவிநயத்தின் பயனையே இஃது இங்ஙனம் அனுபவிக்கின்றது' என மொழிந்தனர். முக்காலங்களையும் அறியும் மஹா பிரபாவசாலியான அம் முனிவரோ, தவத்தின் பெருமையாற் பெற்ற திவ்ய திருஷ்டியினால் உலகம் அனைத்தையும் உள்ளங்கையில் இருப்பதுபோற் காண்கிறார்; அவரது மஹிமையையறிந்தவரான அச்சபையிலிருந்த தாபஸர்கள் ஏனையோரும் 'இஃது எங்கு எதற்கு எந்தகைய அவிநயத்தைச்செய்தது? முன் ஜன்மத்தில் இது எப்பிறப்பாகவிருந்தது?' என்று மிகவும் ஆவலுடனும் வணக்கத்துடனும் அம்முனிச்ரேஷ்டரை வினவினர்: இங்ஙனம் ஏனைய முனிவர்களாலும் வேண்டப்பெற்ற அம்மாமுனிவர் மறுமொழிகூறியதாவது: 'இவ்விஷயமோ மிகவும் வியப்புறக்கூடியதும் விஸ்தாரமுமானது. பகற்பொழுது சாயப்போகிறது. நமக்கு ஸ்நான வேளையும் வீணில் அதிக்ரமித்து விடுகிறது. தேவதார்ச்சனைகள் செய்யவேண்டியிருக்கிறது. ஆனதுபற்றி நீங்கள் எழுந்திருந்து மத்தியான்னச்சடங்குகளை முறைப்படி யனுஷ்டிப்பீர்களாக. மீண்டும் மாலைப்பொழுதில் அமர்ந்துட்

கார்ந்து இக்கதைடைக் கேட்கலாம். அப்பொழுது உங்களுக்கு இது யார்? ஜன்மாந்தரத்தில் இதனால் யாது செய்யப்பட்டது? இவ்வுலகத்தில் இதற்கு எவ்வாறுற்பத்தி? என்றெல்லாவற்றையும் ஆதிமுதல் எடுத்துரைப்பேன். இதற்கும் ஆஹாரமூட்டி ஆயாஸந்தீரச் செய்யுங்கள். நிச்சயமாய் இதுவும் தனது ஜன்மாந்தரச் செய்தியனைத்தையும், யான் கூறிவருகையில், கனவிலறிந்தது போல் தானே நினைத்துக் கொள்ளப்போகின்றது' என்று மொழிந்துகொண்டே எழுந்து, மற்ற முனிவருடன் விதிப்படி நீராடி, மற்றும் மத்தியான்னத்திற் செய்யவேண்டிய சடங்குகளை யனுஷ்டித்தார்.

இவ்வளவு நேரத்திற்கெல்லாம் பகற்பொழுதும் போயிற்று; தினகரனும் மேல்திசைக்கடலின் தண்ணீருக்குள் விழ, அவ்வீழ்ச்சியின் விசையால் உயரக்கிளம்பிய நீர்த்திவலைகளின் திரள்போல் தாரகைக்கூட்டம் வானத்தில் உதித்தது; முனிஜனங்களது மனதுகளைத் தவிர்த்து மற்றெல்லாவற்றையும் அந்தகாரம் வந்து சூழ்ந்துகொண்டது. பனித்திரளைப் பொழிந்துகொண்டு சந்திரனும் சற்றுத்தூரத்தில் உதித்து தோன்ற, அமுதத்துகள்களின் படலம்போன்ற நிலவுனால் உலகெங்கும் வெண்மையாக்கப்பெற்றிருக்க, இரவில் அரை யாமம் கழிந்தது. உடனே ஹாரீதன் உணவுண்டு, என்றனை யேந்திக்கொண்டு, மற்ற முனிவர்கூட்டத்திற்கிடையில் நிலவுனால் நன்கு துலங்கும் அத்தபோவநத்தின் ஓர் பாரிசத்தில் வேத்திராஸனத்தின்மீது வீற்றிருக்கும் தனது தந்தைக்கு அருகிற் சென்று செப்பியதாவது :—'தந்தையே! வெகு விந்தையான விஷயத்தைச் செவியுறுவதில் ஆவல்கொண்டு இந்த முனிவர் அனைவரும் வந்து இதோ சுற்றிலும் காத்துக்கொண்டிருக்கின்றனர்; இச்சிறிய பறவையும் களைப்

பார்றப்பட்டது. ஆகவே இக்கிளியின் முந்திய ஜன்மக் கதையையும் இனி வரப்போகிற வரலாற்றையும் எமக்கு மொழிந்தருள்வீர்களாக.' இவ்வாறு அவனால் வினவப்பட்டதும், அம்முனிவர் முன்புறத்திலிருக்கும் என்னைக் கண்ணோக்கிவிட்டு, அம்முனிவர்கள் அனைவரும் ஒரே மனத்தினராய் கதாச்ரவணம் செய்யப்போவதில் ஆவலுள்ளவர்களா யிருப்பதையும் அறிந்துகொண்டு மெதுவாகச்சொல்லவாரம்பித்தார்:— "ஆவலிருப்பின் செவியுறுவீர்களாக.

" அவந்திதேசத்தில் மூவுலகுக்கும் திலகம்போன்றதும், விண்ணுலகத்தின் ஒளியை வென்றதுமான உஜ்ஜயினீ எனப் பெயர்பெற்ற நகரம் ஒன்றுண்டு. அது மஹாகாளனென்கிற மஹேச்வரனது க்ஷேத்திரம். அது அச்சிவபெருமானால் தனது வாஸத்திற்குத் தகுந்தவாறு படைக்கப்பெற்ற மற்றொரு மேதினியோவெனத் தோற்றும். இரண்டாவது பூமண்டலமோ வென்று மயங்கி வந்த ஸமுத்திரம்போன்ற அகழியினால் அது சூழப்பெற்றது. ஆகாயத்தை யளாவிய கொடிமுடிகளுடன் கூடியதும், சுண்ணப்பூச்சினால் வெளுத்ததுமான சுற்றிலுமிருக்கும் மதிலானது சிவபெருமான் வீற்றிருக்கின்றாரென்னும் கௌரவத்தால் வந்துள்ள கைலயங்கிரியோவெனப் புலப்படும். வெகு நீண்ட பெருங்கடைவீதிகள் ஆங்கு விளங்குகின்றன. அனவரதமும் நடைபெறும் வேதகோஷத்தினால் அந்நகரம் களங்கமற்றிருக்கிறது. அது சிப்ரை யென்னும் நதியினால் சூழப்பெற்றது.

இவ்வகைத்தான அந்நகரத்தில் நள-நஹுஷ-யயாதி-துந்துமார-பரத-பகீரத-தசரதர் முதலியவருக்கு ஒப்பானவனும்; மூவகைச்சக்திகளின் † பயனைப் பெற்றவனும்,

† மூவகைச்சக்தி- பிரபு சக்தி, மந்திரசக்தி, உத்ஸாஹ சக்தி.

தர்மசாஸ்திரங்களோதி யுணர்ந்தவனும், சாந்தமான காந்தியாலும், சரீரத்தின் சுடரொளியாலும் சந்திர ஸூர்யர்களிருவர் குணத்தையும் ஒருமிக்கப் பெற்றவனும், தர்மதேவதையின் அவதாரம் போன்றவனும், பிரஜைகளின் பீடைகளைப் பரிஹரிப்பவனுமான தாராபீடன் என்னும் ஓர் அரசசிரேஷ்டன் உண்டு. இரதிதேவியினது புலம்பல்களால் இரக்கங்கொண்ட இருதயத்தையுடையவரான பரமசிவனால் படைக்கப்பெற்ற மன்மதனெனவே மானிடரனைவரும் இவனை யெண்ணலானார்கள். இவனது சரித்திரத்தை ஜனங்கள் தங்களது பாக்கியப்பெருக்கைப் போல் செவியுற்றனர்; உபதேசமொழியைப் போல் ஏற்றுக்கொண்டனர்; மங்களச் செய்திபோல் வெகுமானித்தார்கள்; மந்திரத்தைப்போல் ஜபித்தனர்.

தசரதருக்கு வஸிஷ்டரைப் போல் அவ்வரசனுக்கு சுகநாஸன் என்னும் ஓர் அந்தணன் அமைச்சனாகவிருந்தான். அம்மந்திரி சாஸ்திரங்களைக் கசடறக்கற்றவன்; சிறு பிராயமுதல் அரசனுடன் பழகி அவன்பால் அளவற்ற அன்பார்ந்தவன்; நூல்களிற் செப்பியவாறு நீதிகளைப் பிரயோகிப்பதில் மிகத்திறமைவாய்ந்தவன்; மிகச்சங்கடமான நிலைமைகளிலும் அஞ்சாத நெஞ்சத்துடன் காரியங்களை நிறைவேற்றுபவன்; ஒழுக்கத்திற்கு இருப்பிடமானவன்; ஸத்தியம் தவறாதவன்.

நாற்கடல்களாகும் அகண்டமான அகழிகளால் சூழப்பெற்ற இவனது இராஜ்யத்தில் ஆயிரக்கணக்கான சார புருடர்கள் எங்கும் ஸஞ்சரிப்பதால், அகத்தினுள் நடைபெறும் விருத்தாந்தம்போலவே, இம்மேதினியில் அகில அரசர்களுடையவும், மற்றவருடையவும் மூச்சுவிடுதலுங்கூட தினந்தோறும் இவனுக்குத் தெரியவரும். தாராபீடன் அமைச்சனிடம் இராஜ்யபாரப் பொறுப்பை யமர்

த்திவிட்டு, வாலிபப் பருவத்திற்கேற்ப ஸுகமாகச் சில காலத்தைக்கழித்து வந்தான். சுகநாஸனும், தனது அறிவின் பலத்தினால் பிரஜைகளும் சிற்றரசர்களும் இன்புறுமாறு இராஜ்யகாரியங்களை நிறைவேற்றி வந்தான்.

ஆனால் மைந்தனது முகத்தைக் காண்பதாலுண்டான ஸுகமொன்றைமாத்திரம் அவ்வரசன் பெறவில்லை. யௌவனப்பருவம் கழிந்து போகப் போக, புதல்வனைப் பெறுததாலுண்டான மனக்கொதிப்பும் மேன்மேலும் பொங்கி யெழும்பியது. பூபதிகள் பல்லாயிரக்கணக்காகப் பக்கத்திற் சூழ்ந்திருந்தும் துணையற்றவனைப் போலவும் தன்னை யெண்ணலானான்.

அவ்வரசனுக்கு விலாஸவதீ யென்று புகழ்பெற்ற பட்டமஹிஷியுண்டு. அவள் திருமாலின் மார்புக்குக் கௌஸ்துபமணிபோலவும், சந்திரனுக்கு நிலவு போலவும் அப்பூபதிக்குப் பூஷணம்போல் அமைந்திருந்தாள்.

ஒரு நாள் அம்மஹீபதி அவளிருக்கும் அந்தப்புரம் சென்றான். அப்பொழுது அங்கு ஆபரணமேதும் அணிந்துகொள்ளாதவளாய், அம்புயமலர் போன்ற தனது வதனத்தை இடது கரத்திற் சாய்த்துக்கொண்டு, இடைவிடாது சொரியும் கண்ணீர்ப் பெருக்கினால் வெண்பட்டாடை நனைய, சிறியதோர் மஞ்சத்தின் மீதுட்கார்ந்தபடி அவள் அழுதுகொண்டிருக்கக் கண்டான். பணிவிடை செய்பவர் பலர், சிந்தையுடன் வாய்ப்பேச்சின்றி அவளைச் சூழ்ந்திருந்தனர். அந்தப்புரத்துக்கிழவிமார்கள், சற்றுத் தூரத்தில் இருந்துகொண்டு அவளைத்தேற்றிக்கொண்டிருந்தனர். அவளது முன்னெற்றி மயிர்கள் கோதி முடியப்படாமலே கலைந்திருந்தன. வேந்தன் வருவதைக் கண்டு, எதிர்கொண்டெழுந்திருக்கும் அவளை அதே மஞ்

சத்தில் உடனே உட்காரச் செய்து, தானும் உட்கார்ந்து கண்ணீர்பெருகுவதற்குக்காரணமறியாமல், திகிலடைந்து, தன் கரத்தினல் கண்ணீர்த் துளிகளைத் துடைத்துவிட்டு, மனைவியை நோக்கி மன்னவன் இவ்வாறு வினவினன். 'தேவி! உனக்கேன் இப்பெருந்துயரம்? வாய்திறவாமலே நீ ஏன் அழவேண்டும்? உனது இமைகள் கண்ணீர்த் துளிகளை, நல்முத்துச்சரங்களைத் தொடுப்பதுபோல் உதிர்க்கின்றனவே! நீ ஆபரணங்களை யணிந்துகொள்ளாமலிருப்பதேனே? கோரோசனைப் பொட்டிடாமலும், முன்னெற்றி மயிர்களைச் சேர்த்து முடியாமலும் இந்த நெற்றிக்கட்டைச் சும்மா வைத்திருப்பதேன்? தேவி! சற்று என்மீது அருள்புரிந்து, துயரத்திற்குக் காரணத்தை மொழிந்திடுவாயாக. நான் ஏதேனும் அபராதம் செய்தேனே? அல்லது பரிஜனங்களில் எவராயினும் ஏதேனும் பிழை செய்தனரோ? நான் நன்கு சிந்தித்துப் பார்த்தும், நான் சிறிதும் தவறியதாக எனக்குத் தோற்றவில்லை. எனதுயிரும் இராஜ்யமுங்கூட உன் அதீனமாகவேயல்லவா யிருக்கின்றன? ஸுந்தரி! மனத்துயரத்திற்கு முகாந்தரமின்னதெனக் கூறுவாயாக' என்று வினவியும்; விலாஸவதி மறுமொழியொன்றும் கூறுமலிருக்கவே, அருகிலிருந்த பரிஜனத்தை நோக்கி, அவள் கண்ணீர்விட்டழுவதன் காரணத்தைக் கேட்டான்.

பின்னர், அவளருகில் அனவரதமும் காத்திருப்பவளான மகரிகை யென்னும் தாம்பூலத் தட்டேந்துபவள், வேந்தனை நோக்கி இவ்வாறு கூறினள்:—"தேவ! தேவரீரிடம் சிறிதேனும் தவறுதலுண்டோ? குற்றேவல்புரியும் மற்றவர் அபராதம் செய்வதெங்ஙனம்? ஆனல் உண்மையென்ன வென்ருல்—'வெகு நாட்களாக மக்கட்பேறின்றி வீணுகவல்லவோ வாணளைக் கழிக்கின்றேன்' என்

பதுதான் தேவியின் சிந்தைக்குக் காரணம். இவ்வாறு வெகுகாலமாவே தவிக்கின்றார்கள். சில நாட்களாகவே யஜமானியவர்கள் சயனம், ஸ்நானம், போஜனம், பூஷணம் இவை முதலியவைகளைப் பெறுவதற்கு தினந்தோறும் வெகுப்பிரயாஸப்பட்டுப்பரிஜனங்கள் செய்யும் முயற்சியினாலன்றி பிரவ்ருத்திப்பதில்லை. தமது மனதுக்குத் துயரம் தர விரும்பாதவர்களாய், இதுகாறும் விஸனத்தை விளக்கிக் காட்டவில்லை. இன்றைக்கோ, நோன்பு தினமான சதுர்தசி யென்று, மஹாகாலனைத் தொழுவதற்குச் சென்றார். அத்தேவாலயத்தில் மஹாபாரதம் ஓதுகையில், 'புத்திரனில்லாதவர்க்குப் புண்ணிய லோகமில்லை; புத் என்னும் நரகத்தினின்றும் பாதுகாக்கிறான் என்றுதான் புத்திரன் என்று பெயர் வந்தது' என்கிற விஷயத்தைத்தேவிகள் செவியுறலாயினர். இதைக் கேட்டு வீட்டிற்கு வந்ததும், பணிவிடை செய்பவரால் பணிந்து வேண்டப்பட்டும், உணவையும் விரும்பவில்லை; கலங்கிய முகத்துடன் இவ்வாறு புலம்புகிறார்கள். இது தான் தத்துவம்; இனிதேவரது சித்தம்.'' அப்பால் வேந்தனும் ஓர்முகூர்த்தநேரம் மௌனமாயிருந்து, பெருமூச்செறிந்து, பின்வருமாறு கூறினன்-"தேவி! தைவாதீனமான இவ்விஷயத்தில் யாம் செய்யக்கூடியது யாது? போதும், அதிகமாய்ப் புலம்பாதே. தைவம் நம்மீது அருள்புரியவில்லை. முற்பிறப்பில் நாம் நல்வினை புரிந்தவரல்லவர். ஜன்மாந்தரத்திற் செய்த வினையல்லவோ இஜ் ஜன்மத்திற் பயன் தரும்? பெரு முயற்சி செய்தாலும் ஈசன் செயலை மாற்றி வைப்பதியலாது. மானிடரால் செய்ய வியன்ற தெவ்வளவோ, அவ்வளவையும் நாம் செய்யலாம். தேவி! ஆசாரியர்களிடம் அதிகம் பக்தி பண்ணு. தேவதைகளையும் முனிவர்களையும் ஆராதிப்பதில் அதிக

ஆதரவுகாட்டவேண்டும். முனிவரல்லவோ மேலான தெய்வம்? இங்ஙனம் நீகேள்விப்படவில்லையோ? அதாவது, முன்னால் சண்டகௌசிகரது மஹிமையால் மகததேசத்தில் பிருஹத்ரதன் என்னும் இராஜன், ஜராஸந்தன் என்னும் மைந்தனை யடைந்தனன்; தசரதமஹாராஜனும் வயது சென்றிருந்தும், விபண்டகமா முனிவரது புத்திரரான ருச்யச்ருங்கர் அருளால் நான்கு புதல்வர்களைப் பெற்றார்; வேறு சில இராஜருஷிகளும் முனிவர்களைப் பூஜித்ததால் புத்திரபாக்கியம் பெற்றிருக்கிறார்கள். மாமுனிவரைத் தொழுவது பயன்படாமற்போவதில்லை. தேவி! நானும் உன்னை கர்ப்பவதியாயிருக்கப் பார்ப்பதிற் பேராவாகொண்டிருக்கிறேன். எனது தேவியான நீ மஞ்சத்துகில் தரித்து, புதல்வனுடன் கூடிய மடியையுடையவளாய், என்றனை ஆனந்தப்படுத்துங் காலமெதுவோ? பற்களில்லாப் புன்சிரிப்புடன் கூடிய சிறு குழந்தை, எச்சமயம் எனக்கு மனக்களிப்பைத் தருமோ? என்று இவைகளையும் இன்னும் பலவாறான மனோரதங்களையும் எண்ணியெண்ணி, குழந்தையில்லாக் குறையினால் உண்டான துயரம் அக்கினிபோல் அல்லும் பகலும் என்னையுந்தான் வாட்டுகின்றது. ஆதலால், தேவி! துயரத்தை விட்டுவிடுவாயாக; தைரியத்திலும் தர்மத்திலும் புத்தியை நாட்டு; தர்மத்தை ஆவலுடன் அனுஷ்டிப்பவருக்கு மங்களப் பேறுகள் எப்பொழுதும் அருகிலிருக்கும்" என்று கூறி, தண்ணீரெடுத்து, கண்ணீர்ப்பெருக்குகளுடன் கூடிய அவளது முகத்தைத் தானே துடைத்தான். அன்பார்ந்த மொழிகளால் அவளுக்குத் தேறுதலையுண்டாக்கி, வெகு நேரம் அங்கிருந்து விட்டு, வேந்தன் வெளிக்கிளம்பி வந்தான். பிறகு விலாஸவதியும் சற்றுத் துயரந் தெளிந்து, உசிதமான தினசரி காரியங்களில் பிரவ்ருத்திக்கலானாள். அது

முதல் தைவங்களைத் தொழுவதிலும், அந்தணரை ஆராதிப்பதிலும், பெரியோரைப் பணிவதிலும் பேராதரவுகொண்டாள். எவரிடமிருந்து எவ்வெவற்றைச் செவியுறுகின்றாளோ, அவையனைத்தையும் கருத்தரிப்பதில் ஆசையினால் ஆவலுடன் செய்யலானாள். அதிகமான ஆயாஸத்தையும் அவள் ஒரு பொருட்டாகக் கருதவில்லை.—நாள் தோறும் எழுந்தெழுந்து, தங்கத்தாலான எள்ளிலைகளை இரத்தினங்களோடு அந்தணருக்கு தானம் செய்தாள். நாற்சந்திகளில் பற்பல புலிகளிட்டாள். பிரஸித்திபெற்ற தீர்த்தங்களில் மஞ்சனமாடினாள். அரசுமுதலான மஹா விருக்ஷங்களைப் பூஜித்து வலஞ்செய்து வணங்கினாள். சகுனசாஸ்திரம் அறிந்தோரை யுபசரித்தாள். பக்ஷி சாஸ்திரம் பயின்றவரிடம் பக்ஷம் பாராட்டலானாள். வேதியரைக்கொண்டு வேதங்களையோதுவித்தாள். மந்திரமோதி தூய்மையான தாழ்த்துகளைத் தரித்துக்கொண்டாள்.

இங்ஙனம் சில காலம் செல்ல, ஒருநாள் இரவின் கடைசி யாமத்தில் மன்னவன், விலாஸவதி வெண்மையான உப்பரிகையின் மீது இருப்பதாகவும், அவளது முகத்தினுள் ஸகலகலைகளோடு கூடிய பூர்ணசந்திரன் பிரவேசிப்பதாகவும் கனவுகண்டான். உடனே கண்விழித்து எழுந்து சுகநாஸனை யழைத்து, ஸ்வப்னச்செய்தியைச் சொன்னான். சுகநாஸனும், மிகக் களிப்படைந்து ‘தேவ ! நமக்கும் நமது பிரஜைகளுக்கும் வெகு நாட்களாயுள்ள அவாக்கள் பயன்பெறுவதா யறிகிறேன். சிறிது நாட்களுக்குள்ளாகவே புதல்வனது முககமலத்தைப் பார்க்கும் பேரின்பத்தைப் பெறுவீர்கள். இரவில் இப்பொழுதுதான் வெண்மையான உடையுடுத்து சாந்தமான திவ்யமேனியுடன் வேதியரொருவர் வந்து, மலர்ந்த வெண்தாமரை மலரை எனது மனோரமா தேவியின் மடியில் வைத்ததாக

நானும் கனவு கண்டேன். இவ்வித சுபசகுனங்கள் ஆனந்தத்தை அருகிலிருப்பதாய் முன்னதாய் அறிவிக்கின்றன. இரவின் இறுதியிற் காணப்படும் கனவுகள் பெரும்பாலும் பயன் தராமற் போவதில்லை. எப்படியும் சீக்கிரத்திலேயே மாந்தாதாவைப்போல் இராஜருஷிகள் அனைவருக்கும் முதன்மையான மைந்தன் தமக்குப் பிறக்கப் போகின்றான். குழந்தை பிறந்து, தமது ஸந்ததியும் குறைவின்றி விளங்கப்போகிறது' என்று கூறிக்கொண்டிருக்கும் மந்திரியைத் தனது கரத்தினாற் பிடித்துக் கொண்டு, அரசன் அந்தப்புரம் சென்று அவ்விரு கனவுகளையுஞ் சொல்லி விலாஸவதியையும் வியப்புறச் செய்தான்.

சில நாட்கள் சென்றதும் தேவதைகளின் அருளால் விலாஸவதி கர்ப்பவதியானாள். சிறுகச் சிறுக கர்ப்பம் முதிர்ந்துவர, அவள் மெல்ல மெல்ல ஸஞ்சரிப்பவளானாள். அடிக்கடியும் தொடர்ந்துவரும் கொட்டாவியினால் கண்களை நெறித்கொண்டு, சோம்பலுடன் பெருமூச்சு விட்டாள். ஒவ்வொரு நாளும் பற்பல சுவை பொருந்திய உணவுகளையும் விரும்பினாள். இங்கிதக்குறிகளைக்கொண்டு பரிஜனங்களும் இவள் கர்ப்பவதியென்று அறிந்து கொண்டனர். பின்னர் அவளது பரிஜனங்களுக்குள் தலைமையானவளான குலவர்த்தனை யென்னும் கிழவியொருத்தி, ஓர் சுபதினத்தன்று மாலைப்பொழுதில், பிரம்மனாற் செய்த பெரியதோர் ஆஸனத்தில் அமர்ந்திருக்கும் சுகநாஸனுடன் ஸல்லாபம் செய்துகொண்டு கொலுமண்டபத்தில் வீற்றிருக்கும் அரசனிடம் சென்று, அவனது செவிக்கருகில் விலாஸவதியின் விருத்தாந்தத்தை யறிவித்தனள். தாராபீடராஜன் என்றும் கேட்டிராத அவளது பேச்சைக் கேட்டு, அமுதப்பெருக்கில் மூழ்கியவன் போல

ஆனந்தபரவசனாய், அமைச்சனை முகமலர்ச்சியோடு பார்த்தான். இதற்குமுன் பிரபுவினிடம் பார்த்திராத பரமானந்தக்குறியைப் பார்த்தும், குலவர்த்தனை புன்னகைபுரிந்து மலர்ந்த முகத்துடன் வந்திருப்பதையுங் கண்டு, ஸ்வப்ன விஷயமும் மனதில் எப்போதும் குடிகொண்டுவரவே, அக்காலத்தில் அவ்வித மஹத்தான மகிழ்ச்சிக்குத் தகுந்த வேறோர் காரணத்தைக் காணாதவனாய் சுகநாஸன் தானாகவே உண்மை இன்னதென்று அநுமானித்து, சற்று ஆஸனத்தை நகர்த்தி அரசனுக்கு அருகில் வந்து, மெதுவாக வினவினன்:—'வேந்தே! அக்கனவு உண்மையாய்விட்டதோ? குலவர்த்தனை மிக்க மலர்ந்த கண்களையுடையவளாகக் காணப்படுகிறாள்! தங்களுடைய கண்கள்கூட ஆனந்தத்திற்குப் பெரியதோர் காரணத்தைக் கூறுகின்றன. மஹத்தான சுபவார்த்தையைக் கேட்பதில் ஆவலுடன் என் மனம் படபடக்கின்றது. ஆகவே விஷயமின்னதென்று மொழிந்தருள்வீராக.' மன்னவன் சற்று நகைத்து, 'இவள் உரைக்கும் விதமனைத்தும் உண்மையாகில், கனவிற் கண்டதெல்லாம் பயனுள்ளதுதான். ஆனால், நான் நம்பவில்லை; இவ்வளவு பாக்கியம் நமக்கேது? குலவர்த்தனையோ வீண்வார்த்தை சொல்லுபவளல்லள். எழுந்திருங்கள் நாம் நேரிற் சென்று இது உண்மைதானா வெனத் தேவியைக் கேட்டறிந்துகொள்வோம்' என மொழிந்து, கூடவிருந்த அரசர் அனைவரையும் அங்கு விட்டுவிட்டு, தான் பூண்டிருந்த ஆபரணங்களைக் கழற்றிக் குலவர்த்தனைக்கு அளித்து, சுகநாஸனுடன் எழுந்திருந்து, அடங்கா மகிழ்ச்சிகொண்ட தனது மனம் தன்னைத் துரிதப்படுத்த, முன்புறத்தில் ஊழியரெடுத்தேகும் தீபங்களால் இருளும் அகற்றப்பட, ஒவ்வோர் அங்கணத்தையும் தாண்டி அந்தப்புரம் சென்றான்.

அங்கு, துயிலறையில் இரக்ஷைகள் விமர்சையாகச் செய்யப்பெற்றிருந்தன; சுற்றிலும் திருநீறுகளைக்கொண்டு கோலங்களிடப் பட்டிருந்தன ; தலைப்புறத்தில் மங்கள கலசங்கள் அமைக்கப்பெற்றுமிருந்தன ; அச்சயனத்தின் மீது விலாஸவதி படுத்திருக்கக் கண்டான்; ஸ்வர்ணமய மான பூர்ணபாத்திரங்களில், மலர்களை நிரப்பி ஆசாரங் களையறிந்த அந்தப்புரக்கிழவிமார் அவளுக்கு ஆராத் திரிகை யெடுத்துக்கொண்டிருந்தனர்; வெகு பரபரப்பு டன் பரிஜனம் நீட்டிய கைகளைப்பற்றியவளாய், தனது கரத்தை இடது முழந்தாளில் ஊன்றிக்கொண்டு தனக்காக விலாஸவதி யெழுந்திருப்பதை நோக்கி, 'போதும், அதி கவுபசாரம் வேண்டேன் ; தேவி ! எழுந்திருத்தலாகாது' என மொழிந்து, வேந்தன் அவளுடன் அதே சயனத்தில் உட்கார்ந்தனன். தங்கக் கால்களையுடையதும், வெண் ணிறமாய் மேல் விரிவுத் துகிலுடன்கூடியதுமான கிட்ட விருந்த மற்றொரு சிறிய மஞ்சத்தில் சுகநாஸனும் அமர்ந் தான். அப்பால் அவள் கர்ப்பவதி யென்பது வாஸ்தவ மென்றுணர்ந்து, மன்னவன் மிகு மகிழ்ச்சியோடு சிறிது பரிஹாஸம் செய்ய விரும்பி, 'தேவி ! குலவர்த்தனை யேதோ கூறுகின்றாளே, அதென்ன அவ்விதந்தானோ ? என்று சுகநாஸர் வினவுகின்றார்' எனக் கேட்டான். அப் பொழுது விலாஸவதி சற்றுப் புன்னகை புரிந்து, ஸங் கோசத்துடன் தலைவணங்கிக்கொண்டனள்.

பிறகு, விலாஸவதிக்குக் கிரமமாகப் பிரஸவகாலம் நெருங்கிற்று. அப்பால் ஓர் சுபதினத்தன்று அடிக்கடி வெளியில் அடிபோட்டு நிழலளந்து நாழிகைகளைக் கண கிட்டு ஜோதிடர்கள் லக்கினம் குறித்துவர, உத்தம மான வேளையில், உலகத்தோருக்கு ஆனந்தமளிக்க வல்ல புதல்வன் விலாஸவதியினிடம் ஆவிர்ப்பவித்தான்.

பின்னர் மேளங்கள் பேரொலியுடன் முழங்கின. அந்தப் புரத்தோர், அரசர்களது கூட்டம், வாலிபர், விருத்தர், மற்றும் எல்லா ஜனங்களும் பரமானந்தபரிதர்களாய் பித்துப் பிடித்தவர்போல் நர்த்தனஞ்செய்தனர்.

மன்னவனே, தன் இளம் பாலகனது முகத்தைக் காண்பதிற் பரபரத்த மனமுடையவனாயிருந்தும், சுபமுகூர்த்தத்தை யெதிர்பார்க்கவேண்டியிருந்தது. பிறகு சோதிடர் உபதேசித்த உத்தம முகூர்த்தத்தில், சுகநாஸனொருவனையேகூட வழைத்துக்கொண்டு, பிரஸவகிருஹஞ் சென்றான். அவ்வகத்தின் வாயிற்படி மணிமயமான இரண்டு மங்கள கலசங்களுடன் கூடியதாகவும், இரு புறமும் இரண்டு கலப்பைகளும் உலக்கைகளும் வைக்கப்பெற்றதாகவும், இடையிடையில் அணியணியாய் சிறிய மணிகள் கோர்க்கப்பெற்ற மாவிலைத்தோரணத்தையுடையதாகவும் விளங்கியது. பிரஸவகிருஹத்திற் செய்யக்கூடிய மற்றும் மங்களகரமான அலங்காரங்களையும் அங்குள்ள ஸுமங்கலிகள் நிறைவேற்றி வந்தனர். அங்கு வேதியர் வெகுபேர் வேதமோதி சாந்திநீர்களை யிறைத்துக்கொண்டிருந்தனர். வயது சென்ற பெண்டுகள் பலர், பிரஸவ காலத்திற்கேற்க சுபமான ஸங்கீதங்களை மனோஹரமாய்ப் பாடினர். அவ்விட்டத்தில் இடைவிடாது நாராயணனது நாமஸஹஸ்ரங்களும் ஓதப்பட்டு வந்தன. நீரையும் நெருப்பையும் பரிசித்து பார்த்திவனும் உள்ளே சென்றான்.

அங்கு, பிரஸவத்தினால் வாடி வெளுத்த விலாஸவதியின் மடியின்மீது தனது ஆனந்தத்திற்கு ஆதாரமான தன் இளங்குழந்தையைக் கண்டான்; அக்குழந்தையோ, உடம்புடன் கூடப்பிறந்த அணிகள் போல் ஒளிவீசும் மஹாபுருடர்களது குறிகளுடன் கூடியதாகக் காணப்பட்டது. எண்ணியெண்ணித் தவம் புரிந்து பெற்ற அருமைப்

புதல்வனது முகத்தை இமைகளசையாமற் கண்களால் பானஞ்செய்பவன்போல் ஆவலுடன் பார்த்துப் பேரானந்தமடைந்தான். சுகநாஸனும், அன்பினால் தனது நேத்திரங்கள் அகல, மெல்லமெல்ல பாலகனது ஒவ்வோர் உறுப்பையும் உற்றுப் பார்த்து, அரசனை நோக்கி, 'வேந்தே! குமாரனுக்குத் தளிர்போன்ற இந்த நிலைமையிலேயே சக்கிரவர்த்திச்சின்னங்கள் பொருந்தியிருப்பதைப் பாருங்கள். ஸந்தியாகாலத்திற் சிவந்த பாலசந்திரன்போலிருக்கும் இவ்விளங்குழந்தையின் நெற்றியில், ஊர்ணையென்னும் மயிர்ச்சுழி நண்ணிய நாலிழைபோல் விளங்குகிறது. செந்தாமரை மொட்டுபோன்ற கரங்களிரண்டும், சங்கு சக்கிரங்களாலும் மற்றும் பல சுபமான இரேகைகளாலும் அலங்கரிக்கப்பெற்றிருக்கின்றன. இதோ இக்குழந்தை சங்கம் முழங்குவதுபோல கம்பீரத்தொனியுடன் அழுகின்றது' என்றான்.

இச்சந்தர்ப்பத்தில் மங்களகன் என்கிற ஒருவன், பரபரப்புடன் ஓடிவந்து, அடிபணிந்து அரசனை நோக்கி, "மன்னவ! தமது பாக்கியமே பாக்கியம்! சிரஞ்ஜீவியாய் வாழக்கடவீர்! இவ்வுலகத்தை வென்றீர்கள்! புண்ணியவானான சுகநாஸருக்கும் அவரது மூத்த மனைவியான மனோரமாதேவியினிடம் மைந்தன் பிறந்தான். இது செய்தி" என ஆனந்தபரவசமாகக் கூறினான். அரசன் அமுதவர்ஷம்போன்ற அவனது பேச்சைச் செவியுற்று 'ஓ! இஃதென்ன சுபபரம்பரை! ஆபத்து ஆபத்தையும், ஸம்பத்து ஸம்பத்தையும் தொடர்ந்து வருமென்கிற முதுமொழி முற்றிலும் உண்மை' என மொழிந்து, மிகுமகிழ்ச்சியுடன் சுகநாஸனை ஆலிங்கனம் செய்து, சிரித்துக்கொண்டே அவனது உத்தரீயத்தைத் தானாகவே பரிசாக அபஹரித்துக்கொண்டான். அப்படியே எழுந்தி

ருந்து, ஸ்துதிபாடகாள் கட்டியம் கூற, வாத்திய கோஷத்துடன் பரிஜனம் பின்தொடர, சுகநாஸனுடைய மாளிகைக்குச் சென்று, உத்ஸவத்தை யிரண்டு பங்கு அதிகமாகச் செய்வித்தான். ஆருவது தினத்து இரவில் ஷஷ்டீ தேவதையைப் பூஜித்துக் கண்விழிக்கும் சடங்கு நிறைவேறிற்று. பத்தாம் நாள், சுபமான முகூர்த்தத்தில் பணத்தையும் பசுக்களையும் பிராம்மணருக்கு தானஞ்செய்தான். இக்குமாரனது . தாயின் தாமரைமலர்போன்ற முகத்தினுள் பூர்ண சந்திரன் புகுந்ததாகக் கனவு கண்டு அதன் பின்னர் அவள் கர்ப்பவதியானதால், வேந்தன் தனது மைந்தனுக்கு சந்திராபீடன் என நாமகரணம் செய்தான். மறுநாள் சுகநாஸனும், அந்தணருக்கேற்ற சடங்குகளை அனுஷ்டித்து, அரசனது அனுமதியையும் அனுஸரித்துத் தனது தநயனுக்கு வேதியர்கேற்க வைசம்பாயனன் எனப் பெயரிட்டான். கிரமமாக சூடாகரணம் முதலிய சிறு பிராயத்திற் செய்யவேண்டிய சடங்குகளெல்லாம் செய்து முடிக்கப்பெற்றவனை சந்திராபீடனுக்குக் குழந்தைப் பருவமும் கழிந்து வந்தது.

தாராபீடனும், பட்டணத்திற்குப் புறம்பாக, சிப்ரா நதிக்கரையில், அரைக் கிரோசதூரம் விஸ்தீர்ணமுள்ளதும், சுண்ணச்சாந்து பூசி வெண்ணிறமானதும், இமய மலைச் சிகரங்களின் பந்திகள் போன்றதுமான மண்டலாகாரமான மதிலால் சூழப்பெற்ற கல்விச்சாலை யொன்றைக் கட்டிமுடித்தான். அதன் கீழ்மாடியில் கெரடியாடுங் கூடங்களையும், விளையாடுவதற்கான வேறு ஸ்தலங்களையும் அமைத்தான். அச்சாலையில் அகில வித்தைகளையும் போதிப்பதற்கு அநேகம் ஆசிரியர்களையும் ஆராய்ந்தெடுத்து நியமித்தான். சிங்கக்குட்டியைக் கூட்டிலடைப்பது போல அச்சிறுவனை அக்கல்விச்சாலையிலேயே இருக்கச்

செய்தான். குருமார்களது குமாரர்களை மாத்திரமே பரிஜனபரிவாரங்களாகவும் ஏற்படுத்தினான். சிறு குழந்தைகளுக்கேற்ற விளையாட்டுகள் எல்லாவற்றையும் அகற்றி, வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்தாமலிருக்கவுஞ் செய்தான். ஸகல கலைகளையும் கற்கும் பொருட்டுச் சந்திராபீடனையும் வைசம்பாயனையும் ஓர் சுபத்தினத்தன்று குருமார்களிடம் ஒப்புவித்தான். நாள்தோறும் எழுந்தெழுந்து சொற்ப பரிஜனம் பின்செல்ல, விலாஸவதியுடன் அக்கல்விச்சாலைக்குச் சென்று, பார்த்திவன் தன் புதல்வனைப் பார்த்து வருவான். சந்திராபீடனுக்குக் கல்வியில் தேர்ந்த உபாத்தியாயர்கள் தங்கள் தங்களது திறமையைத் தெளிவாக விளக்கிக் காட்டி விஷயங்களை போதித்து வந்தனர். புத்தித் திறமையும் அமைதியும் அமைந்த மாணுக்கனைப் பெற்றதால் ஆசிரியர்கள் மிக்க உத்ஸாஹமடைந்து, அவனுடன் வித்தைகளை உபதேசிக்கலானார்கள். அவன் வியாகரணம், மீமாம்ஸை, தர்க்கம், தர்ம சாஸ்திரம், இராஜநீதிகள், கொடியாடும் வித்தை, அகில ஆயுதப்பயிற்சிகள், தேரோட்டுதல், யானையேற்றம், குதிரையேற்றம், வீணை வேணு மிருதங்கம் முதலிய வாத்தியங்களை வாசித்தால், பரதமுனிவர் முதலானவர்கள் இயற்றிய நாட்டிய சாஸ்திரங்கள், நாரதர் முதலியவர்கள் பிரசாரம்செய்த ஸங்கீதசாஸ்திரம், இயந்திரப் பிரயோகங்கள், விஷசாஸ்திரம், சுரங்கங்களைக் கண்டு பெயர்த்தல், நீந்தல், தாண்டல், குதித்தோடல், ஸகல லிபிகள், ஸமஸ்த தேசபர்ஷைகள், மற்றுமுள்ள பற்பல கலைகள் இவைகளிலெல்லாம் ஒப்பற்ற திறமையைப் பெற்றுவிட்டான். எப்பொழுதும் சிலம்பம் பழகிச் சரீரத்தை யுழைத்துவருபவனை இவனுக்குப் பீமனைப்போல் அமைந்திருந்த மிகுந்த வலிமையானது சிறு பிராயத்திலேயே உலகில்

அனைவருக்கும் வியக்கக்கூடியதாயிருந்தது. பாலியப் பருவத்தில்தானே இவன் ஒவ்வொரு வாள்வீச்சால் பனைமரங்களையும் பங்கயத் தண்டுகளைப்போல் அறுத்து வீழ்த்துவான். பத்துப்புருடர்கள் சுமக்கக்கூடிய இருப்புத் தடியையெடுத்துக் கொரடியாடுவான். தேகவலிமை யொன்றைத் தவிர்த்து மற்றக் கலைகளெல்லாவற்றிலும் வைசம்பாயனன் சந்திராபீடனை யொத்திருந்தான். ஸகலகலாவல்லவனென்கிற வெகுமானத்தாலும், சுகநாஸனிடமுள்ள கௌரவத்தாலும், பிறந்ததுமுதல் கூடியிருந்து புழுதி விளையாடியதாலும் வைசம்பாயனன் சந்திராபீடனுக்கு இரண்டாவது இருதயமெனக்கூடியவாறு முற்றிலும் விச்வஸிக்கத்தகுந்த தோழனாயினன். சந்திராபீடன், ஒரு நொடிப்பொழுதேனும் அவனை விட்டுத் தனித்திருக்கக் கூடாதவனானான்; வைசம்பாயனனும், அங்ஙனமே அவனை விட்டுப் பிரிந்திருக்கத் துணிவுபெறவில்லை.

இவ்வாறு கல்விகளையெல்லாம் கசடறக் கற்றுவந்த அந்த சந்திராபீடனுக்கு யௌவனப்பருவம் வரத் தொடங்கவே,. ஏற்கனவே இருந்த வடிவழகானது இன்னும் மேலோங்கியது; ஸௌந்தரியம், செல்வம் இவற்றுடன் மார்பும் விசாலித்தது ; உறவினர்களது மனோரதங்களுடன் கூட திரண்டுருண்டு துடைகளிரண்டும் பூரித்தன ; குறளுடன்கூட இருதயமுங் கம்பீரத்தன்மையை யடைந்தது. சந்திராபீடன் இப்படிப் படிப்படியாக யௌவனப் பருவத்தைப் பெற்று, ஸகல கலைகளாகும் கடலைக் கடந்து கரையேறிவிட்டதாக ஆசிரியரால் ஆமோதிக்கப்பெற்றானென அரசன் அறிந்து, அவனை அழைத்து வருவதற்காக ஸேனைத்தலைவனான வலாஹகன் என்பவனை அழைத்து குமாரனிடம் அனுப்பினன். அவன் கல்விச்சாலைக்குச் சென்று வாயிற்காப்பவரிடமிருந்து அனுமதிபெற்று, உள்ளே

சென்று சென்னிவணங்கி, இராஜகுமாரனது அனுமதி யினால் வணக்கத்துடன் ஆஸனத்தில் உட்கார்ந்தான். ஒரு முகூர்த்தகாலம் சும்மாவிருந்து, வலாஹகன் சந்திரா பீடனுக்குச் சற்று அருகிற் சென்று, விநயத்துடன் இவ்வாறு விண்ணப்பஞ் செய்தான்:—"இராஜகுமாரா ! மஹா ராஜா இவ்வாறு கட்டளையிடுகிறார்:—'எமது ஸகல மனோ ரதங்களும் ஸம்பூர்ணமாயின். பற்பல சாஸ்திரங்களையும் நீ பயின்றிவிட்டனை. கலைகளெல்லாம் கற்கப்பட்டன. ஆயுதவித்தைகள் எல்லாவற்றிலும் நீ மேலான திறமை யைப் பெற்றாய். கல்விச்சாலையினின்றும் விலகலாமென்று ஆசிரியர் அனைவராலும் ஆமோதிக்கப் பெற்றாய். சிக்ஷை களைப் பெற்று, ஸகல கலைகளுடனுங்* கூடி, பௌர்ணமீசந் திரனைப்போற் புதிதாக வெளிக்கிளம்பும் உன்னை ஜனங் களெல்லாம் கண்டு களிக்கட்டும். உனது தரிசனத்தின் பொருட்டு அந்தப்புரத்தோர் அனைவரும் அதிக ஆவலுள் ளவர்களாயிருக்கின்றனர். நீ கல்விச்சாலையிற்போய் வஸி க்கத் துவக்கியபிறகு பத்தாவது வருடம் இதோ நடை பெறுகின்றது ; ஆறாவது பிராயம் நடைபெறுகையில் நீ கல்விச்சாலையிற் புகுந்தனை. ஆகவே இப்பொழுது உனக்கு வயது பதினாறு. நீ இன்றுமுதல் ஆசார்யர்களின் அடி பணிந்து, நிர்ப்பந்தங்களினின்றும் நீங்கியவனாய், சுயேச் சையாக இராஜபோகங்களை யனுபவிப்பாயாக. நமது சிற்றரசர்களை யெல்லாம் ஆதரிக்கக்கடவாய். அந்தணரை ஆராதி. பிரஜைகளையெல்லாம் பரிபாலனம் செய். உற வினரை ஆனந்தப்படுத்து' என்பது அரசன் மொழி.

---

* கலைகள் = 64 கலைகளென்னும் வித்தைகள்; சந்திரனு டைய பிறைகள் [பிறைகளெல்லாவற்றுடனும் பூர்ணசந்திரன் உதிப்பதுபோல், கலைகள் அனைத்தையும் அடைந்த நீ வெளிக் கிளம்பு என்று கருத்து.]

ஆகையால் இதோ மூவுலகத்திற்கும் முக்கிய மாணிக்கம்
போன்றதும், வாயு கருடன்களுக்குச் சமான வேகத்தை
யுடையதுமான இந்திராயுதம் என்று பெயர்பெற்ற குதி
ரையானது உமக்காக மஹாராஜாவால் அனுப்பப்பட்டு
வாயிலில் நிற்கின்றது. இந்த அச்வமோ, பாரஸீகதேயத்
துப் பிரபு, 'கடல் நீரிலிருந்து கிளம்பியதும், கர்ப்பத்தி
லிருந்து ஜனிக்காததுமான மிகவும் அருமையான இக்
குதிரையை மன்னவனுக்குரியதெனக் கொண்டுவந்தேன்'
என்று சொல்லி யனுப்பினர். ஆனதால் இதன்
மேல் ஏறி இதை யநுக்கிரஹிக்கவேண்டும். இதோ
மிருந்த வினயம்'வாய்ந்தவரும், குலக்கிரமமாகத்தொன்று
தொட்டுவந்தவருமான அரசகுமாரர்கள் ஆயிரமாயிரமாய்
உம்மை உபசரிக்கும் பொருட்டு அனுப்பப்பட்டு, வாயி
லில் அச்வங்களின் மீதிருந்தவாறே காத்துக் கொண்டி
ருக்கின்றனர்" என்றவாறு வலாஹகன் சொல்லி ஓய்ந்த
தும், சந்திராபீடன், தனது தந்தையின் ஆஞ்ஞையை
ஆதரவுடன் ஏற்று வெளியிற் செல்ல விரும்பியவனாய்,
புதிதான கார்முகில் முழக்கம்போல் கம்பீரமான தொனி
யுடன், 'இந்திராயுதத்தை இங்கு கொண்டுவரலாம்' எனக்
கட்டளையிட்டான். அவன் அவ்விதம் உத்தரவு செய்ததும்,
இரண்டு குதிரை வீரர்களால் இரு புறமும் தங்கக் கடிவா
ளங்களைப் பற்றிக் கொண்டு இந்திராயுதம் இராஜகுமார
னுக்கு முன்னிலையில் கொண்டுவரப்பட்டது. அத்யுன்னத
மான அதன் கழுத்தை யிழுத்துத் தாழ்த்திப் பிடித்துவரு
வதற்கு அப்புருடர்கள் வெகு பிரயாஸப்பட்டார்கள். சந்
திராபீடன் அந்த மஹாச்வத்தைக்கண்ணுற்றான். அது ஒரு
புருடன் தனது புயத்தை உயரத்தூக்கித் தொடக்கூடிய
அவ்வளவு உன்னதமான முதுகையுடையதாகவும், தன்
ஜடரக்குழி படபடக்க அடிக்கடி கனைக்கும் கம்பீரத்தொ

னியினல் வெகுவேகசாலியென்று கர்வங்கொண்டகருடனை வெருட்டுவதுபோல் தோற்றுவதாயும் இருந்தது; மேலும் அதன் கால்கள்செதுக்கி ஒழுங்காக்கப்பட்டதுபோலவும், மார்பு விசாலமாக்கப் பட்டதுபோலவும், முகம் மழமழ வென்று மெருகிடப்பெற்றதுபோலவும், உலகம் அனைத்தையுங்கொண்டு விலைமதிக்கத் தகுந்ததாகவும் காணப்பட்டது. இதுகாறும் காணப்பெறுததும், அஸாதாரணமான இலக்ஷணங்கள் யாவும் அமைந்ததுமான அவ்வச்வத்தின் அதிசயிக்கத்தக்க உருவத்தைப் பார்வையிட்டதும், வெகு தீரத்தன்மையனுன சந்திராபீடனும் ஆச்சரியபரவசனுனன். மேலும் இங்ஙனம் யோசிக்கலானுன்:—'வாஸுகியைச் சுற்றி மந்தரகிரிகொண்டு கடல்நீரைக் கடைந்து, இந்த அச்வரத்தினத்தைப் பெருது, தேவாஸுரர்கள் வேறென்ன இரத்தினத்தைக் கண்டெடுத்தனரோ? உச்சைச்ரவஸ் என்னுங் குதிரையைக் காட்டி மஹேந்திரனை ஸாகரம் வஞ்சனையல்லவா செய்துவிட்டது? பகவானுன நாராயணனுடைய கண்களுக்கு இவ்வளவு காலமாகவும் இது புலப்படவில்லை போலும்! இல்லையேல் அவர் எளிய கருடனை ஏன் வாஹனமாகக் கொள்ளவேண்டும்? ஓ! என்ன ஆச்சரியம்! எனது தந்தையின் இராஜ்யலக்ஷ்மியோ, தேவேந்திரனது செல்வத்தையும் மீறியிருக்கின்றது! அனதுபற்றியே, எங்கும் பெறத்தகாத இத்தகைய இரத்தினங்களெல்லாம் நன்கொடையாக அவருக்குக் கிடைக்கின்றன. மிகவுங் காந்தி பொருந்தியிருப்பதானும், வெகு வலிமையுடையதானதாலும், இதன் உருவம் ஏதோ தைவஸம்பந்தமுள்ளதுபோல் உண்மையாகவே ஏறுவதில் எனக்கு அச்சமுண்டாக்குகிறது. தேவதைகளும் முனிவரது சாபத்தினல் தமது தேஹங்களை விட்டு, சாபச்சொற்களால் வந்து ஸம்பவித்த வேறு சரீரங்களிற் சேர்

ந்து வஸிப்பதுண்டு. இதுவும் அங்ஙனம் சாபத்தைப் பெற்ற ஓர் மஹாத்மாவாகத்தான் இருக்கவேண்டும். என் நெஞ்சம் இதற்கு தைவத்தன்மையிருப்பதாகக் கூறுவது போலிருக்கின்றதே! ' என்று சிந்தித்துக்கொண்டே அதன்மேல் ஏறவேண்டி ஆஸனம் விட்டெழுந்தான். அக் குதிரைக்கு அருகிற் செல்லாமலே, 'ஓ! மஹாஅச்வமே! நீ எவராகவேனும் இரு; உன்றனுக்கு வந்தனம் செய்கிறேன். உன்மேல் ஏறுவதாகும் எனது இவ்வபராதத்தை எவ்விதத்திலும் மன்னிப்பாயாக. அறியமுடியாமலிருக்கும்வரையிவ் அமரர்களாயிருப்பினும் அனுசிதமான பரிபவங்களைப் பொறுக்கவேண்டி நேரிடுகின்றது' என தனக்குள் வேண்டிக்கொண்டான். இந்திராயுதம், அவனது அபிப்பிராயத்தை அறிந்ததுபோல் சிரஸ்ஸை யசைத்துப் பிடரிமயிர்களை யடித்துக்கொண்டு, அவனைச் சாய்ந்து பார்த்துவிட்டுக் கனைத்தது. இக் கனைப்புத் தொனியினால் சந்திராபீடன், இந்திராயுதத்தினிடமிருந்து ஏறுவதற்கு அனுமதி பெற்றவன் போல் அதன்பேரில் ஏறிக்கொண்டு, மூன்று லோகத்தையும் ஓர் சாணளவில் அடங்கியதுபோல் எண்ணியவனாய் வெளிக் கிளம்பினான். வெகு வன்மையான குளம்புகளின் உரத்த சப்தத்தினாலும் கனைக்கும் முழக்கத்தினாலும் ஸகல புவனங்களையும் செவிடாகச் செய்வதுபோல் வெகு விஸ்தாரமாக வெளியில் நிற்கும் குதிரைப்படையைக் கண்ணுற்றான். சந்திரோதயத்தினால் ஸாகர ஜலம்போல், சந்திராபீடன் வெளிக்கிளம்பியதால் அக்குதிரைப்படை யாவுமே ஒருவாறு சலித்தது. ஒருவரை யொருவர் முந்திக் கொண்டு அடிபணிய ஆவலுள்ள அவ்வரசகுமாரரெல்லாம் வெகு பரபரப்புடன் குடைகளைக் களைந்து, வெறுஞ் சிரஸ்ஸுடன் வெகுப் பிரயாஸத்துடன் சந்திராபீடனைச் சூழ்ந்

துகொண்டனர். ஒவ்வொருவருடைய பெயரையுங் கூறி, தனித்தனியாக வலாஹகனால் அறிவிக்கப்பட்டவர்களாக, அவரவர்கள் தூரத்திலிருந்தவாறே வந்தனஞ் செய்தனர். சந்திராபீடனும் அவர்களனைவரையும் ஸம்மானித்துவிட்டு, பின்பு, தனக்குத் தகுந்த குதிரையின்மேல் ஏறிக்கொண்டு வைசம்பாயனன் பின்செல்ல, பட்டணம் நோக்கிப் பிரயாணமானான். அப்பொழுது நல்முத்துச்சரங்களால் சுற்றிலும் அலங்கரிக்கப் பெற்றதும், மேற்புறத்திற் சிங்கப் பதுமையுடன் கூடியதுமான தங்கத்தண்டுள்ள வெண்குடை அவனுக்குப் பிடிக்கப்பட்டது. ‘ஜய சீலனாக இருந்து பல்லாண்டு வாழக் கடவாய்’ என்று இனிமையான சொற்களால் ஸ்துதி பாடகர்கள் அவனுக்குப் புகழ் கூறினார்கள். சந்திராபீடன் கிரமமாக நகரமார்க்கம் வந்தடைந்தான். பட்டணத்து ஜனங்கள் யாவருங்கூட வேலைகளையெல்லாம் நிறுத்தி விட்டு, அவனைக் காண்பதற்காக நகரமார்க்கம் வந்துசேர்ந்தனர். அவர்கள் அனைவரும், தைவத்தன்மை பொருந்தியவனாகத் தோற்றிய சந்திராபீடனுக்கு வந்தனம் செய்தனர். ஆயிரக்கணக்கான வீட்டுச் சாளரங்களின் கதவுகள் நன்கு திறந்துவைக்கப்பட்டிருந்தனவாதலால், நகரமும் சந்திராபீடனது தரிசனத்தில் ஆவலுடன் வரிசை வரிசையாகத் த[illegible]து கண்களைத் திறந்து கொண்டிருப்பது போலத் தோன்றிற்று. சந்திராபீடனும் அரண்மனைவாயிலில் வந்துசேர்ந்து குதிரையை விட்டுக் கீழிறங்கினான்.

இறங்கியதும் சந்திராபீடன் வைசம்பாயனனது கரத்தைப் பற்றிக்கொண்டு, வெகு வணக்கத்துடன் வலாஹகன் வழிகாட்டிக் கொண்டு முன் செல்ல, அரண்மனையினுட் சென்றான். அங்கு வெண்சட்டைத் தரித்து, பொற்பிரம்பேந்தியவர்களாய், வாயிற்படித் தூண்களுக்கு

அருகிற் சித்திரிக்கப் பெற்றவர்போலவும், செதுக்கிய பதுமைகளைப் போலவும் நின்றுகொண்டிருக்கும் உன்னதமான வாயிற்காப்பவர் இராப்பகலாய்க் காத்துக் கொண்டிருந்தனர். உட்புறத்தில் ஏராளமான போர்க் கருவிகளுடன் கூடியவைகளும், ஸர்ப்பக் கூட்டங்களால் கவியப்பெற்ற பாதாள கேவிகளுக்கொப்பானவைகளும், அதிக ஆழமுள்ளவையுமான ஆயுதசாலைகள் உண்டு. ஒரு புறத்தில் கந்தமாதனன் என்னும் மத்த கஜமொன்று, தனது இடது தந்தத்தின் முனையில் துதிக் கையை வைத்துக்கொண்டு, முக்காற்பங்கு மூடிய கண்களையுடையதாய் சற்றேனும் காதுகளை யசைக்காமல், ஸங்கீதஸமயத்தில் முழங்கப்படும் மிருதங்கத் தொனியைக் கேட்டுக்கொண்டிருந்தது. கம்பளப் போர்வை போர்த்த முதுகுகளுடன் அப்பொழுதே கொட்டில்களிலிருந்து கொண்டுவரப்பெற்ற குதிரைகள் அங்கு அணியணியாய் நின்றுகொண்டிருந்தன. அங்கு நீதிமண்டபம் ஒன்றில் பெருந்தன்மைக்கேற்ற உடைகளை யுடுத்திக் கொண்டு, பிரம்பினால் ஆகிய உன்னதமான ஆஸனங்களில் நியாயாதிபதிகள் வீற்றிருந்து நீதிவிசாரணை செய்து வந்தனர். ஸகல நகரங்கள் கிராமங்கள் இவற்றின் பெயர்களை யறிந்து உலகம் யாவும் ஓர் அகம் போலிருக்கக் காண்கிறவர்களும், அகில புவனத்து வியாபாரங்களையும் வரைந்து கொண்டிருப்பதால் இதை தர்மராஜன் இராஜதானியாகத் தோற்றுவிப்பவர்களுமான எழுத்துவேலை யதிகாரிகள் அந்நீதி மண்டபத்தின்கண் ஆயிரமாயிரமாகச் சாஸனங்களை யெழுதிக் கொண்டிருந்தனர். நக்ஷத்திரக் கூட்டம்போல் முத்துத் தோரணங்கள் ஒளிவீசின. இயந்திரங்களிலிருந்து தண்ணீர் சொரியப்பெற்று அநேகப் பிரதேசம் குளிர்ச்சியாக்

கப்பட்டு வந்தது. வாயிற்காப்பவர் ஓடிவந்து அடி
பணிந்து வழிகாட்டினர். ஆசாரங்களில் வல்லவரான அந்
தப்புரக் கிழவிமார் வெளிவந்து மங்கள ஆராத்ரிகைகளை
யெடுத்தனர், அநேக அங்கணங்களைத் தாண்டி தன் தந்
தையிருக்குமிடம் சென்றான். அங்கு தன் குலத்திற்குத்
தொன்றுதொட்டு வந்தவரும் உயர்குலத்தில் உதித்த
வரும் அன்பார்ந்தவருமான சரீரரக்ஷாதிகாரிகள் சூழ்ந்து
நிற்க, வெண்மையான சிறியதோர் மஞ்சத்தின் மீது தன்
தந்தை வீற்றிருந்தார்.

'இதோ பார்ப்பீர்களாக' என வாயிற்காப்போன்
கூறியதும், தலை வணங்கி வந்தனஞ் செய்த அச்சந்திரா
பீடனை 'வரவேண்டும் அப்பா! வரவேண்டும்' என்றுசொல்லி
தூரத்திலிருந்தவாறே புயங்களை நீட்டி தாராபீடன் ஆலிங்
கனம் செய்துகொண்டான். பிறகு தகப்பனாரது பாதபீ
டத்திற்குச் சமீபத்தில், தனது தாம்பூலத் தட்டேந்துப
வள் வந்து, வெகு துரிதமாக மடித்து ஆஸனமாகப் போ
ட்ட உத்தரீயத்தை 'அப்பால் எடுத்துவிடு' என்று மெது
வாகக்கூறி, தன்பாதத்தின்முனையினால் அதைவிலக்கிவிட்டு,
தரையிற்றானே சந்திராபீடன் உட்கார்ந்தான்; வைசம்பா
யனனும் வேந்தனால் தனது மைந்தனைப்போலவே வேற்று
மையின்றி ஆசையுடன் அணைந்துகொள்ளப்பட்டு, பின்பு
அருகிலிருந்த அவனது ஆஸனத்தில் அமர்ந்தான். ஓர்
முகூர்த்தகாலம் அங்கிருந்தான். அப்பால் தன்து தந்தை
'அப்பா! குழந்தாய்! நீ போய், உனதிடம் வாத்ஸல்யம்
வாய்ந்த உனது அன்னையைத் தொழுதுவிட்டு, உன்னைக்
காண்பதிற் பேரவாகொண்ட மற்றத் தாய்மார் எல்லோ
ருக்கும் தரிசனம் தந்து களிக்கச் செய்வாயாக' என
மொழிய, வினயத்துடன் அவன் எழுந்து, பரிஜனங்களையெல்
லாம் நிறுத்திவிட்டு, வைசம்பாயனனை மாத்திரம் அழைத்

துக்கொண்டு, அந்தப்புரத்திற் செல்லக்கூடிய சில பரிஜனம் வழி காட்ட, அந்தப்புரத்தினுட் சென்று தனது அன்னையைக் கண்டு வந்தனம் செய்தான். அச்சமயம் சில ஸந்நியாஸ ஸ்த்ரீகள் புண்ணியகதைகளைச் சொல்ல, அவள் அவற்றை சிரவணம் செய்து கொண்டிருந்தாள்.

அவள், பரபரப்புடன் அவனை யெடுத்து உச்சிமுகந்து ஆலிங்கனம் செய்துகொண்டாள். பிறகு தன் ஆஞ்ஞையை அந்த க்ஷணமே நிறைவேற்ற வல்ல பரிஜனம் பக்கத்திலேயே காத்திருக்கையிலும், தானுவே ஆராத்ரிகையெடுத்து அவனுக்காக அனேக சுபங்களைக் கோரினுள். பின்னர், அங்ஙனமே வைசம்பாயனனுக்கும் தகுந்தவாறு உபசாரஞ் செய்து, தானும் உட்கார்ந்தாள். அப்பொழுது வினயத்துடன் தரையில் உட்காரப்போகும் சந்திராபீடனை வலிய இழுத்துத் தன் மடியின்மேல் உட்காரச் செய்தனள்; வைசம்பாயனனும், வெகு விரைவாகப் பரிஜனத்தால் இடப்பட்ட பீடத்தில் உட்கார்ந்தான். விலாஸவதி சந்திராபீடனைப் பலமுறை கட்டித் தழுவி, நெற்றியிலும், மார்பிலும், தோள்களிலும் அடிக்கடி தடவிக் கொடுத்து அவனை நோக்கிக் கூறத்தொடங்கினுள்:—"குழந்தாய்! உன் தந்தை வெகு கன்னெஞ்சரப்பா; ஏனெனில், உலகத்தோரனைவராலும் கொண்டாடத் தகுந்த உன் கோமளமான இவ்வடிவமானது அவராலல்லவோ இவ்வளவு காலமாய் வருந்தியது? குமாரது நீண்டகால நிர்ப்பந்தத்தை நீ எங்ஙனம் ஸஹித்தனையோ? ஒகோ! நீ குழந்தைப் பருவத்திலிருக்கையிலும், உன் மனம் பாலருக்கு இயல்பான விளையாட்டுகளிற் பற்றில்லாதிருப்பது மிக்க வியக்கத் தக்கதே! ஆ! குருஜனங்களிடம் நினது பக்திக்கு நிகரேது மிலது. இப்பொழுது தந்தையின் அருளால் நீ எப்படியாவது ஸகலகலாவல்லவனுயினை. இன்னும்

சிறிது நாட்களில் உன்றனுக்கு இசைந்த மனையாட்டியுடன் கூடியிருக்கவும் காண்பேனாக". அதுகேட்டு வெட்கத்தினால் சந்திராபீடன் புன்னகைகொண்டு தலைவணங்கிக் கொண்டான். மீண்டும் இவனது கபோலத்தை யெடுத்து விலாஸவதி முத்தமிட்டுக் கொண்டாள். அப்பால் அந்தப்புரத்தோர் அனைவருக்கும் தான் தரிசனம் தந்து, அங்கிருந்து வெளிவந்து, அரண்மனை வாயிலில் நிற்கும் இந்திராயுதத்தின் மீதேறி, அவ்வாறே அவ்வரசகுமாரரது கூட்டம் பின்தொடர, சுகநாஸனைக் காண்பதற்குச் சென்றான். சுகநாஸகிருஹத்தின் வாயிற்படியிற் குதிரையை நிறுத்திவிட்டு, வைசம்பாயனன் கரத்தைப் பற்றிக்கொண்டு, உட்சென்று, நூற்றுக்கணக்கான அரசருக்கிடையில் அமர்ந்திருக்கும் தன் தந்தைக்குச்சமானமான சுகநாஸனைப் பார்த்து, வினயத்துடன் வந்தனஞ் செய்தான். இராஜகுமாரனைக் கண்டு பரபரப்பாய் அங்கிருந்த சிற்றரசர்கள் அனைவரும் எழுந்திருந்தனர்; உடனே சுகநாஸனும் வெகு ஆதரவுடன் சில அடிதூரம் எதிர்கொண்டுபோய், ஆனந்தபாஷ்பத்தைப் பெருக்கிக்கொண்டு வைசம்பாயனனோடு சந்திராபீடனையும் அன்புடன் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டான். பிறகு ஆதரவுடன் இடப்பெற்ற இரத்தினபீடத்தை விட்டுவிட்டு இராஜகுமாரன் தரையிலுட்கார்ந்தான்; பின்பு வைசம்பாயனனும் அப்படியே செய்தான். இராஜபுத்திரன் தரையில் உட்கார்ந்ததும், சுகநாஸனைத் தவிர்த்து மற்ற மன்னவர் அனைவரும் தமது ஆஸனங்களை அகற்றி நிலந்தனில் அமர்ந்தனர். சுகநாஸன் க்ஷணநேரம் சும்மாவிருந்து, அன்பினால் உரோமம் சிலிர்க்க அடங்காத ஆனந்தத்துடன் சந்திராபீடனை நோக்கி இன்னனங் கூறினான்:—

"அப்பா! சந்திராபீட! நீ கல்விகளைக் கசடறக் கற்றனை; யௌவனப்பருவத்தையுமடைந்திருக்கிறாய். ஆகவே இப்

பொழுதுதான் தாராபீடராஜன் அரசு செலுத்துவதன்
முழுப்பலனையும் பெற்றவராகிறார். அனேக ஜன்மாந்தரங்
களிற்செய்த நல்வினைகளெல்லாம் இப்பொழுதே பலித்தன.
இப்பொழுதுதான் நம் குலதைவங்கள் குளிர்ந்தமுகங்களை
யுடையவைகளாயின. புண்ணியம்செய்யாதவருக்குப் புவன
மெங்கும் புகழத்தக்க உன்னைப்போன்றவர் புத்திரராகப்
பிறக்கமாட்டார். ஓ! இச்சிறியபிராயமெங்கே! மானிடத்தன்
மைக்கு மேலான இத்திறமை யெங்கே! வித்தைகளை யெல்
லாம் விரைவாகக் கிரஹிக்கும் இந்த ஸாமர்த்தியந்தான்
எத்தகையது! ஓகோ! பிரஜைகளெல்லோரும் பெரும்
பாக்கியசாலிகளாயினர்; பரத பகீரதர்களுக்கொப்பான
நீ இவர்களைப் பரிபாலிக்கப் பிறந்தனையே! எப்படியும்
தனது கோரப்பற்களால் ஆதிவராஹனைப்போல், நீயும்
உனது புயத்தினால் புவனபாரத்தைப் பிதாவுடன் கல்ப
கோடி காலமளவும் வஹிக்கக் கடவாய்'' என ஆசிகூறி,
தானாகவே புஷ்பம், சந்தனம், ஆடை, ஆபரணம் முதலிய
வற்றால் ஆதரவுடன் உபசரித்து, அவனுக்குப் போக
விடையளித்தான். குமாரன் உடனே எழுந்து அந்தப்புரஞ்
சென்று, வைசம்பாயனனுடைய மாதாவான மனோரமை
யைப் பார்த்துவிட்டு வெளிவந்து, இந்திராயுதத்தின்
மேலேறி, தன் தந்தையினால் தனது அரண்மனையின்
பிரதிபிம்பம்போல் முன்னமே அமைக்கப்பெற்றுள்ள
தன் மாளிகைக்குச் சென்றான். அங்கே உள்மண்டப
மொன்றில் ஒரு மஞ்சத்தின்மீது சற்று நேரம் அமர்ந்திரு
ந்து, அவ்வரசகுமாரருடன் மஞ்சனமாடுவது முதல்
விருந்துண்ணுமளவிலும் உள்ள பகற்பொழுதிற் செய்ய
வேண்டிய விதிகளை யெல்லாம் செய்து முடித்துக் கொண்
டான். மாளிகைக்குள் தன் துயிலறையிலேயே ஒரு புறத்
தில் இந்திராயுதம் இருப்பதற்கு இடமொன்றையு மேற்
படுத்தினான்.

இவனது இவ்வகையான விருத்தாந்தத்துடன் பகற்பொழுது சாய்ந்தது; பங்கயப் பூக்கள் பகலிற் பானஞ்செய்த வெயில் அனைத்தையும் அடியோடு அகற்றும் பொருட்டு உள் நுழையும் இதழ் இதழான இருட்களுக்கேற்க வண்டுகளின் இனங்கள் செந்தாமரை மலர்களின் உட்புறங்களிற் புகுந்துகொண்டன; அந்திப்பொழுதின் செவ்வானமும் மெல்ல மெல்ல மறைந்து வந்தது; புரோஹிதரெல்லாம் பூபதிக்கு வாழ்த்து கூறி வெளிக் கிளம்பிக் கொண்டிருந்தனர்; சந்திராபீடனும் தன் தந்தையின் அரண்மனைக்குச் சென்று, அவன் அருகிற் சற்றுநேரம் தங்கிவிட்டு, விலாஸவதியையும் கண்டு, பின்பு தனது மாளிகைக்குத் திரும்பி வந்து, சயனத்திற் படுத்துறங்கினான்.

பொழுதுவிடிந்ததும் துயிலெழுந்து, தந்தையினிடம் விடைபெற்றுக்கொண்டு புதிதாக வேட்டையாடுவதிற் பேரவாகொண்டு, கதிரவன் உதிப்பதற்கு முன்பே, இந்திராயுதத்தின்மேல் ஏறிக்கொண்டு வெளியிற் புறப்பட்டான். இவனுக்கு முன்பாகவே வேட்டை நாய்களும், யானை-குதிரைகளும், கோதண்டமேந்திய காலாட்களும் வரிசை வரிசையாகச் செல்ல, இவனும் வனத்தினுள் வெகு உத்ஸாஹத்துடன் பிரவேசித்தான். அங்கு, காதுமட்டும் இழுத்து விடுத்த அம்புகளாற் காட்டுப் பன்றிகளையும், சிவங்கிகளையும், சிங்கங்களையும், மான்களையும் ஆயிரம் ஆயிரமாய் அடித்து வீழ்த்தினான்; வெகு துணிவும் வலிவும் வாய்ந்தவனானதால், மற்றுங் கொடிய விலங்குகளையும் உயிருடன் துள்ளத் துள்ளக் கவர்ந்துகொண்டான். ஜாத்யச்வமான இந்திராயுதமும் ஒருவாறு சோர்வுற்றது; நீரில் மூழ்கி யெழுந்ததுபோல அதன் உடலெங்கும் வியர்வை பொழிந்தது; வாயிலிருந்து உதி

ரங்கலந்து நுரை ததும்பிற்று; இவ்வச்வத்தைப் பின்பற்ற முடியாமல் பதாதி பரிஜனங்கள் வெகுதூரம் பின் தங்கிவிட்டன. அதன்மீது சவாரிசெய்து கொண்டே, வேறு குதிரைகளின் மீதேறிவரும் இராஜகுமாரருடன் வேட்டையாடிய விசேஷங்களைப்பற்றி வேடிக்கையாகப் பேசிக்கொண்டு தன் அரண்மனைக்குத் திரும்பினான்.

குதிரையிலிருந்து கீழிறங்கியதும், பணிவிடை செய்பவரால் ஓடிவந்து இடப்பெற்ற பீடத்தில் அமர்ந்து, கவசத்தைக் கழற்றி, குதிரையேறிச் சவாரிசெய்தற்கேற்றவண்ணம் பூண்டிருந்த உடைகளையும் களைந்துவிட்டு, பரிஜனம் சிற்றாலவட்டம் வீச, சிறிது நேரம் இளைப்பாறினான். பிறகு பொற்கலச ஜலத்தினால் நீராடி, தேவதார்ச்சனைகளை முடித்துக்கொண்டு, அரசனனுப்பிய ஆடையாபரணங்களையும், வாஸனைத்திரவ்யங்களையும் தான் உபயோகித்து, வைசம்பாயனனுக்கும் அருகிலிருந்த மற்றவருக்கும் அளித்து உபயோகிக்கச்செய்தான். பிறகு ஆஹாரமருந்தும் கூடத்திற் சென்று, ஆங்கு விரித்திருந்த இரத்தினக்கம்பளங்களில் வைசம்பாயனனோடும் மற்ற அரசகுமாரருடனும் உட்கார்ந்து, அவர்களிடம் ஆதராதிசயத்தை யறிவித்து, அவர்களுக்குத் தன்னைப் பணிவதிற் பிரீதியைப் பின்னும் மிகமாய் மேலோங்கச் செய்து கொண்டே உணவுகளை யுண்ணலானான். பின்னர் ஆசமனஞ் செய்து, தாம்பூலந்தரித்து அங்கேயே சற்று நேரமிருந்துவிட்டு, இந்திராயுதத்தினிடம் சென்று, தானாகவே அதற்கு எதிரில் புற்களை யெடுத்துப் போட்டுவிட்டு, வெளிவந்து, பிதாவின் மாளிகைக்குப் போய் தந்தையைத் தரிசித்து, திரும்பவும் தன் மனைக்கு வந்து அன்று இரவையுங் கழித்தான். அந்தப்புரத்தில் முக்கிய ஸேவகனான கைலாஸன் என்னும் கஞ்சுகி மறு நாட்

காலையில் ஓர் அழகிய கன்னிகையை அழைத்துக் கொண்டு சந்திராபீடனிடம் வந்தான். அக்கன்னிகை சிவந்த பட்டுச் சேலையினால் தன் தாமரை மலர்போன்ற முகத்திற்கு மேலே முக்காடு அணிந்து கொண்டு, பெருந்தன்மை வாய்ந்த பெண்மணியாகக் காணப் பட்டாள். கஞ்சுகி அருகில் வந்து, புவியில் கரம் வைத்துப் பணிந்து இங்ஙனம் கூறினான்:—“முன்னொரு கால் மஹாராஜா குலூதராஜனை வென்று சிறைபிடித்த ஜனங்களோடு இக்கன்னிகையையும் கொண்டுவந்து, இவளை அந்தப்புரத்திலிருக்க ஏற்பாடு செய்தார். இவள் அக்குலூதேச்வரனுடைய புதல்வி; இவளுக்குப் பத்திர லேகையெனப் பெயர்; இராஜகுமாரத்தி யென்று தங்களுடைய தாயாரால் புத்திரியைப் போல அன்புடன் வளர்க்கப் பட்டு வந்தாள். இவளைத் தங்களுடைய முழுநம்பிக்கைக்கும் பாத்திரமான தாம்பூலச்சீமாட்டியாக வைத்துக் கொள்ள மஹாராணி அனுப்பியிருக்கிறார். இவளைச் சாதாரண வேலைக்காரியாகக் கருதாமல், தவறுதலிருந்தாலும் இவளை அப்போதைக்கப்போது சிக்ஷித்து முற்றிலும் உனது அந்தரங்கத் தோழியைப் போலவும் நடத்திவரவேண்டும். இவ்வாறு சொல்லும்படி மஹாராணி எனக்கு ஆஞ்ஞாபித்தார்கள்” என்று கைலாஸன் கூறியதும், பத்திரலேகை கம்பீரமாக வந்தனம் செய்து நின்றாள். அவளைச் சந்திராபீடன் சற்று நேரம் உற்று நோக்கிவிட்டு, ‘அன்னையின் உத்தரவுப்படியே’ என மொழிந்து கஞ்சுகியை அனுப்பினான். பத்திரலேகையும் அவனைப் பார்த்ததுமே, அவனுக்குப் பணிவிடை செய்வதைப் பெருமகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டாள். அது முதல் அல்லும் பகலும் அவனது நிழல்போல் அவ்வரசகுமாரனை விட்டுப் பிரிவதில்லை; சந்திராபீடனுக்கும்

அவனிடம் ஒவ்வொரு க்ஷணமும் அன்பு ஓங்கி வளர்ந்து வந்தது. அந்தரங்கமான அகில காரியங்களிலும் அவனைத் தனது இருதயத்தைப் போலவே நம்பலானான்.

இங்ஙனம் சில நாட்கள் சென்றுவர, வேந்தன் சந்திராபீடனுக்கு இளவரசுப் பட்டமளிக்க விரும்பி, வேலைக்காரரிடம் அதற்கு வேண்டிய காரியங்களை ஆரம்பிக்கக் கட்டளையிட்டான். அப்பட்டம் பெறப்போகிற சந்திராபீடன், ஒரு நாள் சுகநாஸனைத் தரிசிக்கச் சென்றான். இவன் ஏற்கனவே நற்குணங்கள் நிரம்பியவனாயிருந்தும், இன்னும் திடமான விநயகுணங்களைப் பெற்றவனாக அவனைச் செய்யக் கருதி சுகநாஸன் பின்வருமாறு அவனுக்கு உபதேசிக்கத் தொடங்கினான்:—

“அப்பா ! சந்திராபீட ! கல்வியைக் கசடறக் கற்று அறியவேண்டியவை அனைத்தையும் அறிந்த உன்றனுக்கு உபதேசிக்கவேண்டிய விஷயம் விசேஷமாயிலது. என்றாலும் நான் கூறுவதைக் கேட்பாயாக. பிறவிச்செல்வம், புதிதான வாலிபப் பருவம், நிகரில்லா வடிவழகு, மானிடத் தன்மைக்கும் மேலான திறமை யென்கிற இவை யாவும் அனர்த்த பரம்பரையாகும். இவற்றினுள் ஒவ்வொன்றுமே அவிநயம் அனைத்துக்கும் ஆதாரமாகும். அப்படியிருக்க, அவ்வெல்லாவற்றினது சேர்க்கை யெத்தகையதென்பதைக் கூறவும் வேண்டுமோ ? யௌவனாரம்பத்திற் புத்தியானது, சாஸ்திரங்களென்னும் ஜலத்தினால் கழுவப் பெற்று களங்கமற்றிருந்தபோதிலும் கலங்கிவிடுகின்றது. பிரகிருதி யென்னும் மாயையானது புருடனை வாலிபப் பருவத்தில் வெகுதூரம் வலிய இழுத்துவிடுகின்றது. உன்னைப்போன்றவனே உபதேசங்களுக்கு உரியவனாகின்றான். பளபளவென்றிருக்கும் படிகமணியிற் சந்திரகிரணங்கள் போல், மாசற்ற மனத்திலல்லவோ

உபதேசகுணங்கள் எளிதில் ஊடுருவிச்செல்லும்? சிற்றின்பங்களைச் சற்றும் அறியாத உன்றனுக்கு இதுதான் உபதேசத்திற்கு ஏற்ற காலம்; மன்மதபாணங்கள் தாக்கிச் சிதறுண்ட இருதயத்திலோ, உபதேசிக்கப்படுவது எதுவும் சில்லிக்கலத்திலிட்ட நீர்போல் சிறிதும் நிற்கமாட்டாது. மேலும் கொடிய சுபாவமுள்ளவர்க்கு நற்குடியிற் பிறப்பதாவது சாஸ்திரமோதுவதாவது விநயத்தையுண்டுபண்ணுவதில்லை. சந்தனமரத்திற் பற்றிய தீயானது தஹிக்காமலிருப்பதுண்டோ? குருவின் உபதேசமென்பது புருடருக்கு அகில மாசுகளையும் அலம்புவதற்கேற்ற நீரில்லா நீராட்டம்; நரைதிரை முதலிய விகாரமான உருமாறுட்டமேதும் உண்டாகாது முதிர்வற்ற மூப்பு; ஸ்வர்ணத்தினுற் செய்யப்படாத ஸர்வோத்தமமான ஆபரணம்; மன்னவருக்கோ இது இன்னும் இன்றியமையாதது. என்றாலும் அவருக்கு உபதேசிப்பவரோ வெகு சிறுபான்மையர். மனிதரோ, மன்னவன் மொழி யெவ்வாறிருப்பினும், அதையே எதிரொலிபோல் பின்பற்றுகின்றனர்; ஒருக்கால் உபதேசிக்கப் பெறினும், கடுமையான கர்வமென்னும் விப்புருதியால் மூடப்பெற்ற செவிக் குழியை யுடைவர்போல் பிரபுக்கள் அதைக் கேட்பதுமில்லை. நல் வாழ்க்கையில் ஆவலுள்ளவனாய் நீ முதன்முதல் இவ் விலக்ஷ்மியையே பார். இவள் பாற்கடலிலிருந்து உதிக்கையில், இளம்பிறையான மெல்லிய இந்துவினிடமிருந்து தனிமையாக வக்கிரத்தன்மையையும், உச்சைச்ரவஸ்ஸினிடமிருந்து நின்றவிடத்தில் நில்லாத நிலையற்ற நிலைமையையும், காலகூடத்தினிடமிருந்து மோஹத்தை யுண்டாக்கும் மஹிமையையும், மதுவினிடமிருந்து மதத்தையும், கௌஸ்துபமணியினிடமிருந்து கடினத்தன்மையையும் பெற்றுவந்தாளெனத் தோன்றுகிறது. மந்தரபர்வ

தத்தைப் பாற்கடலிற் சுழற்றுகையில் அதனிடமிருந்து பயிற்சி பெற்றவள் போல் இவள் இன்றைக்கும் இங்குமங் மாய்ச் சுழன்றோடுகிறாள். உதாரத்தன்மையனை அமங்கலனைப்போல் அவமதிக்கின்றாள். ஸத்புருடனை அபசகுனம் போலெண்ணிக் கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை. மிக்க நிலையில்லாத் தன்மையுள்ள இவ்விலக்ஷ்மியானவள் தீபத்தின் சுடரொளிபோல் ஒருவனிடம் எவ்வளவுக் கெவ்வளவு ஓங்கிப் பிரகாசிக்கின்றனளோ, அவ்வளவுக்கவளவு தூமம்போல் மலினமான தீராத தீவினைகளையே தருகின்றனள். ஆம்: இவளால் ஏற்படும் செல்வம் பேராவா வென்னும் விஷக்கொடியை வளர்ப்பதற்குத் தண்ணீர்த் தாரை; ஐம்புலன்களாகும் அடவிமிருகங்களை மயக்கச் செய்ய மறவர்களின் பாட்டு; ஸச்சரிதமென்னும் சித்திரங்களைச் சீர் குலையச் செய்யும் தூமக்கொடி; மோஹமாகும் நீண்ட நித்திரைக்கு மாயப்படுக்கை; பாவங்களென்னும் பெரும் பாம்புகளுக்குப் படுக்கும் பாழி; ஸ்ரீமான்கள் செல்வச் சூட்டினாற் சமைக்கப் பெற்றவர் போல் துள்ளித் துடிக்கின்றனர். வேறு சில பிரபுக்கள் சூதாட்டத்தைப் பொழுதுபோக்கென்றும், வேட்டையாடுவதைச் சரீரவுழைப்பென்றும், மதுபானத்தை மனமகிழ்ச்சி யென்றும், மூத்தோர் சொற்களைப் புறக்கணித்தல் பராதீனமற்ற தன்மையென்றும் இவ்வாறாக தோஷங்களையும் குணங்களாகக் கூறிக்கொண்டு திரிகின்றனர். போதாக்குறைக்குப் பொருளென்னும் புலால்களைப் புசிப்பதில் பருந்துகள்போன்றவரும், ஆஸ்தான மாகும் அம்புயக் கயத்தில் வஞ்சனையில் வல்ல கொக்குகளுக்கு ஒப்பானவருமான மாயத் தோழர்கள் இப்பிரபுக்களை ஆச்ரயித்து ஸ்தோத்திரங்கள் செய்து வஞ்சனை செய்வதைப் பற்றி நான் என்னென்றுரைப்பேன்! மஹே

ந்திரனென்றும், மஹேச்வர னென்றும் மாயமித்திரர்கள் புகழ்வதைக் கண்டு, தாம் அப்படிப்பட்டவர்தானென எண்ணிக்கொண்டு, தேவர்களுக்கேற்றவாறு நடிக்கவும் முயல்கின்றனர். அப்பால் தாம் தரிசனம் தருவதையும் அனுக்கிரஹமெனக் கருதுகின்றனர். கட்டளையையும் வரப்பிரதானமென்று நினைக்கின்றனர். 'பயனற்றப் பிரயாஸங்களால் இன்பங்களுக்கு இடையூறளிக்கின்றனர்' என்று, பண்டிதரைப் பரிஹஸிக்கின்றனர்; ஹிதமுரைப்போரை வெறுக்கின்றனர். அல்லும் பகலுமாய் அஞ்ஜலிசெய்துகொண்டு, யாவனொருவன் தேவதாமூர்த்தியைப்போல் தம்மைப் போற்றுகிறானோ, எவனொருவன் எப்பொழுதும் மாயமாஹாத்மியத்தையுண்டாக்குகின்றானோ எவ்வகையிலும் அவனையே ஆமோதிக்கின்றனர்; அவன் சொற்களையே செவியுறுகின்றனர்; அவனிடந்தான் செல்வதைச் சொரிகின்றனர். நான் சொல்வதென்னவென்றால், செங்கோலைச் செலுத்துங்கால் இத்தகைய ஸங்கடங்களெல்லாம் அநேகவகையில் அரசருக்கு வலியவே வந்துசேரும். அரசாங்கத்தை நடத்துவது மிகக் கடுமையான காரியம். நீயும், விவேகிகளையும் மயக்கிவிடக்கூடியதான அவ்வாலிபவயதில் இருக்கின்றாய். ஆனதுபற்றி, எப்படியானால் பிரஜைகள் உன்னைப் பரிஹஸிக்காமலிருப்பரோ, ஸத்புருடர் சற்றும் நிந்திக்கமாட்டாரோ, குருமார் எவ்விதம் இகழாமலிருப்பரோ! நிஷ்கபடமான நண்பர்கள் எப்படி நிந்திக்காமலிருப்பாரோ, மற்றும் சிற்றின்பங்கள் உன்றனை யெங்ஙனம் இழுக்காமலிருக்குமோ அவ்வாறு முயற்சிப்பாயாக. நீயோ, இயல்பாகவே வெகு தீரன்; தந்தையினாலும் பெருமுயற்சியோடு பயிற்சி செய்விக்கப் பெற்றிருக்கின்றனை. சபலசித்தனும் அறிவீனனுமாயிருப்பவனையே செல்வம் வெறிக்கச்

செய்கின்றது. என்றாலும், உன் ஸத்குணங்களைக் கண்டுண்டான ஸந்தோஷமே இங்ஙனம் என்னைக் கூறும்படி தூண்டியது. புருடனெவனும் பண்டிதனாயிருப்பினும், பகுத்தறிவுடன் கூடியவனாயினும், விசேஷ வலிவுள்ளவனானாலும், நற்குலத்தோனாகிலும், வெகு தீர்த்தன்மையனாயிருந்தாலும் செல்வம் அவனையும் மயங்கச் செய்யாமலிருப்பதில்லையென்று மீண்டும் உனக்கு இதையேதான் வற்புறுத்திக் கூறுகிறேன். இனி நீ சுபமாகத் தந்தையினால் செய்விக்கப்படும் யௌவராஜ்ய பட்டாபிஷேகமங்களத்தை யநுபவிக்கக் கடவாய். உங்கள் குலத்திற்குத் தொன்றுதொட்டுவந்திருப்பதும், உனது முன்னோர்களால் முன்பு ஆளப்பட்டதுமான இச்செங்கோலைச் செவ்வெனச் செலுத்துவாயாக; பகைவரைத் தலைவணங்கச் செய்; உதவி செய்து உறவினரை உயர்த்து; முடிசூட்டிய பிறகு, திக்விஜயம் செய்ய முற்பட்டவனாய், உன் தகப்பனாரால் ஏற்கனவே ஜயிக்கப் பட்டிருப்பினும், நீயும் முற்றிலும் சுற்றிச் சென்று, மேதினியை வென்று வருவாயாக. பராக்கிரமத்தை ஓங்கி வளரச் செய்வதற்கு உனக்கு ஏற்ற காலம் இதுதான்." இவ்வாறு சுகநாஸன் கூறி ஓய்ந்ததும், சந்திராபீடன் மாசற்ற அவ்வுபதேச மொழிகளால் தன்னை அலம்பப் பெற்றவனைப்போலவும், கண் திறந்து வைக்கப்பட்டவனைப் போலவும் எண்ணி, மனமகிழ்ச்சி யடைந்து, பின்பு ஓர்முகூர்த்தகாலம் அங்கு தங்கிவிட்டு, விடைபெற்றுக்கொண்டு, தன் வீடுசென்றான்.

அதன் பின்னர் சில நாட்சென்றதும், தாராபீடராஜன் அனேக மாயிரம் சிற்றரசரால் சூழப்பெற்றவனாய், ஓர் புண்ணியதினத்தில், முடி சூட்டுதற்கேற்ற மங்களச் சடங்குகளையெல்லாம் சந்திராபீடனுக்கு நிறைவேற்றி; பற்பல புண்ணிய தீர்த்தங்களிலிருந்து எடுத்துவந்த ஜலத்

தைத் தானும் சுகநாஸனுமாகப் பொற்கலசங்களிலேந்தி அபிஷேகம் செய்து வைத்தார்கள். பின்பு அந்தப்புரப் பெண்கள் புடைசூழ விலாஸவதி தேவி வந்து தானாகவே குமாரனுக்குச் சந்தனம் பூசி அலங்காரம் செய்தாள். அக்காலைத் தானே பிரம்புத்தடி யேந்தி பிதா, முன்புறத்தில் ஜனங்களை விலக்கும் அதிகாரத்தைச் செலுத்த, சந்திராபீடன் ஸபாமண்டபம் சென்று, மேருகிரியின் சிகரத்திற் சந்திரன்போல் தங்கச் சிங்காஸனத்தில் அமர்ந்தான்.

இங்ஙனம் சிங்காஸனமேறி, ஸகல இராஜாக்களுக்கும் ஸம்மானங்களைச் சரிவரச் செய்து முடித்தபின்பு, முகூர்த்தநேரங் கழித்து, சந்திராபீடனுக்கு திக்விஜயப்பிரயாணத்தை யறிவிப்பதான புறப்பாட்டுப்பறை கம்பீரமாய் முழங்கியது. பிறகு 'ஜய! விஜயீபவ' என்று ஜனங்களால் வாழ்த்தப்பட்டவனாய் சந்திராபீடன், சிங்காஸனத்திலிருந்து எழுந்து, துரிதமாக எழுந்த மற்ற சிற்றரசர்கள் கூட்டமாகப் பின்தொடர, வெளியில் மங்களகரமாக அலங்கரிக்கப் பெற்றிருந்த ஒரு யானையின்மீது முன்புறத்தில் பத்திரலேகையும், அவளுக்குப்பின்னால் தானுமாக ஏறியுட்கார்ந்தார்கள். நூறு அலகுகளுடன் கூடிச் சுற்றிலும் நல்முத்துச்சரங்கள் தொங்கவிடப்பெற்ற வெண்குடையினால் வெயில் படாது மறைக்கப் பட்டவனாய் வெளிக் கிளம்பிப் போகமுயன்றான். மேருகிரி போல் மஹத்தான மற்றொரு மத்தகஜம் மனோஹரமான அலங்காரங்களைப் பெற்று இவனையடுத்தாற்போல் பின்தொடர, வீரபடர்களால் பற்றிச் செலுத்தப்பட்டு பொன்னணிகளால் அலங்கரிக்கப்பட்டு இந்திராயுதம் முன்செல்ல மெல்ல வெளிவந்து முதலிற் கீழ் திசையை நோக்கிப் பிரயாணமாயினன். வைசம்பாயனனும், தன் மாளி

கையில் புறப்பாட்டு மங்களச் சடங்குகளைப் பெற்று, வெண்பட்டுடைகளை யுடுத்திக் கொண்டு, புஷ்ப சந்தனங்களை யணிந்து, வெண்குடை தரித்து, யானையேறி, பெருஞ் சேனைத்திரளாலும், இராஜஸமூஹங்களாலும் பின் தொடரப்பட்டு, இரண்டாவது இளவரசு போன்றவனாய் சந்திராபீடனுடன் வந்து சேர்ந்துகொண்டான். வெண்கொடிகள் வரிசை வரிசையாகத் தாங்கப்பட்டன. நூற்றுக் கணக்கான யானைகள் இரு புறமும் வரிசையாகச் செல்ல அவற்றின்மீதிருந்து வெண்சாமரைகள் வீசப்பட்டன. சில காலாட்படைகள் பிரம்பேந்தி முன்புறக் கூட்டத்தை விலக்கி வந்தன. ஆகாய மெங்கும் குடைமயமாய்விட்டதால், சூரியகிரணங்கள் முற்றிலும் மறைக்கப்பட்டுப் போயின. ஸேனைக்கு முன்பாக விரைந்தோடும் ஜனக் கூட்டத்தின் கோலாஹலத்தாலும், காஹள மென்கிற வாத்தியங்களின் நீண்ட நாதத்தினாலும், குதிரைகளின் குளம்போசைகளாலும், கஜங்களின் கர்ஜனையாலும், புறப்பாட்டுப் பறைகளின் பேரொலியாலும் ஜனங்களுக்குச் செவிகள் செவிடாகிச் சிதறுண்டன போலும். கரைபுரண்ட கடல் போலச் செல்லும் அச்சேனைத் திரளைக் கண்டு வைசம்பாயனன் சந்திராபீடனை நோக்கிப் பின்வருமாறு கூறினான்:—

"இளவரசே! மஹாராஜாதிராஜனான தாராபீட தேவனால் ஜயிக்கப்படாமல், இனி நீ போய் ஜயிக்கவேண்டிய பிரதேசம் ஏதேனும் உண்டோ? அவர் தேடாத எந்த அரும்பொருளை இனி நீ ஸம்பாதிக்கப் போகின்றாய்? அவரது பாதபீடத்தில் எவரது சூடாமணிகள் உரைஞ்சாமலிருக்கின்றன? குல கௌரவங்களால் விளங்குபவரும், யாகங்களை யனுட்டித்தவரும், பட்டந் தரித்தவருமான பார்தலிலிருக்கும் பார்த்திவர் அனை

வரும் சூடாமணிப்பங்க்திகளால் உனது மங்களகரமான பாதங்களைத் தொழுகின்றனரே." இவ்வாறு வைசம்பாயனன் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, யுவராஜன், புற்களாலாக்கிய மதில்களுடன் கூடிய பல்லாயிரம் வீடுகளால் நெருங்கியதும், நூற்றுக் கணக்கான படக்குடில்களால் * விளங்குவதுமான புதிய வாஸஸ்தலம் போய்ச் சேர்ந்தான். ஆங்கு தானிறங்கி, அரசனுக்கேற்ப எல்லாப் பணிகளையும் செலுத்தலானான். இதர அரசர்களோடும் மந்திரிமாருடனும் ஒரு வாறு விநோதமாகப்பொழுது போக்கினான்; என்றாலும் புதியதாகத் தன் தந்தையை விட்டுப் பிரிந்ததாலான மனக்கிலேசம் அவனுக்கு ஒரு புறம் இருந்து வந்தது. இவ்வாறு சிறிது கஷ்டத்துடன் பகற்பொழுது கழிந்தது. பிறகு தனது சயனத்துக்குச் சற்றுத் தூரத்திற் போட்டிருந்த படுக்கையில் அமர்ந்திருந்த வைசம்பாயனனோடும், மற்றொரு புறத்தில் தரையிலிடப்பெற்ற மெத்தையின்மீது படுத்திருந்த பத்திரலேகையோடும் ஸல்லாபம் செய்தவாறு, நன்கு நித்திரை கொள்ளாமல் பெரும்பாலும் விழித்துக்கொண்டே அவ்விரவையும் கழித்தான். அதிகாலையில் எழுந்திருந்து அதே கிரமமாக விஜயயாத்திரை செய்தான். ஒவ்வொரு பிரயாணத்திலும் யுத்தம்செய்து ஜயிக்கப்பட்ட எதிரிகளிடமிருந்து சேரும் ஸேனையினால் தனது படையை மேன் மேலும் அதிகமாகத்திரட்டிக்கொண்டும், கானகங்களைப் பொடியாக்கிக்கொண்டும், மேடுபள்ளங்களைச்சீர்திருத்திக்கொண்டும் தேசங்களைச்சுற்றிவருகையில், அஹங்காரம்மேலிட்டவரைத்தலைவணங்கச் செய்தான்; அடைக்கலம் புகுந்தவரை ஆதரித்தனன்; விடப்புருடரை வேருடன் அழித்தான்; அவ்வவ்விடங்களில் அரச குமாரர்களுக்கு மகுடாபிஷேகம்

* படக்குடில்—கூடாரம்.

செய்துவைத்தான்; அரும்பொருட்களைச் சம்பாதித்தான்; கப்பங்களைக் கிரஹித்துக்கொண்டான்; தேசங்கள்தோறும் ஒழுங்கான நியமங்களை யேற்படுத்தினான்; தனது ஞாபகக்குறிகளை ஸ்தாபனஞ்செய்தனன்; சாஸனங்களை யெழுதி வைத்தான்; அந்தணரை ஆராதித்தான்; தபோதனரது தாள்களைப் பணிந்தான்; ஆச்ரமங்களைப் பரிபாலித்தான்; ஜனங்கள் அனைவருக்கும் அன்னியோன்னியம் அன்பை அதிகம் உண்டாக்கினான்; புகழைச் சம்பாதித்தான்; இவ்வண்ணம் ஆதியில் கீழ்த்திசையையும், பின்னர் திரிசங்குவைத் திலகமாகவுடைய தென்திசையையும், பிறகு பச்சிமதிக்கையும், அதன் பின்பு ஸப்தருஷித் தாரகைகளால் வெளிறிய வடதிசையையும் வென்றான். மூன்று வருடங்களில் த்வீபாந்தரங்கள் அனைத்தையுமே தன் வசமாக்கிக்கொண்டு, பூமியையும் பிரதக்ஷிணம் பண்ணிவிட்டு, ஒருக்கால் கைலாஸகிரிக்கு அருகில் வந்து சேர்ந்தான். அங்கே ஹேமகூடமென்னும் குன்றத்திற் குடியிருக்கும் மறவர்களுக்குச் சொந்தமான ஸுவர்ணபுரம் என்கிற பட்டணம் ஒன்றுண்டு. அது கிழக்குக் கடற்கரைக்குச் சிறிது ஸமீபத்திலுள்ளது. அதை இவன் கைப்பற்றிக் கொண்டு, தரணியெல்லாம் அலைந்து திரிந்து ஆயாஸமடைந்த தனது ஸேனை இளைப்பாறும் பொருட்டுச் சிலநாட்கள் அங்கு தங்கியிருந்தான்.

அவ்விடத்தில் இங்ஙனம் இருந்து வருங்கால், ஒருநாள் சந்திராபீடன் இந்திராயுதமேறி, வேட்டையாட கானகம் சென்று ஸஞ்சரித்து வருகையில், தற்செயலாய் தம்பதிகளான கின்னரர் * இருவரைக் கண்டான். அபூர்வ ஜாதியாயிருந்ததால் அக்கின்னரதம்பதிகளைப் பற்றிக்கொ

* கின்னரர்—பாதி உடல் குதிரை, பாதி மனிதனுடலுள்ள ஓர்வகை தேவஜாதி.

ள்ள ஆசைகொண்டு, ஆவலுடன் கிட்டப் போனான். அதுவரையிலும் காணாத புருடனைப் பார்த்ததால் அவர் பயந்தோடத் தொடங்கினர். இவனும் குதிகால்களால் அடித்து இந்திராயுதத்தை அதி வேகமாகத் துரத்திக் கொண்டு, ஸேனையனைத்தையும் விட்டுப் பிரிந்து, விரைந் தோடும் அக்கின்னரரை வெகு தூரம் பின்தொடர்ந்தோ டினான். 'இதோ அகப்பட்டுக்கொண்டனர், இதோ பிடித் துவிட்டோம்' என்று வெகு துரிதமாய் மனமிழுக்கப்பட, குதிரை மஹா வேகசாலியானதுபற்றி, சிறிது நேரத்திற் குள்ளாகவே ஓடிபோல் அவ்விடமிருந்து பதினைந்து யோஜனையளவான வழியைக் கடந்துவிட்டான். அந்தக் கின்னரர்களோ, இவன் பார்த்துக் கொண்டிருக்கையி லேயே எதிரில் தோன்றிய ஓர் குன்றத்தின் உன்னதமான உச்சியின் மீது ஏறிப் போய்விட்டனர்.

பிறகு அவன் மெதுவாக அக்கின்னரதம்பதிகளைப் பார்ப்பதிலிருந்து கண்ணைத் திருப்பினான். குன்றங்களும் கற்பாறைகளும் நிரம்பியிருந்ததால் அதற்கப்பால் இவ னால் செல்லவும் முடியவில்லை. ஆகவே குதிரையை யிழுத் துப் பிடித்துக்கொண்டு, அச்சமயம் சிரமத்தினாலு ண்டான வியர்வைநீரால் உடம்பெல்லாம் நனைந்த இந்திராயுதத்தையும் தன்னையும் உற்றுப் பார்த்தான். க்ஷணகாலம் யோசித்து விட்டு, தனக்குத் தானே நகைத் துக் கொண்டு, இப்படிச் சிந்திக்கலானான்:—'பிரயோஜன மின்றி நான் ஒரு சிறுவனைப் போல் இவ்வாறு என்னை ஆயாஸப் படுத்திக் கொண்டேனே! இவ்விரண்டு கின் னரரையும் பிடித்துவிட்டோமானால், அதனால் தான் என்ன பயன்? இல்லை, பிடிக்காமலிருந்தோம், அதனால் தானென்ன? ஓ! என்ன மூடத்தன்மை! தோன்றிய வாறு யாதேனுமொன்றைச் செய்வதில் இஃதென்ன

விருப்பம்! ஓ! இராஜதர்மத்தைச் செய்ய முயன்றும் அதை நன்கு நிறைவேற்றினேனில்லை. ஏதோ ஆவேச முடையவன்போல் பரிவாரங்களையும் விட்டு விட்டு, நான் ஏன் இவ்வளவு தூரம் வரவேண்டும்? என்னைப் பின் தொடர்ந்த ஸேனை எவ்வளவு தூரத்தில் தங்கி விட்டதோ? மஹா வேகசாலியான இவ்விந்திராயுதம், நொடிப்பொழுதில் நெடுந்தூரத்தையும் கடந்துவிட்டது. திரும்பிப் போய்விடுவோ மென்றால், வரும்போது நான் அச்வத்தின் அதிசயிக்கத்தக்க வேகத்தினாலும், கின்னர தம்பதிகளின்மீதே கண்வைத்து ஓடிவந்ததாலும், அடவியெல்லாம் அபரிமிதமான மரங்களும், புதர்களும், கொடிகளும் இடைவிடாது அடர்ந்தும், இலைச் சிறகுகள் விழுந்து முற்றிலும் மார்க்கம் மூடப்பெற்று மிருப்பதாலும் இம் மஹாரண்ணியத்தில் வழியையும் உற்று நோக்கினேனில்லை; இப்பிரதேசத்திற் பெரு முயற்சியுடன் தேடித் திரிந்து பார்த்தபோதிலும், ஸுவர்ணபுரம் போகும் பாதையை யறிவிக்கக் கூடியதோர் மானிட உருவையும் காண்கிலேன். பூமியில் தேசங்கள் அனைத்துக்கும் ஸுவர்ணபுர மென்பது வடக்குத் திசையிலிருக்கும் எல்லைப் புறமென்றும், அதற்கப்பால் நிர்மானுஷமான அரண்ணியமெனவும், அதற்கப்புறம் கைலையங்கிரியென்றும் நான் சொல்லக் கேட்டிருக்கிறேன். கைலாஸமும் இது தான். ஆகையால் இப்பொழுது தனியாக நானே ஊஹித்துக்கொண்டு, தென் திசையை நோக்கித் திரும்பிப் போகவேண்டும். தாம் செய்த தப்பிதங்களின் பயனைத் தாமே அனுபவித்துத் தீரவேண்டுமல்லவா?' என்று தீர்மானித்துக்கொண்டு, இடது கரத்தினால் கடிவாளத்தைச் சற்று இழுத்துக் குதிரையைத் திருப்பினான். பின்பு மீண்டும் அவன் 'இதோ சூரியன்

தனது சுடரொளிகளை வீசிக்கொண்டு, உச்சிப்பொழுதை அடைந்திருக்கிறான்; இந்திராயுதமும் மிகக் களைத்துப் போயிற்று. இதைச் சிறிது பசும்புற்களை மேயச்செய்து, யாதேனும் குளமொன்றிற் குளிப்பாட்டி, தண்ணீர் காட்டி, களை தீரச் செய்துவிட்டு, நானும் தண்ணீரருந்தி, ஓர் விருக்ஷத்தின் அடி நிழலில் முகூர்த்த நேரமேனும் சிரம பரிஹாரம் பண்ணிக்கொண்டு, அதன் பின்பு திரும்பிப் போவேணுக' என்று யோசித்து, தண்ணீரிருக்குமிடம் தேடப் புறப்பட்டான். இங்குமங்குமாய் அப்பால் அவன் திரிந்துச் செல்லுகையில், அப்பொழுதே தாமரையோடையின் தண்ணீரில்மூழ்கிக் கரையேறிப்போன காட்டானைகளின் கால்களிலிருந்து விழுந்த சேற்றுப் படைகளால் ஈரமான மார்க்கம் ஒன்று இவனுக்குப் புலப்பட்டது.

நீரோடையொன்று ஆங்கு அருகில் இருக்குமென்று இவன் தீர்மானித்தான். வெகு உன்னதமான வெவ்வேறு வகை விருக்ஷங்கள் அடர்ந்ததும், கஸ்தூரிமிருகங்கள் படுத்திருந்ததால் பரிமளங்கமழும் கற்பாறைகளை யுடையதுமான கைலாஸமலைச்சாரலிலேயே சிறிதுதூரம் சென்றான். அக்கைலாஸகிரிக்கு வட கிழக்கில் வெகு விசாலமான அழகிய சோலை யொன்றிருந்தது. ஆங்கு கமலமலர்களின் மதுவையருந்தி மதங்கொண்ட காரன்னங்களுடைய காதுக்கினிமையான கலகலவென்னும் தொனிகளால் அழைக்கப்படுபவன்போல் அச்சோலையினுட் புகுந்தான். அச்சோலைக்கு மத்திய பாகத்தில் கரைகாணவியலாத கடல் போன்றதாய், கண்களைக் களிப்புறச் செய்வதான அச்சோதம் என்கிற மஹாஸரஸ் ஒன்றிருக்கக் கண்டான். அஃது வைடூரியமணிக் குன்றமே உருகி இவ்வாறு தண்ணீராகப் பரிணமித்து விட்டதோ வெனப் புலப்படும்.

சாயைகளென்னும் பாவனையால் உட்புகுந்திருக்கும் கானகம், பர்வதம், நக்ஷத்திரம், கிரஹம் இவைகளின் கூட்டங்களுடன் கூடிய மூன்று உலகங்களையும் ஸ்ரீமந் நாராயணன்போல் பங்கயப்பூ பூத்த தன் உதரத்தினுள் அது தாங்குகின்றது. அதைக் கண்டமாத்திரத்திலேயே அவன் சிரமம் நீங்கிப்போய் இங்ஙனம் சிந்திக்கலானான்:- "ஓகோ! அக்கின்னரரை நான் பின்பற்றியது பயனற்ற வேலையாயினும், இக்குளத்தைக் கண்ட பின்னர், அக்காரியம் பயனுள்ளதாயிற்று. இரமணீயங்களுக்கெல்லாம் எல்லையைக் கண்டுகொண்டேன். இக்குளத்து நீர் அமுதம்போல் புலன்கள் அனைத்தையும் ஆனந்தப்படுத்தவல்லது; ஆம்; மிகவும் நிர்மலமாயிருப்பதால், கண்களைக் களிக்கச் செய்கின்றது; குளிர்ந்திருப்பதால், பரிசஸுகத்தையளிக்கின்றது; கமல மலர்களின் பரிமளம் பொருந்தியதால், நாசியைத் திருப்தியுறச் செய்கிறது; அன்னப்பறவைகள் ஆர்ப்பரிப்பதால், செவியை ஆனந்தப் படுத்துகின்றது; நற்சுவை பொருந்தியதானதால், நாவை ஸந்தோஷிக்கச் செய்கின்றது. உண்மையாக இதைப் பார்த்துக் கொண்டிருப்பதில் பேராவலாலேயே பகவானான பரமேச்வரனும் கைலாஸவாஸத்தில் விருப்பங் கொண்டார் எனத் தோன்றுகிறது". இங்ஙனம் ஆலோசித்துக்கொண்டே சிறிய கூழாங்கற்களுடன் கூடிய மணற்குன்றுமயமானதும், காம்புடன் கொய்த நெய்தல் மலர் கொண்டு வித்தியாதரரால் அர்ச்சிக்கப்பெற்ற மணலாலாக்கிய அனேக சிவலிங்கங்களை யுடையதுமான அக்குளத்தின் தென் கரை சென்று குதிரையை விட்டுக் கீழேயிறங்கினான். இந்திராயுதத்தின் மேலிருந்து சேணத்தையும் அவிழ்த்துப் போட்டான். பிறகு அக்குதிரை பூமியிற் புரண்டெழுந்து, சிறிது புற்களை மேய்ந்து, குளத்தில் இறங்கித் தண்ணீ

ரைக் குடித்த பின்பு அதைக் குளிப்பாட்டிக் கரையிற் கொண்டுவந்து, ஓர் மரத்தின் அடிக் கிளையில் பொற் சங்கிலி கொண்டு கால்களைக் கட்டினன். மீண்டும் குளத்திலிறங்கி பிறகு அவன் சாதகப் பறவைபோல் தண்ணீரை, மாத்திரம் அருந்தி, கயத்து நீரை விட்டுக் கரையேறினன். தண்ணீர்த் திவலைகள் சேர்ந்து குளிர்ந்திருக்கும் தாமரை யிலைகளை, கொடிவீடு சூழ்ந்த ஒரு பாறையின்மீது படுக்கையாகப் பரப்பி, தலைமாட்டில் உத்தரீயத்தைச் சுற்றித் தலையணையாக வைத்துக்கொண்டு சயனித்துச் சற்று நேரம் இளைப்பாறினன். இந்திராயுதம் புற்கவளத்தையும் எடுக்காது காதுகளை நெறித்துக்கொண்டு, கழுத்தை யுயரநிமிர்த்தியவாறு ஸங்கீதத் தொனியொன்றைக் கேட்டுக்கொண்டிருந்தது. அக்குளக் கரையிலிருந்து வரும், வீணையின் ஜங்கார சப்தத்துடன் கூடிய அத்திவ்ய ஸங்கீத சப்தம் இவன் காதினும் விழுந்தது. மிக்க மனோஹரமான அக்குரல் மனிதருடைய தல்ல வென்றும் உணர்ந்தான். மனிதஸஞ்சாரமற்ற பிரதேசத்தில் ஸங்கீதத் தொனியுண்டாவதெங்ஙனம் என்று வியப்புற்று, எழுந்து, அத்தொனிவரும்திசையிற் கண்வைத்துப் பார்த்தான். கீதசப்தமுண்டாகுமிடம் வெகுதூரத்திலிருப்பதுப்ற்றி, பெருமுயற்சியுடன் பார்த்தும் அவனுக்கு ஏதும் புலப்பட்டதில்லை. இடைவிடாது அக்கீதத் தொனி யொன்றையே கேட்டான். அச் சங்கீதத்திற்கு முகாந்தரம் யாதென்று அறியப் பேராவலுண்டாயிற்று. பிறகு இந்திராயுதத்தின் மீது சேணத்தைப் பூட்டி யேறிக்கொண்டு, குளத்தின் மேற் கரைக்கான கப்பந்தியின் வழியே தேத் தொனியையே குறிப்பாக வைத்துக்கொண்டு புறப்பட்டான். மலையருவி நீர்த் திவலைகளால் குளிர்ந்தும் மிகப் பரிசுத்தமுமான

எதிர்கொண்டு வரும் கைலையங்கிரிக் காற்றினால் களிப்புண்டவனாய், தான் உத்தேசித்த விடத்தை நோக்கிச் சென்றான். அங்கு வெகு விஸ்தாரமான சோலைகள் அடர்ந்திருந்தன; கிளிக் கூட்டங்கள் கோதிய கனிவர்க்கங்களும், மேகங்கள் சூழ்ந்த பச்சிலை மரங்களும், அபரிமிதமான தேங்காய்க் குலைகளால் தலைவணங்கிய தென்னங்காடுகளும் அச்சோலைகளில் நிரம்பியிருந்தன. இடையிடையே கைலை மலையிலிருந்து வரும் சிற்றாறுகளின் மணற்பாங்கான பிரதேசங்கள் மனோஹரமாகத் தென்பட்டன. அச்சோதஸரஸ்ஸின் மேற்குக் கரையில், இச்சோலைக்கு இடையில், ஸித்தர்களால் நிர்மிக்கப் பெற்ற சந்திரப்ரபையென்று பெயர்பெற்ற சிவாலயம் காணப்பட்டது. அது மனிதப் போக்குவரவின்றி சூனியமாயிருந்தது. அங்கு உட்சென்று படிகக் கற்களாலாகிய சிறிய நாற்கால் மண்டபத்தில், முத்துச் சிலைமயமான லிங்கரூபத்துடன், நான்கு முகங்களுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த சிவபெருமானைத் தரிசித்தான்.

அவ்வீச்வரனது தென்திசையை நோக்கிய மூர்த்திக்கு எதிரில், பாசுபத விரதத்தை யனுஷ்டிக்கும் ஒரு திவ்யகன்னிகை பிரம்மாஸனத்தில் வீற்றிருந்தாள். அவள் முகத்தில் மூன்று விபூதிக் கோடுகளிட்டு, கரத்திற் சங்குவளை தரித்து, மடியில் யாழ்வைத்து மீட்டிக் கொண்டு மிகவும் இனிமையாகப் பாடி பரமேச்வரனைப் போற்றிக் கொண்டிருந்தாள். ஸங்கீதவித்தையே இங்ஙனம் உருவெடுத்து வந்ததோ வெனக் கூடியவளாகவும், தேவாம்சமானதால் வயதின் அளவு அறியக்கூடாமலிருப்பினும் பதினெட்டு பிராயம் வாய்ந்தவளைப் போன்றவளாகவும் காணப்பட்டாள். அன்றியும் அவள், தர்ம தேவதையின் இருதயத்திலிருந்து வெளி வந்தவள் போலவும், சங்கத்

திஞல் கடைந்தெடுக்கப்பெற்றவள் போலவும், நல்முத்துக் களிலிருந்து உருவியெடுக்கப்பட்டவள் போலவும், வெண் ணிறத்திற்கு ஓர் எல்லைபோலவும் தோன்றிருள். சிவபெரு மானது நாமாக்ஷரங்களெழுதி அவரது பாதங்கள் பதிக் கப்பெற்ற மணிமயமான சூடாமனியொன்றையே அவள் தனது ஜடையில் தரித்துக்கொண்டிருந்தாள்.

சந்திராபீடன் பிறகு குதிரையை விட்டிறங்கி, ஓர் மரக் கிளையில் அதைக் கட்டிவிட்டு, கிட்டச் சென்று சிவபெருமானுக்குத் தண்டனிட்டு, தைவப் பிறப்பான அம்மாதையே இமைகொட்டாது மீண்டும் உற்றுப் பார்த் தான். அவளது அளவற்ற அழகையும், மிக்க சாந்தமான காந்தியையுங் கண்டு வியப்புற்ருன். "ஓ! எதிர்பாரா மலே விதம் விதமான அற்புதங்கள் வந்து தோன்றுகின் றனவே! வேட்டையில் தற்செயலாகக் கின்னர தம்பதிக ளைப் பின்பற்ற, வெகு மனோஹரமானதும், தேவஜனங்க ளின் ஸஞ்சாரத்திற் குரியதுமான பிரதேசத்திற்கு வந்து சேர்ந்தேன். இங்கு தண்ணீரிருக்குமிடத்தைத் தேடிவரு கையில், வித்த ஜனங்களால் பரிசிக்கப்பெற்ற ஜலத்தை யுடைய இருதயத்தைப் பறிக்கும் இக்குளத்தையும் கண் டேன். இதன் கரையின்கண் இளைப்பாறிக்கொண்டிருக்க திவ்யமான கீதத் தொனியொன்று காதில் விழுந்தது. அச் சப்தத்தையும் அனுஸரித்து வந்ததில் மனிதரால் தரிசிக்கக் கூடாத இத்திவ்ய கன்னிகையையும் காணப் பெற்றேன். இவள் தேவகன்னிகை யென்பதில் ஐயமேது மிலது. இவளது வடிவமே மானிடப் பிறப்பல்லாததை யறிவிக்கின்றது. இத்தகைய கண்டத்தொனி மானிடவுல கில் எங்ஙனம் உண்டாகக் கூடும்? ஆகையால் இவள் பார்த்திருக்கையிலேயே திடீரென மறைந்து விடாமலா கிலும், கைலையின் சிகரத்தின் மீது ஏறிவிடாமலாகிலும்,

அல்லது மேலே வானத்தில் எழும்பிவிடாமலாவது இருக்கையிலேயே, இவளது வரலாறுகளை அருகிற் சென்று வினவுவோம். வியக்கத் தக்க விஷயங்களுக்கெல்லாம் இது சிறந்த ஸந்தர்ப்பம்'' என்று தனக்குள் தீர்மானித்து, அப் படிகமணி மண்டபத்தின் ஒரு தூணுக்கு அருகில் உட்கார்ந்து, ஸங்கீதத்தின் முடிவு நேரத்தை யெதிர் பார்த்தவாறு இருந்தான்.

பின்னர் ஸங்கீர்த்தனத்தை முடித்து அக்குமரி யெழுந்து பிரதக்ஷணஞ் செய்து பரமேச்வரனைப் பணிந்துவிட்டு, பின்னால் திரும்பி சந்திராபீடனைக்கண்டாள். 'அதிதிகளான தமது வரவு நல்வரவா? மஹாபாக்கியசாலிகளான தாம் நெடுந்தூரமான இத்தேயத்திற்கு எங்ஙனமோ வந்தீர்களே! எழுந்திரும்; என்னுடன் வந்து அதிதி பூஜையைப் பெறவேண்டும்' என்று அவள் வேண்டினாள். அவளது அவ்வார்த்தையினாலேயே சந்திராபீடன் தன்னை அனுக்கிரஹிக்கப் பெற்றவனாகக் கருதி, எழுந்து, பக்தியுடன் தலைவணங்கி, 'அம்மணி! தமது உத்திரவின்படியே' என மொழிந்து, சீடன் போல் அவளைப் பின்பற்றலானான். சென்று கொண்டே அவன் 'ஆ! இவள் என்னைக் கண்டதும் மறைந்து விடவில்லை. இவள் வரலாறுகளை வினவுவதில் என் இருதயத்திற் குதூஹலம் குடிகொண்டு விட்டது. முனிஜனங்களுக்கும் துர்லபமான திவ்ய வடிவம் பெற்றிருந்தும், இவளது ஆதராதிசயம் தாக்ஷிண்ணியம் மேலிட்டதாகக் காணப்படுகிறது. ஆகவே, நாம் வினவின் தவறாது தன் செய்திகளை மொழிந்திடுவளென்று நம்புகிறேன்' என்று தீர்மானித்துக் கொண்டான். அப்பால் நூறடி தூரம்போல் சென்று குகை யொன்றைக்கண்டான். அக்குகையில் மணிமயமான கமண்டலங்கள் வரிசையாக வைக்கப் பெற்றிருந்தன; ஒரு புறத்தில்

யோகப்பட்டை * ஊசலாடிக்கொண்டிருந்தது; ஓர் வகைச் சுமைதாங்கியின் சிகரத்தில் தேங்காய் மட்டையினுல் செய்த தூய்மையான பாதரக்ஷைகளிரண்டு கட்டிவிடப்பட்டிருந்தன; ஒரு மூலையில் சங்கமயமான பிக்ஷைக் கலமொன்றும், மற்றொரு பாரிசத்தில் திருநீறடங்கிய சுரைக் குடுவையும் வைக்கப்பட்டிருந்தன. இவன் அக்குகையின் வாயிற்படியிலிருந்த கற்பாறையின்மீது உட்கார்ந்தான். அவளும், மரவுரிப்படுக்கையின் தலைமாட்டில் வீணையை வைத்தாள் பின்பு இலைகளாற் செய்த தொன்னையில் மலையருவியிலிருந்து அர்க்கியநீர் ஏந்திவந்தாள். அங்ஙனம் வந்த அக்கன்னிகையை நோக்கி, 'அம்மணி! அருள் புரிவீராக. இவ்வளவு உபசாரம் வேண்டாம். உமது பார்வையே பாவங்களனைத்தையும் அகற்றிப் பரிசுத்த மாக்குவதற்குப் போதுமானது; உட்காருங்கள்' என்று வேண்டினன். ஆகிலும் அவள் நிர்ப்பந்திக்கவே அதிதிபூஜை யாவையும் பணிவுடன் பெற்றுக்கொண்டான். அவள் அதிதிபூஜை செய்து விட்டு, மற்றொரு பாறையின் மீதுட்கார்ந்தாள். ஓர் நொடிப்பொழுது சும்மா விருந்து, மெதுவாக அவள் சந்திராபீடனது செய்திகளை வினவ, அவனும், திக்விஜயம் முதற்கொண்டு கின்னரதம்பதிகளைப் பின்தொடர்ந்து அவ்விடம் வந்த தீருக தனது வரவின் வரலாற்றை முற்றிலும் மொழிந்தான். இவனது விருத்தாந்தங்களை அவள் அறிந்து எழுந்திருந்து, பிக்ஷைக் கலத்தைக் கையிலேந்தி, அவ்வாச்ரமவிருக்ஷங்களின் அடித்தடங்களிற் போய் இங்கு மங்குமாக உலாவினள். சிறிது நேரத்திலேயே அவளது அப்பிக்ஷாபாத்திரமானது, தானகவே விழுந்த பழங்களால் நிரம்பிவிட்டது. திரும்ப

* யோகப்பட்டை—ஜபம் முதலியது செய்கையில் தரித்துக் கொள்ளும் கிருஷ்ணாஜினப் பட்டை.

வந்து அக்கனிகளை யுபயோகிக்குமாறு சந்திராபீடனைக் கேட்டுக்கொண்டாள். அவன் ' தவங்களுக்கு அஸாத்தியமானதொன்றுமில்லை. இதைவிட வேறு விந்தையுமுண்டோ? அசேதனங்களான அடவிவிருக்ஷங்களும் இம்மாதரசிக்குக் கனிகளைத் தானகவே கொடுக்கின்றனவே! இதுவும் ஒரு விசித்திரம்' என்று வியப்புற்று எழுந்து, அதே இடத்திற்கு இந்திராயுதத்தை யோட்டிவந்து, சேணத்தைக் கழற்றி, சற்றுத்தூரத்திற் கட்டிவிட்டு, மலையருவிநீரில் நீராட்டஞ் செய்து, மிகவும் இனிய அக்கனிகளைப் புஜித்து, பனிபோல் மிகக் குளிர்ந்த மலைச்சாரலின் தண்ணீரையும் அருந்தி, ஆசமனம் செய்து விட்டு, அக் கன்னிகையும் ஜலம் பலம் மூலம் முதலிய உணவுகளை யுண்ணும் வரையில், தான் தனியாக ஓரிடத்தில் அமர்ந்திருந்தான். பிறகு ஸந்தியாகாலத்திற் கேற்ற சடங்குகளையும் நிறைவேற்றியவளாய், ஓர் பாறையின்மேல் அவளும் வந்து உட்கார்ந்தாள். சந்திராபீடன் சற்று ஸமீபத்திற் சென்று உட்கார்ந்து கொண்டு, சில க்ஷணநேரம் சும்மா விருந்துவிட்டு, விநயத்துடன் இவ்வாறு வினவினன்:—'அம்மணி! எளிய மனித ஜாதியைச் சேர்ந்த என்மீது மேன்மைதங்கிய தாங்கள் அருள் புரிந்து விட்டீர்கள். மஹான்கள் சிறிது அருள் புரிந்தாலும், அத் தயவானது கீழ்ப்பட்ட மனிதனுக்குப் பெரிதும் துணிவைத் தருவது இயல்பு. உன்னுடைய தயவும் அங்ஙனமே உங்களை வினவுவதிலிருந்த ஆவலை மேன்மேலும் தூண்டிவிட்டது. உமக்கு அதிக ஆயாஸமாக வில்லாதிருப்பின், நான் கேட்கும் விஷயங்களைக் கூறி என்னை யனுக்கிரஹிக்கக் கோருகிறேன். தேவர்களில் எந்த ஜாதி உம்முடைய பிறப்பினல் பெருமை படுத்தப்பட்டாயிற்று? மலர்கள் போல் ஸுகுமாரமான இவ்விளம்பிராயத்தில் விரதங்களைக் கைப்பற்று

வானேன்? இவ்வயதெங்கே! இவ்வழகெங்கே! இந்திரியங்களை யடக்கியாளும் இக்கார்ய மெங்கே! இது வெகு விந்தையென எனக்குத் தோன்றுகிறது; ஒருத்தியாகவே ஜனஸஞ்சார மற்ற இவ்வனத்தில் வந்து வஸிக்கும் காரணந்தான் யாது? உலகில் அனைவரது படைப்புக்கும் ஸாதனங்களான அதே பஞ்சமஹா பூதங்களால் ஆக்கப்பெற்ற உமது சரீரம் இவ்விதம் வெகு மனோஹரமான வெண்ணிறம் பெற்றிருப்பதேனோ? இதை நான் வேறெங்கும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. இதை யெல்லாவற்றையுங் கூறி, நீர் எனதர்வலைத் தீர்க்கவேண்டும்' என்று இவன் மொழிந்ததும், அவள் ஏதோ சிந்தித்தாள்; கண்களை மூடியவாறு சிறிது நேரம் பேசாமலிருந்தாள்; உடனே துளித் துளியாகக் கண்களிலிருந்து ஜலம் வடிந்தது; தனக்குள்ளேயே புலம்பினாள். அவள் அங்ஙனம் அழத் தொடங்கியதைக் கண்டு சந்திராபீடன், 'ஓ! பரிபவத்திற்குரியதாகாத இத்தகைய திவ்யஜனத்தையும் விஸனங்கள் வருந்தச்செய்கின்றனவே! துயரங்கள் ஒருவரையும் விடுவதில்லை; இவ்வகையான மூர்த்திகள் சொற்ப சோகத்தினால் பாதிக்கக் கூடியவைகளல்ல; அற்பமான இடியின் வீழ்ச்சியால் தாணியானது சலித்துவிடாதன்றோ?' என்று சிந்தித்து, துயரத்தை அவளுக்கு நினைப்பூட்டுவதற்குக் காரணமானேனென்று தன்னை அபராதஞ் செய்தவனைப்போல வெண்ணி, எழுந்து, மலையருவியிலிருந்து முகத்தைக் கழுவுவதற்காக ஜலத்தைக் கைகளில் ஏந்திவந்தான். அவள் அவனது வேண்டுகோளுக்கிணங்கி, தனது கலங்கிய கண்களைக் கழுவிக்கொண்டு, மரவுரியின் முந்தானையை யெடுத்து முகத்தைத் துடைத்துவிட்டு, சுடச்சுடப் பெருமூச்செறிந்து, மெதுவாக மறுமொழி யுரைத்தாள்:—

"இராஜபுத்திர! நான் ஒரு துரத்ருஷ்டசாலி; வெகு வன்னெஞ்சக்காரி; என் வைராக்கிய விருத்தாந்தத்தைக் கேள்வியுறுவதிற் பயனென்ன? எனினும், பேராவலிருப்பின் கேட்பீராக:—

"தைவலோகத்தில் அப்ஸரஸ்ஸுகள் என்னும் கன்னிகைகள் உண்டென்று உமது காதில் விழுந்திருக்கும். அவர்களுள் பதினன்கு குலங்கள் உள. அவற்றுள் ஒன்று பகவானுன பிரம்மதேவனிடமிருந்து பிறந்தது; வேறொன்று வேதங்களிடமிருந்துண்டானது; மற்றொன்று அக்கினியினிடமிருந்து ஆவிர்ப்பவித்தது; இன்னுமொன்று வாயுவினிடமிருந்துற்பவித்தது; வேறொன்று அமுதங்கடைகையிற் கிளம்பிவந்தது; பின்னுமொன்று தண்ணீரிலிருந்து தோன்றியது! சூரியன் கதிரொளிகளிலிருந்து வேறொன்று வெளிவந்தது; சந்திரகிரணங்களிலிருந்து மற்றொன்று ஜனித்தது; புவியிலிருந்து ஒன்று உற்பவித்தது; மின்னலிலிருந்து ஒன்று ஸம்பவித்தது; மற்றொன்று மன்மதனல் படைக்கப்பெற்றது; நமனல் ஒன்று நிர்மிக்கப்பட்டது; தக்ஷப்பிரஜாபதியின் அளவற்ற கன்னிகைகளுக்குள் முனியென்றும் அரிஷ்டையென்றும் இரு கன்னிகைகள் உளர். அவ்விருவராலும் கந்தர்வருடன் சேர்ந்து குலங்கள் இரண்டு உண்டாக்கப்படலாயின; இங்ஙனம் இவை யனைத்தும் சேர்ந்து பதினன்கு குலங்கள். அவ்விரு குலமுமே கந்தர்வருக்கு தக்ஷப் பிரஜாபதியின் இரு புதல்விமாரிடமிருந்து ஜனித்தவை; அவற்றுள் முனி யென்பவளுக்குப் பிறந்த சித்திரஸேனன் முதலிய பதினறு புதல்வரில் கடைசிக் குமாரன் சித்திரரதன் என்பவர்; மற்ற உடன் பிறந்தோர் பதினைவரினும் இவர் குணங்களால் மிகவும் மேலானவர்; அவர் பாலியப் பருவத்திற்றனே கந்தர்வர் அனைவருக்

கும் அதிபதியாய்விட்டார். இதற்குச் சற்றுத் தூரத்தில் இப்பாரத வர்ஷத்திற்கு வடக்கில் கிம்புருஷ வர்ஷமென்னும் தேசத்தில் ஹேமகூடம் என்னும் குன்றமே அவரது வாஸஸ்தலம். ஆங்கு, அவரது புயபலத்தால் பரிபாலிக்கப்பட்டு இலக்ஷக்கணக்கான கந்தர்வர் குடிகொண்டிருக்கின்றனர். அவராலேயே சைத்திரரதம் என்னும் மனோஹரமான இக்கானகமும், அச்சோதமென்கிற இப்பெருங் கயமும் நிர்மிக்கப்பட்டன ; பகவானை இப் பரமேச்வரனையும் அவரே பிரதிஷ்டை செய்தார். அரிஷ்டை யென்பவளுடைய புத்திரர்களான ஆறு ஸஹோதரர்களுள் மூத்தவரும், மிகப் புகழ்பெற்றவருமான ஹம்ஸன் என்னும் கந்தர்வர், சித்திரரதன் என்னும் இக்கந்தர்வ ராஜனால் அவ்விரண்டாவது கந்தர்வகுலத்திற் பட்டாபிஷேகம் செய்விக்கப்பெற்று, சிறு பிராயத்திலேயே செங்கோலைச் செலுத்தலானார். அளவற்ற கந்தர்வப் படைகளால் சூழப்பெற்ற அவருக்கும் அக்குன்றமே குடியிருக்குமிடம். சந்திரகிரணங்களிலிருந்து பிறந்த யாதொரு அப்ஸரஸ்ஸுகளின் குலமுண்டோ, அதிலிருந்து பூஜ்யையான பார்வதீதேவி போன்றவளான கௌரீ யென்று பெயர்பெற்ற பெண்மணியொருத்தி ஜனித்தாள் ; அவள் மதியின் கதிரொளி ஜாலங்களினூடாகச் சிந்திய இலாவண்ணியமனைத்தையுங் கொண்டு படைக்கப்பெற்றவள் போல் வடிவழகு வாய்ந்தவளும், சந்திரகிரணங்களுக்கொப்ப வெகு வெண்ணிறம் பொருந்தியவளுமாயிருப்பவள். அவளை இரண்டாவது கந்தர்வ குலத்திற்கு அதிபதியான ஹம்ஸன் மணம்புரிந்தனர். அவள் அவரது அந்தப்புரத்தேவிமார்களுக்கெல்லாம் தலைவியாகவும் ஆயினள்.

மேன்மை பொருந்திய அவ்விருவருக்கும், நானொரு

புதல்வியே துயரத்திற்கென்றே வந்து பிறந்தேன். என் தந்தையோ, வெகு நாட்கள் மக்கட்பேறு இல்லாதவராதலால், மைந்தன் பிறந்ததற்கும் மேலாகக் களி கூர்ந்து என் பிறந்ததினத்தை வெகு ஸம்ப்ரமமாகக் கொண்டாடி, நிகரற்ற வெண்ணிற மேனியுடையவளெனக் கருதி மஹாச்வேதை யென்று எனக்கு நாமகரணமும் செய்தார். நானும் இன்ப துன்பங்களை யறியாது மனோஹரமான குழந்தைப்பருவத்தைக் கழித்துவந்தேன். நாளடைவில், வஸந்தருதுவில் இளந்தளிர்போலவும், தளிரில் மலர்போலவும், மலர்களில் மதுவைப் போலவும் எனதிடம் நூதன யௌவனப்பருவம் வந்து தோன்றியது.

பிறகு செந்தாமரை மலர்களைச் செழித்தோங்கச் செவதும், ஸகலப் பிராணிகளின் இருதயத்திலும் பரமானந்தத்தைப் புகட்டத் தகுந்ததுமான சித்திரைமாதத்தில் ஒருநாள் என் மாதாவுடன் நான் இவ்வச்சோத ஸரஸ்விற்கு நீராட வந்தேன். மரத்தடிகளில் புஷ்பங்களிலிருந்து சிந்திய திரளான தூளிகளால், இக்குளக் கரை உலாவுவதற்கு வெகு மனோஹரமாயிருந்தது ; ஆகவே நான் தோழிகளுடன் அங்குமிங்குமாகத் திரியலானேன். அக்கானகத்தில், அப்பொழுது, மற்ற மலர்களின் மணங்களை யெல்லாம் மறைத்துக்கொண்டு வந்த அதுகாறும் முகக்கப்பெறுத அபூர்வமானஓர் புஷ்பவாஸனையை முகர்ந்தேன் ; அது மானிடவுலகத்ததல்லாத திவ்யமணமாயிருந்தது ; இவ்வாஸனை யெங்கிருந்து வருகிறதென்று அறிய ஆவல்கொண்டு, நானும் அம்மலரின் மணத்தால் வலிய இழுக்கப்பட்டு சிறிது தூரம் திரிகையில், மஞ்சனமாடுவதற்கு வந்திருக்கும் வெகு மனோஹரமான முனிகுமாரரொருவரைக் காண நேர்ந்தது. அவர், மஹேச்வரனது நெற்றிக்கண் நெருப்பினல் எரிக்கப்பட்டுப்

போகவே, அதனல் வருந்தி தவம்புரியப்புகுந்த அவனது தோழனை வஸந்தனேவெனத் தோற்றினர். ஓர் அழகிய கமண்டலத்தை ஒரு கரத்திலும், மற்றொரு கரத்தில் படிகக் கற்களாலாகிய ஜபமாலையையும் ஏந்திக் கொண்டிருந்தார். மேலும் அவர், கலைமகளின் விலாஸம் போன்றவராகவும், ஸர்வ வித்தைகளுக்கும் ஸ்வயம்வரபதிபோன்றவராகவும் காணப்பட்டார். தனக்கிடேன வயது வடிவங்களை யடைந்த வேறொரு இருஷிபுத்திரர், தேவதார்ச்சனையின் பொருட்டு பூக்களைப் பறித்துக்கொண்டே இவரைப் பின் தொடர்ந்து வந்தார்.

கிருத்திகை யென்னும் தாரகைக் கொத்துக்கு நிகரானதாய் மிகவும் அபூர்வமான ஒரு பூங்குலையை அவர் காதில் அணிந்திருந்தார். மற்ற மலர்களின் மணங்களை யெல்லாம் மறையச் செய்த பரிமளம் இப்பூங்குலையினுடையதே யென்று நிச்சயித்து, யௌவன புருஷனை அம்முனிகுமாரரையே பார்த்துக்கொண்டு சிந்திக்கலானேன்:—'ஓகோ !. அத்யற்புதமான அழகிய உருவங்களைப் படைக்கும் பிரம்மதேவனது பண்டகசாலைக்கு எல்லையில்லை போலும் ! ஏனெனில் மூவுலகங்களும் வியப்புறத்தகும் அளவற்ற அழகுள்ளவனை மன்மதனை யுண்டாக்கி, மீளவும் அவனது வடிவழகையும் மீறிய அபார ஸௌந்தர்யம் வாய்ந்த மாயமான முனிகுமாரனென்னும் மற்றொரு இம்மன்மதனும் படைக்கப்பெற்றானன்றோ? கிருஷ்ணபக்ஷத்தில் க்ஷயிக்கும் சந்திரனது ஸகல கலைகளையும் ஸுஷும்னையென்னும் கிரணநாடியின் வாயிலாக சூரியன் உறிஞ்சுகிறனென்று கூறப்படுகிறது; அஃது எனக்கு உண்மையாகத் தோற்றவில்லை; ஆனல், அவனது அக்கதிரொளிகள் யாவும் இம்முனிகுமாரரது உடலில் உண்மையாய் உட்புகுந்து வருகின்றன ; அன்றேல், அழ

கையெல்லாம் அபஹரிக்கக்கூடியதும், அபார ஆயாஸ
கரமுமான அருந்தவம் அனுஷ்டிப்பவருக்கு இத்தகைய
இலாவண்ணியமேது ?’ இவ்வாறு யோசித்துக்கொண்டே
நான் அம்முனிகுமாரரது அழகில் ஈடுபட்டு, புதிய யௌவ
னப்பருவத்திற்கு இயல்பாகவே முற்றிலும் பரவசமாய்விட்
டேன். மூச்சு விடுதலோடு கண்கொட்டுதலையும் அப்
பொழுது மறந்தேன். ‘ஆ! இஃதென்ன! நற்குலத்
துதித்த நங்கையருக்கு ஏற்காத இந்த அடாத செயலைச்
செய்ய முயன்றேனே!’ என அறிந்தவளாயினும், புலன்
களை யடக்கியாளத் திறமையற்றுப் போனேன். நிலையாக
ஓரிடத்தில் அழுத்தப்பெற்றவள் போலவும், சித்திரத்தி
லெழுதியவளைப்போலவும், அசைவற்ற அகில அவயவங்
களையுமுடையவளாய் நான் அவரையே வெகு நேரம்
பார்த்துக்கொண்டிருந்தேன். ‘பெண் மக்களுக்கு இவ்
வளவு பேதமையா! தவங்களுக்கு இருப்பிடமான சுட
ரொளிவீசும் இவ்வுருவமெங்கே? ஸாதாரண ஜனங்களாற்
கொண்டாடக்கூடிய இக்காமவிகாரங்களெங்கே? மன்
மதனால் இங்ஙனம் ஆட்டிவைக்கப்படும் என்னைக் கண்டு
இவர் நகைப்பரே! இவ்வண்ணம் இதை யான் அறி
றேனென்றாலும், இச்சமயம் என்னிடம் உண்டாயிருக்கு
இவ்விகாரத்தை யடக்கிக்கொள்ள அசக்தையாயிருக்கி
றேன். நினைவு தடுமாற்றம் நேரிடுவதற்குள்ளாகவே
நாம் இவ்விடம் விட்டு விலகிப் போவதே நன்று. ஒரு
வேளை இவர், தான் விரும்பாத என் மன்மதவிகார
களைக் கண்டு கோபங்கொண்டு, என்னைச் சபித்துவிடவு
கூடும்; இருஷிஜனங்களின் தன்மைக்கோ, சினமென
பது சிறிதும் தூரமல்ல’ என்று நினைத்து நான் அவ்விட
விட்டுப் போக விரும்பினேன். ஆனால் இருஷிஜாதியோ
ஜனங்கள் யாவராலும் தொழக்கூடியதென்று எ[illegible], அ

முனிகுமாரருக்கு வந்தனஞ்செய்தேன். பின்பு மஹா சக்திவாய்ந்த மன்மதனுடைய கட்டளை கடக்கமுடியாததலாலும், நூதனமான யௌவனமும் அவிநயங்களுக்கெல்லாம் ஆதாரமானதுபற்றியும், அந்தந்த விஷயத்திற்கு அவ்வவ்வாறு ஸம்பவிக்க வேண்டி விதி யேற்பட்டிருப்பதாலும், விரிவாகக் கூறுவானேன்?—எனது தௌர்பாக்கியத்தால் நான் இத்துன்பம் அநுபவிக்கவேண்டியிருப்பதாலும், என்னையுமறியாதுண்டான என் மன்மத சேஷ்டைகளைக் கண்டு அவரும் தைரிய மிழந்தார். அவரது அவ்வெளிப்படையான குழப்பத்தினால் எனக்கு மன்மதாவேசம் இருமடங்காயிற்று. தக்ஷணத்தில் வாயால் வர்ணிக்கக் கூடாத ஏதோ ஓர் அவஸ்த்தையை அநுபவிப்பவளானேன். எனக்குச் சிறிது ஸௌகர்யம் கிடைக்கவே, அருகிற் சென்று, இரண்டாவது இருஷிகுமாரரைப் பணிந்து, 'ஸ்வாமி! இத்தபோதனவாலிபரது நாமதேயம் யாது? எவரது புதல்வர்? இவர் காதிலணிந்திருக்கும் இப்பூங்கொத்து எவ்விருக்ஷத்தைச் சேர்ந்தது? இதற்குமுன் நான் அறியாத இம்மலரின் நறுமணம் மனதைக் கவருகிறது' என்று நான் செப்பியதை யவர் செவியுற்று, சிறிது சிரித்துக்கொண்டு, இங்ஙனம் கூறினார்: 'நங்காய்! இவ்வரலாற்றை வெகு விருப்பமாகக் கேட்கிறாய்; கூறுகிறேன் கேள்:—

ச்வேதகேது வென்று பிரஸித்தமான ஓர் மாமுனிவர் விண்ணுலகத்தில் வஸிக்கின்றார். அவர் ஓர் ஸுந்தர புருஷன். தேவதார்ச்சனையின் பொருட்டு அவர் ஒரு நாள் பங்கயமலர்களைப் பறித்துவர கங்கையில் இறங்கினார். ஆங்கு, கமலமலர்களில் வஸிக்கும் 'மஹாலக்ஷ்மி இவரது அபார ஸௌந்தர்யத்தைக் கண்டு மன்மதவிகாரமடைய, அந்த க்ஷணமே அவளிடம் ஒரு

குமாரன் பிறந்தான். பிறகு அவனை யேந்தி வந்து, 'ஐயன்மீர்! இவன் தமது புதல்வன்; தாம் இவனை யேற்கவேண்டும்' என மொழிந்து, அவள் ச்வேதகேதுவினிடம் அப்பாலகனை அளித்தாள். இம் முனிவரும், அக்குழந்தையை யெடுத்துப் போய், அவனுக்குச் சிறுவருக்குரிய செய்முறைகளையும் செய்து, தாமரைப் பூவினுதித்ததால், புண்டரீகன் என அவனுக்குப் பெயரிட்டார்; பிரம்மசர்ய விரதமேற்படுத்தி, ஸகலகலைகளையும் அவனுக்குக் கற்பித்தனர். இப் பூங்கொத்தோ பாற்கடலிலிருந்துதித்த பாரிஜாதமென்னும் விருக்ஷத்தினுடையது. பிரம்மசர்ய விரதத்திற்கு விரோதமாக இப்பூங்கொத்தை இவன் வைத்திருப்பது எங்ஙனமெனில், இன்று சதுர்த்தசியென்று, கைலையில் வீற்றிருக்கும் பார்வதீபதியைப் பணிவதற்கு விண்ணுலகமிருந்து நாங்கள் இருவரும் நந்தனவனத்திற்கு அருகே வந்துகொண்டிருந்தோம்; அக்காலை இப் பாரிஜாதப் பூங்கொத்தை யேந்திக்கொண்டு, அந்நந்தனவன தேவதையே நேரில் வந்து நமஸ்கரித்து, 'ஸ்வாமி! உமது காதில் இப்பூங்கொத்தை வைத்துக் கொள்ளவும்; பாரிஜாதமரம் இதனால் பயன் பெறட்டும்' என்று சொல்லிக்கொண்டு அவ்வனதேவதை பின்தொடர்ந்தாள். 'நண்பனே! குற்றமென்ன? அன்புடன் அளிப்பதை அங்கீகரிப்பாயாக' எனச் சொல்லி, விரும்பாமலிருப்பினும் இவனைக் காதில் இதை யணியச் செய்தேன். இதுதான் இம்முனிகுமாருடையவும் பூங்கொத்தினுடையவும் வரலாறு' என்றார். உடனே அத்தபோதனவாலிபர் சிறிது புன்னகை புரிந்து, என்னைப் பார்த்து 'அம்மணி! இதற்காக ஏன் இவ்வளவு கேள்விகள்! உனக்கு அவ்வளவு இன்பமளிப்பதாயிருந்தால் நீயே இதை வைத்துக்கொள்' எனக் கூறி என் அருகில் வந்து அப்

பூங்கொத்தைத் தன் காதிலிருந்து எடுத்து என் செவி
யில் அணிந்திட்டார். என் கன்னத்தைப் பரிசிக்கவே
அப்பொழுது அவர் கை நடுக்கமுற்றது ; இலஜ்ஜையிழந்
தார் ; அத்துடன் தன் கரத்திலிருந்த ஜபமாலையும் நழுவி
விழுந்தது ; அது நழுவியதையும் அவர் அறிந்தவரல்
லர். உடனே நான், அஜ்ஜபமாலை பூமியில் விழுவதற்கு
முன்னமே எளிதிலேந்தி, என் கண்டத்தில் அணிந்து
கொண்டேன்.

இச்சந்தர்பத்தில் குடையேந்தும் பரிசாரிகை 'அம்
மா! மஹாராணியார் மஞ்சனமாடிவிட்டனர் ; மாளி
கைக்குப் போகும் நேரமும் நெருங்கிற்று ; நீங்களும்
நீராட்டத்தை நிறைவேற்றுவீராக' என்றாள். அவர் முகத்
திலிருந்து என் பார்வையை வெகு துணிவுடன் மிக்க
சிரமப்பட்டுத் திருப்பிக்கொண்டு நீராடப் புறப்பட்டேன்.
இரண்டாம் இருஷிகுமாரர், அப்பொழுது அவருக்கு
அவ்வாறு தைரியத்தடுமாற்றம் உண்டானதைக் கண்டு,
சற்றுப் பிரணயகோபத்துடன் இங்ஙனம் உரைத்தார்:—
'புண்டரீக! இஃது உனக்குற்றதல்ல; ஸாதுக்களுக்குத்
தைரியமல்லவோ பெருந்தனம்? எவனோ ஸாமான்னி
யனைப்போல் நீயும் என்ன இம்மனக்குழப்பத்திற்கு உட்
பட்டுவிட்டனையே! உனது தைரியம் எங்கே சென்றது!
நமது குலத்தில் தொன்று தொட்டுவந்த அந்த பிரம்மசர்
யம் பறந்துவிட்டதோ? ஆசார்யோப தேசங்கள் எங்கே
போயின? அறிவானது பலவகையினும் பயனற்றதாய்
விட்டதே! கரத்திலிருந்து நழுவிய ஜபமாலையை அயலார்
அபஹரித்தனரென்பதையும் நீ காணவில்லையே! ஒ! இஃ
தென்ன உணர்ச்சியில்லாத்தன்மை! மிகவும் இழிந்தவளா
ன இவளால் உன் இருதயம் இனி வலிய இழுக்கப்படாத
படி தடுப்பாயாக'. இங்ஙனம் அவர் மொழிந்ததைக் கேட்

டுச் சிறிது வெட்கங்கொண்டவரைப்போல் புண்டரீகன், ‘நண்ப! கபிஞ்ஜல! என்னை நீயென்ன வேறுவிதமாய் நினைக்கின்றனையே! துர்விநீதையான இக்கன்னிகை எனது அக்ஷமாலையை அபஹரித்த இவ்வபராதத்தை யான் ஸஹியேன்’ எனக் கூறி, சந்திர பிம்பம்போன்ற தனது வதனத்தைக் கள்ளக்கோபத்தினால் ஒருவாறு இரமணீயமாக்கிக்கொண்டு என்றனை நோக்கி, ‘ஓ! சபலத்தன்மையாளே! ஜபமாலையைக் கொடாமல் இவ்விடம் விட்டு ஓர் அடிகூட எடுத்துவைக்கக் கூடாது’ என்றார். இம்மொழி கேட்டு, நான் என் கழுத்திலிருந்து என் முத்துமாலையைக் கழற்றி, ‘ஸ்வாமி! ஜபமாலையைப் பெற்றுக்கொள்ளுங்கள்’ என்று அவரிடம் கொடுத்தேன். அவர் என் முகத்திற்றானே திருஷ்டியைப் பற்றவைத்து, உணர்ச்சியேதுமில்லாத உள்ளத்துடன் ஏதோ ஒருவாறு கைநீட்டி அதைப் பெற்றுக் கொண்டார். நான் பிறகு குளிப்பதற்குக் குளத்திலிறங்கினேன்; பின்பு கரையேறி, தோழிமார்களால் வலிய அழைத்துச் செல்லப்பட்டவளாய், அவரையே நினைத்துக்கொண்டு ஒய்குப் பிரயாஸையோடு, அன்னையுடன் என் மாளிகை போய்ச் சேர்ந்தேன். அப்பால் கன்னிகைகளுடைய அந்தப்புரத்திற் பிரவேசித்தேன். நான் அவரது பிரிவாற்றாமையினால் சோர்வடைந்து,—அரண்மனையடைந்தேனா, அக்குளக்கரையிலேயே இருக்கின்றேனா, தனியாயிருக்கின்றேனா, பலர் என்னைச் சூழ்ந்திருக்கின்றனரா, எது ஒழுங்கானது, எது ஒழுங்கீனமானது என்கிற எதையுமே அறிந்தவளல்லள். அந்தப்புரத்து மாடியின்மீது போய், தோழிமாரையும் பரிஜனங்களையும் உள்ளே வராதபடி நிறுத்தி, நான் ஒருத்தியாகவே சாளரத்தில் முகம் வைத்தவளாய், புண்டரீகனிருந்த திசையையே பார்த்

துக்கொண்டிருந்தேன். அத்திக்கிலிருந்து வரும் பறவைகளிடமிருந்துகூட அவரது விருத்தாந்தத்தைக் கேட்க விரும்பினேன். அவர் முனிவர் தன்மையைப் பெற்றிருப்பதால் அவ்வேஷம் நாகரிகமாயிருப்பதாகவும், அவரது செவியின் பரிசத்தினல் பாரிஜாதமலர் மனோஹரமாயிருக்கின்றதெனவும், அவர் வஸிப்பதாலேயே தைவலோகம் இரமணீயமானதென்றும் இவ்வாறு அவற்றிற்கு இவரது ஸம்பந்தத்தினலேயே சிறப்பேற்ற நினைத்தேன். அவரது பாரிஜாதப் பூங்கொத்தைக் காதிலணிந்து மயிர்ச்சிலிர்க்கையுண்டான ஓர் கபொலத்தையுடையவளாய் அவ்வாறே அசையாமலிருந்தேன்.

இச்சந்தர்ப்பத்தில் என் தாம்பூலத்தட்டேந்தும் தரளிகை யென்பவள் என்னுடனே நீராடப் போயிருந்து, நெடுநேரம் சென்று திரும்பி வந்தாள். அந்நிலைமையிலுள்ள என்னை நோக்கி அவள் மெதுவாக மொழிந்தாள்:—'இராஜகுமாரி ! அச்சோத குளக்கரை யில் நாம் இரண்டு தாபஸகுமாரர்களைப் பார்த்தோமல்லவா ? அவர்களுள் உனது காதில் பாரிஜாதமலரைச் சூட்டின முனிகுமாரர், தன் தோழன் தன்னைப் பார்க்காமலிருக்கக் கொடிப்புதருகளினூடே மறைந்துகொண்டு என்னைப் பின்தொடர்ந்து வந்து உன்னைப்பற்றிய செய்திகளைவினவினர். அதற்கு நான் 'ஐய! இவள் ஹம்ஸனென்னும் கந்தர்வாதிபதியின் புதல்வி ; மஹாச்வேதை யென்பவள் ; கந்தர்வருக்கு வாஸஸ்தலமான ஹேமகூடகிரிக்கிப் போகின்ருள்' என்று பதிலுரைத்தேன். அவர் ஏதோ சிந்தித்துக்கொண்டு நெடுநேரம் என்னை நோக்கி விட்டு, 'அம்மா ! நீ கபடமற்றவளாகத் தோற்றுகிருய். உன்னிடம் ஒரு விஷயம் வேண்டிக் கொள்கிறேன். அதன்படி நீ செய்வாயா ?' என்று மீண்டும் வினவினர். நான் வணக்கத்

துடன் 'ஸ்வாமி! தம்மைப் போன்ற மேன்மக்களுடைய உத்தரவு எனக்கு அனுக்கிரஹமல்லவோ? தடையின்றி தமது கட்டளையைச் செய்வேன்; மொழிந்தருளவும்' என்றேன். உடனே பச்சிலைகளைப் பறித்து, ஓர் சிலையின் மீது அவற்றின் சாற்றைப் பிழிந்து, தன் உத்தரீயத்திலிருந்து மரவுரித்துண்டொன்று கிழித்தெடுத்துத் தன் நக முனையினால் அச்சாற்றைக் கொண்டு சிறு கடிதமெழுதினார். அதை மறைத்துக் கொண்டுபோய் உன்னிடம் இரஹஸ்யத்தில் கொடுக்கச் சொன்னார்' என்று சொல்லி தாம்பூலக் கரண்டத்திலிருந்து அதை யெடுத்து என்னிடம் கொடுத்தாள். அக்கடிதத்தில் வரையப்பட்டிருந்த விஷயம் இரம்யமானது; அது பின்வருமாறு:—

"மானஸஸரஸ்ஸிலுள்ள அன்னப்பறவை முத்து மாலை போல் வெளிறித் துலங்கும் பங்கயக் கொடியால் மயக்கப்பட்டு வலிய அத்திசை நோக்கி இழுக்கப்படுவது போல, தாமரைத் தண்டுபோல் குளிர்ந்து தவளமான நினது முத்துமாலையைக் கொண்டு ஆசைகாட்டி மன்மதனை என்றனிடம் மேலோங்கச் செய்தனையே" என்றவாறு. இக்கடிதம் மேல்வெள்ளம் ஆற்றைக் கலக்குவது போல என் மனதை முற்றிலும் குழப்பிவிட்டது; அதை மிக்க ஆவலுடன் மீண்டும் மீண்டும் படித்தேன். கன்னங்களில் எடுத்து அதை ஒத்திக்கொண்டேன். ஊழியர் எவரையும் உள்ளேவிடாமல் அவளுடன்கூட அவ்வுப்பரிகையின்மீது அவர் ஸம்பந்தமான இச்செய்தியையே பேசிக்கொண்டு பகற்பொழுதைப் போக்கினேன்.

பிறகு சூரியபிம்பம் மேற்றிசையிற் சாய்ந்தது. குளக்கரைக்கு வந்த அக்குடையேந்துபவள் வந்து, 'இராஜகுமாரி! அவ்விரு முனிகுமாரரில் ஒருவர் வாயிலில் வந்து நிற்கின்றார். ஜபமாலையைக் கேட்பதற்கு வந்ததாகவும்

கூறுகிறார்' என்றனள். முனிகுமாரரென்ற மாத்திரத்
திலேயே ஒரு கஞ்சுகியை யனுப்பி, அவரையழைத்துவர
உத்தரவிட்டேன். சற்றுநேரத்திற்கெல்லாம் மன்மதனுக்கு
வஸந்தன் போன்றும், வஸந்தகாலதிற்குத் தென்றற்
காற்று போன்றும் புண்டரீகனுக்கு அனுரூப ஸகாவாய
மைத்துள்ள கபிஞ்ஜலன் என்னும் இருஷிகுமாரர் வந்தார்.
அப்பொழுதுஅவர்பெரிதும் குழப்பமுற்றவராகத் தோன்
றினார். எழுந்து வந்தனஞ்செய்து, நானே ஆதரவுடன் ஆஸ
னமிட்டுபசரித்து, சிறிது ஸமீபத்தில் தரையினுட்கார்ந்
தேன். ஏதோ அவர் சொல்லவிரும்பியும் அதைச் சொல்
லாமல், எனதருகிலிருந்த தாளிகையை நோக்கினார்.
உடனே அவரது அபிப்பிராயமறிந்து, 'ஸ்வாமி! என்னை
விட வேறாக அவளைக் கருதவேண்டாம். சங்கையின்றியே
பேசலாம்' எனக் கூறினேன்.

கபிஞ்ஜலன் உடனே மொழியலானார்:—"இராஜ
புத்திரி! யான் என்னென்று சொல்வேன்! வெட்கத்
தினால் நாவெழும்பவில்லை. காய் கிழங்குகளைப் புசித்து,
சாந்தமாக வனங்களில் வஸித்துவரும் முனிஜனமெங்கே?
சிற்றின்பவாழ்க்கைகளில் மூழ்கிய இப்பிரபஞ்சமெங்கே?
தைவம் என்ன செய்ய முயன்றது பார்த்தையோ! அஃது
இம்மரவுரிக்குரியதோ? இல்லையேல், . சடைமுடிகளு
க்கு உசிதமானதோ? அல்லது, தவத்திற்குத் தகுந்
ததோ? அன்றேல், தர்மோபதேசங்களுக்கு அங்கமோ?
என் செய்வேன்! வேறு கதியில்லை. உண்மையைச்
சொல்லாமலிருப்பின் பெருந்தீங்கு ஸம்பவிப்பதாயிருக்
கிறது. எவ்விதமேனும் மித்திரனது உயிரைக் காக்
கவேண்டுமெனக் கருதியே கூறுகிறேன். சினங்காட்டி நா
ன் உனது முன்னிலையிலேயே அவனை அவ்வாறு கடுமை
ய[illegible]பேசி யிருக்கின்றேன். அங்ஙனம் மொழிந்து கோப

த்துடன் அவ்விடத்திலிருந்து வேறிடஞ் சென்றேன். நீ அவ்விடம் விட்டுப் போனதும், மறைந்துகொண்டு அவன் என்ன செய்கிறானென்று பார்த்தேன். அங்கு அவனைக் காணோம். 'மன்மதபரவசனாய் அவளையே பின்தொடர்ந்தானோ? மனக்குழப்பம் தெளிந்து வெட்கமேற்பட்டு அதனால் எனக்கெதிரில் வரமாட்டாதவனாய் மறைந்திருக்கிறானோ? அல்லது என்மீது சினங்கொண்டு விலகிப்போய் விட்டானோ? அன்றேல், என்னையே தேடி வேறிடம் போனானோ? அவன் ஒருக்கால் தைரியத்தடுமாற்றத்தினால் வெட்கமுற்று ஏதேனும் அநிஷ்டமான காரியத்தையும் செய்து விடுவான்; ஆதலால் இவனைத் தனியாக இப்பொழுது விட்டிருப்பது யுக்தமல்ல' என்று, ஆலோசித்துத் தேடமுயன்றேன். திடீரென மனக்கவலை மேலெழ, ஒவ்வொரு கொடி வீடுகளாகத் தேடிப் போகையில், அங்கோர் இலதாமண்டபம்; குளக்கரையில் வஸந்தருதுவுக்கு அது பிறப்பிடம் போன்றது; அந்த மனோஹரமான இலதாகிருஹத்தில் அவன் மன்மதாவேசத்தையடைந்து, முன்னிருந்த வடிவம் இதுதானோவென்று ஐயமுறக்கூடிய நிலைமையில், மிகவும் அசைவற்று சித்திரத்திலெழுதிய பதுமைபோலிருப்பதைப் பார்த்தேன். இமைகளசையாது மூடிய அவனது நேத்திரங்களிலிருந்து மாரிபோல் கண்ணீர் சொரிந்துகொண்டிருந்தது; கொடிவீடுகளிலிருந்து பரிமளம் பொருந்திய செண்பக மொட்டுகள், மன்மதனால் எறியப்படும் பிரத்தியக்ஷ அம்புகள் போல் அவன்மீது விழுந்துகொண்டிருந்தன; விடியற்காலத்து சந்திரன்போல் அவன் வெளிறியிருந்தான். சற்று நேரம் அவன் அந்த நிலைமையிலிருப்பதை உற்றுப்பார்த்தேன். என் மனம் படபடத்தது. 'இப்படியும் மன்மதவிகாரமுண்டோ? ஒரு நொடிப்பொழுதில் இவன் முற்றிலும்

மாறிவிட்டானே! ஞானராசியெல்லாம் ஒரு க்ஷணத்தில் இப்படியும் வீணாய் விடுமோ! அந்தோ! இது வெகு விந்தை! இவன் குழந்தைப்பருவம் முதற்கொண்டு வெகு தீரன்; ஒழுங்கு தவறாதவன்; நானும் வேறு முனி குமாரருங்கூட பிரமிக்கக்கூடிய நடக்கையுடையவன்; இப்போது எவனோ வேறொருவன்போல் மன்மதனால் மூடனாக்கப்பட்டானே! வாலிபப்பருவத்தில் ஒழுக்கக்கேடு நேரிடாமலிருப்பது அரிது' என்றும் எண்ணிக்கொண்டு, அருகிற் போய் உட்கார்ந்தேன். அவன் கண்களை மூடியவாறு தேகமறியாமல் அயர்ந்திருந்தான். அவன் தோளில் கைவைத்து, 'எனது நண்பனே! புண்டரீக! இஃதென்ன!' என வினவினேன். அவன் மெதுவாகக் கண்விழித்தான்; சிறந்த செங்கமலங்களுக்கொப்பாக அவனது கண்கள் சிவந்திருந்தன. என்னை வெகு நேரம் பார்த்துவிட்டு, பெருமூச்செறிந்து, வெட்கத்தினால் நா தழுதழுத்து, 'கபிஞ்ஜல! விருத்தாந்தத்தை யறிந்திருந்தும் என்னை வினவுகின்றனையே' என்று மெதுவாகக் கூறினான். அதுகேட்டு, விகாரத்தினின்றும் விலக்கக்கூடாதவனாய் அவனிருப்பதை யுணர்ந்தும், தகாத வழியிற் செல்லும் தோழனைச் சக்திக்கியன்றமட்டும் மறுக்கவேண்டுமென்கிற கொள்கையுடன், அவனுக்கு இவ்வாறு உபதேசித்தேன்:—

'எனது நண்ப! புண்டரீக! இஃதெனக்கு நன்றாகத் தெரிந்ததே; ஆகிலும் நான் ஒன்று வினவுகின்றேன். இப்பொழுது நீ ஆரம்பித்திருப்பது உன் ஆசிரியோரால் உபதேசிக்கப்பெற்ற மார்க்கமா? இல்லை, இவ்விதம் தர்ம சாஸ்திரங்களிற் படித்திருக்கின்றனையோ? அல்லது இது தவங்களின் புதிதான வகையோ? இஃதோர் முக்[illegible]ரும் யுக்தியோ? நீ எங்ஙனம் இவ்விழிவான காரி

யத்தை மனத்தினும் சிந்திக்கக்கூடும்? ஸாதுக்களால் இகழப்பெற்றதும், ஸாதாரண ஜனங்களால் புகழப்பெற்றதுமான இவ்விஷயங்களில் உனக்கும் இஃதென்ன வீணாசை? விஷயங்களனைத்தின் உண்மையையும் நீ அறிந்தவனாயிற்றே! புலன்களையும், மனதையும் நீ கட்டியாளமாட்டாதவனாய் போனபடி யெல்லாம் விட்டனையல்லவா? எவன்டா இம்மன்மதனென்பவன்! எழுந்திரு புண்டரீக!'. என்று மொழியும் என்னை மறுத்து, கண்ணீர்த்தாரையைத் துடைத்துவிட்டு, என் கையைப் பற்றிக்கொண்டு, இவ்வாறு செப்பலானான் :—'நேசனே! விரிவாகச் சொல்வதில் யாது பயன்? எவ்வகையிலும் நீ ஸுகமாயிருக்கின்றனை. பிறருக்கு உபதேசிப்பது எளிது. எவனுக்கு இந்திரியகங்கள் இருக்கின்றனவோ, கூறுவனவற்றைக் கிரஹிக்கும் நிலைமையில் எவன் இருக்கின்றானோ, நன்மை தீமைகளைப் பகுத்தறிகிறானோ, அவனல்லவோ உபதேசத்திற்குரியவன்? எனக்கோ இவை யனைத்துமே நெடுந்தூரம் கடந்துபோயின. பிராணன் மாத்திரம் போகாமல் எவ்வகையிலோ நிற்கின்றது. உபதேசிக்குங் காலம் வெகுதூரம் சென்று விட்டதப்பா. நீயன்றி வேறு எவர்தான் இந்த ஸமயத்தில் எனக்கு உபதேசிக்கப் போகின்றனர்? உலகத்தில் உனக்கீடான வேறு உரவினரும் என்றனுக்கு உண்டோ! என் செய்வேன்? இக்கஷ்டநிலைமையை நீயும் இதோ பார்க்கின்றனையே! நான் பிழைத்திருக்குமளவினும் இந்த ஸங்தர்பத்திற்கேற்ற பரிஹாரம் ஏதேனும் செய்துகொள்ள விரும்புகிறேன். என் சரீரம் எரிகின்றதே! இந்த ஸமயத்திற்குற்றது எதுவோ அதை நீ செய்வாயாக' என மொழிந்து மௌனமாயிருந்தான். இனி உபதேச வார்த்தைகளைக் கூறி அவனை அந்நிலைமையிலிருந்து மீட்பது

யாத காரியமென்று தீர்மானித்து, உயிரைக் காப்பதற்குரிய உபாயங்களைச் செய்ய முயன்றேன்; குளிர்ந்த வாழையிலைகளால் வீசி வியர்வையைத் தணிக்கவும், சந்தனப்பூச்சிட்டு, தாமரைத் தளிர்களால் சயனமிட்டு தாபத்தைத் தீர்க்கவும் செய்தேன். அப்பொழுது ஏதேதோ எண்ணினேன்:—'உலகவாழ்க்கை யேதுமறியாது, நியதமாய் வனவாஸஞ்செய்யும் இந்த இருஷிஜனமெங்கே! பற்பல விலாஸரஸங்களின் இராசியெனத்தகும் கந்தர்வாதிபதியின் புதல்வியான மஹாச்வேதை யெங்கே! பொருந்தக்கூடாத விஷயங்களிலும் இங்ஙனம் இவனுக்குப் பிரவ்ருத்தியா? மன்மதன் முயன்றால் இயற்கையையும் செயற்கையையும் ஒன்றாக இயற்றிவைப்பான். இரவுகூட பகலுடன் ஒன்று சேரும்! நிலவும் இருளைத் தொடர்ந்து நிற்கும். அந்த அருந்தவமெங்கே! இந்த அவஸ்த்தை யெங்கே! பலவகையிலும் பரிஹரிக்கக்கூடாத ஆபத்து வந்து நேர்ந்தது. இப்பொழுது வேறுகதியென்ன? எப்படி இவன் ஜீவித்து எழுந்திருப்பான்? இச் சிந்தையெல்லாமெதற்கு? நல்லதோ அல்லது பொல்லாததோ எந்த உபயத்தினாலாகிலும் நண்பனது பிராணனைக் காப்பது கடமையெனச் சான்றோர் கூறுகின்றனர். அப்படியானால் மஹாச்வேதையைத் தவிர்த்து, இவனைப் பிழைப்பிக்கும் வழி வேறொன்றுமில்லை. தானாகவே அவளிருக்குமிடம் சென்று தனதிஷ்டத்தைப் பூர்த்திசெய்துகொள்ளும் தைர்யமும் இவனுக்கில்லை. ஆகையால் அவளிருக்குமிடம் நான் சென்று இவனது இந்நிலைமையைக் கூறலாம்' என்று தீர்மானித்துப் புறப்பட்டேன். ஒரு வேளை வெட்கங்கொண்டு என்னை மறுத்துவிடுவானோவென்று ஸந்தேஹித்து, அவனிடம் சொல்லாமலே, தந்திரமாக அவ்விருந்தெழுந்து இதோ வந்து சேர்ந்தேன். உள்ள

நிலைமையையும் விளங்கக் கூறிவிட்டேன். இந்த ஸந்தர்ப்பத்திற்குரியது எதுவோ, இத்தகைய அன்பிற்கு எது அநுரூபமானதோ, எமது வரவுக்கு ஏது ஏற்றதாகுமோ, உனக்கும் யாது உசிதமானதோ அவ்வாறு செய்வதில் நீதான் அதிகாரியாகிறாய்". என்று மொழிந்துவிட்டு, நான் என்ன சொல்லப்போகிறேனென்பதில் ஆவலுடன் என் முகத்தை உற்றுநோக்கிக் கொண்டிருந்தார்.

உடனே என் மனம் இன்பத்தில் அமிழ்ந்தது. மனோரதம் பூர்த்தியாயிற்றென நினைத்தேன். இலஜ்ஜையினால் முகத்தைக் கவிழ்ந்து கொண்டேன். கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பம் என்னையுமறியாமலே பெருகிற்று. 'தைவாதீனமாய் இம்மன்மதன் என்னைப் போலவே புண்டரீகனிடமும் ஆவேசம் செய்தான். அந்த இருவிகுமாரருடைய நிலைமை நிச்சயமாகவே அத்தகையதாயிருக்குமாயின், இம்மன்தன் எனக்குச் செய்யாத உதவியென்ன ? எனக்கு இனி யென்ன குறை ! இவருக்கு நான் எங்ஙனம் பதிலுரைப்பேன் !' என்று நான் யோசித்திருக்கையில், விரைவாக வாயிற்காப்பவள், என் தாயார், நான் சுகவீனமாயிருப்பதையறிந்து, என்னைப் பார்க்க வந்துவிட்டதாகக் கூறினாள். கபிஞ்ஜலனும், இனி ஜன நெருக்கம் அதிகமாய் விடுமெனக் கருதி, உடனே எழுந்து, 'இராஜபுத்திரி நெடுநேரமாய்விட்டது ; சூரியனும் இதோ அஸ்தமிக்கின்றான்; ஆகையால் நான் போய்வருகின்றேன். ஸர்வவிதத்திலும் மித்திரனுக்கு உயிர்ப்பிச்சை யளிக்கவேண்டுமெனக் கோரி இதோ யான் அஞ்ஜலி செய்கின்றேன்' எனச்சொல்லிவிட்டு, வெளிக்கிளம்பி தன்னிருப்பிடம் சென்றார். என் அன்னையும் அருகில் வந்து, வெகு நேரம் இருந்துவிட்டு, தன் மாளிகையேகினாள். அவள் அங்கு வந்து செய்தது யாதென்றேனும், சொன்னதென்ன

வென்றாகிலும் எனக்கு ஒன்றுமே தெரியாது. யான் மெய்
மறந்து கிடந்தேன். இதற்குள் இரவு நெருங்கி இருள்
வந்து என் மனதைப்போல் உலகையும் கவிந்து கொண்
டது. அப்பொழுது நான் தரளிகையினிடம் இங்ங
னம் கூறினேன்:—' என் மனம் கடுங்கவலைப் படுவதை
நீ காணவில்லையோ? நான் சுயமாகச் செய்யவேண்டு
வதை அணுவளவேனும் அறியக்கூடவில்லை. இதில் உசி
தம் யாதென்று நீதான் எனக்கு அறிவிக்கவேண்டும்.
உன் முன்னிலையிற்றானே கபிஞ்ஜலனும் இங்ஙனம் கூறிப்
போனார்? இதரகன்னிகைபோல் இலஜ்ஜையை இழந்து,
தைரியத்தைத் துறந்து, விநயத்தை விட்டுவிட்டு, பழி
யைப் பாராட்டாது, ஆசாரத்தை அதிக்கிரமித்து, ஒழுக்
கத்தை ஒழித்து, குலத்திற் கருத்துவையாது, மூடத்தன
மாய் மனம் போனபடி செல்லுபவளாய், தந்தையின் ஆஞ்
ஞையைப் பெறாமலும், அன்னையினால் அநுமோதிக்கப்
படாமலும் நானே சென்று ஒருவரை மணம்புரிவதா? அப்
படிச்செய்தால் பெரியோரைப் புறக்கணித்த மஹத்தான
அதமர்மம் வந்து ஸம்பவிக்கும். அல்லது தர்மத்திற்கஞ்சி,
உயிர்துறப்பதை அங்கீகரிப்பேனாகில், தானாக வந்து நம்
மைப் பெருமைபடுத்திய பூஜ்யரான அக் கபிஞ்ஜலனை வஞ்
சனை செய்தவளாவேன். அல்லாமலும், அப்புண்டரீக
னது உயிருக்கு அபாயம் உண்டாகுமாகில், அதுவும்
முனிவரது வதையினால் ஏற்பட்ட பெரும் பாதகமாகுமே'
என்று ஏதேதோ வினவிக்கொண்டிருந்தேன். இதற்குள்
கீழ்திசை வெளிறிற்று. சற்றுக்கெல்லாம் நல்முத்து ராசி
போன்ற நிலவைப் பரப்பிக்கொண்டு சந்திரன் உதித்
தான். அச்சந்திரோதயத்தினால் இரமணீயமாயிருந்த
அவ்விரவின் நிலைமையானது என் மனதை மேன்மேலும்
[illegible]பமுறச் செய்து மூர்ச்சையை விளைவித்து விட்

டது. தாளிகை செய்த சிறந்த சிதோபசாரங்களால் களை தீர்ந்து கண்விழித்துப் பார்த்தேன். தாளிகை கண்ணும் கண்ணீருமாய் கலங்கிய முகத்துடன் அருகிலுட்கார்ந்துபசாரம் செய்கிறாள். நான் கண் திறந்ததைப் பார்த்ததும், அவள் கைகூப்பி, 'அம்மா! இராஜகுமாரி! இதிலென்ன வெட்கம்? இவ்விஷயத்திற் பெற்றாரின் அனுமதியை யெதிர்பார்க்க வேண்டுமென்று நியமமில்லை. எனக்கு நீ அனுமதி கொடுத்தால் உன் பிராணநாதனை இதோ போய் அழைத்து வருகிறேன். அங்ஙனமில்லையேல், நீயும் எழுந்திரு, இருவரும் செல்வோம்' என்று வேண்டினாள். அவள் யோசனையின்படி உடனே வெகு சிரமத்துடன் எழுந்து அவரிடம் செல்லப் பிரயாணமானேன். அச்சமயம் எனது வலது கண் துடித்தது. அவ்வவசகுனத்தினால் என் மனம் கவலையுற்றது. அப்பொழுது அமுதப் பெருக்கைக் கொப்புளிப்பதுபோல் சந்திரமண்டலம் தனது நிலவினால் உலகமனைத்தையும் பால்போல் பிரகாசமாகச் செய்தது. புஷ்ப-சந்தன-தாம்பூலாதிகளை யெடுத்துக்கொண்டு தரளிகை பின்பற்ற, நான் சிவந்த ஆடையினால் சிரஸ்ஸைப் போர்த்துக்கொண்டு வேறு எவரு மறியாமல் உப்பரிகையை விட்டுக் கீழே இறங்கினேன். அங்கிருந்து உத்தியானவனத்தின் பிரத்தியேகமான ஓர் வாயிற்படியின் வழியாய் வெளிக்கிளம்பி, அவளுடன் அந்த ஸமயத்திற்கேற்ற ஸல்லாபங்களைச் செய்துகொண்டே முனிகுமாரரிருக்குமிடம் நோக்கிச் சென்றேன். அங்கு பாதைகளிற் படிந்து என் பாதங்களிற் பற்றிக்கொண்ட புஷ்பதூளிகளை கைலைமலையின் மலையருவி நீரில் நான் கழுவிக் கொண்டிருக்கையில், இக்குளத்தின் பச்சிமதீரத்தில் அம்முனிகுமாரர் இருக்குமிடத்திலிருந்தே ஓர் அழுகுரலைக் கேட்டேன். வலது கண் துடிப்பதிலிருந்து

ஏற்கனவே நான் கவலையுடனிருந்து வந்தேன்; அவ்வழுகுரல் என் மனத்தை மீண்டும் கலக்கி விட்டது. ஏதேதோ அனிஷ்டத்தை யெல்லாம் நான் சிந்திக்க நேரிட்டது. 'தரளிகே! இஃதென்ன?' என்று திகிலுடன் கேட்டுக்கொண்டு, உடல் நடுநடுங்க வெகு விரைவாக அவ்விடம் சென்றேன். இராத்திரி வேளையாகையால் தூரத்திலிருந்தவாறே நன்கு செவியுறக் கூடுமாறு வெகு இரக்கமாகக் கபிஞ்ஜலன் கதறுவது காதில் வீழ்ந்தது. 'ஆ! மோசம்போனேன். ஆ! இஃதென்ன இவ்வாறு ஸம்பவித்ததே! அடா பாவி! மன்மதப் பிசாசே! இஃதென்ன, இவ்வடாத செயலைச் செய்தாயடா! ஓ மஹாச் வேதே! இவன் உனக்கு என்ன பொல்லாங்குச் செய்தானடி? ஆ தர்மமே தாங்குவாரற்றுப்போயினையே! ஆ அருந்தவமே ஆதாரமிழந்தனையே! ஓ கலைமகளே கைம் பெண்ணாய் விட்டனையே! ஓ விண்ணுலகமே வீணிற் பாழடைந்துபோயினையே! அப்பா நண்பனே! உன்றனைத் துறந்து யான் தனித்திருக்கச் சற்றும் ஸஹியேன். திசைகள் யாவும் என்றனுக்குப் பாழடைந்து விட்டனவே! இனி எவருடன் நடமாடுவேன்? எவரோடு ஸல்லாபம் செய்வேன்?' என்றும் இன்னும் பல வாறாகவும் புலம்பும் கருணைத் தொனி என் காதைத் துளைத்தது.

அது கேட்டு உடனே எனக்கு உயிர் வெளிக்கிளம்பியது போலாயிற்று. தூரத்திலிருந்தே கதறிக்கொண்டு, குளக் கரையின் கொடிகளிற் சிக்கி என் உத்தரீயச்சீலை கிழிந்து போக, மேடுபள்ளமறியாது எவராலோ எடுத்தேகப்படுப வளைப்போல் அவ்விடஞ் சென்றேன். யான் ஒரு பாவி! துரத்ருஷ்டசாலி! என்னென்று சொல்வேன்! குளக்கரைக்கு அருகில் ஓர் சந்திரகாந்தச் சிலாதலத்திற் பரப்பிய பங்கயக் தொ[illegible]மயமான சயனத்தின்மீது படுத்திருந்தவாறு மஹா

புண்ணியசாலியான அம்முனிகுமாரர் உயிரிழந்திருந்ததைப் பார்த்தேன். அந்நிலைமையில் அவரது உதடுகள் சிறிது திறந்திருந்தன; தந்தகாந்திகளால் அவரது முகத்தின் முன் புறம் வெளுத்திருந்தது. என்னைக் கண்டதால் கண்ணீர் இரு மடங்கு அதிகமாகப் பெருக, கரங்களைத் தூக்கிக்கொண்டு, ஐயோ வெனக் கதறி கபிஞ்ஜலன் உயிரிழந்த நண்பனைத் தழுவி யழுதார். உடனே நான் மூர்ச்சையில் ஆழ்ந்தேன். நான் சென்றவிடம் யாது, செய்ததென்ன வென்கிற எதையுமே யான் அப்பால் அறிந்தவளல்லள். அந்த க்ஷணத் தில் என் இருதயம் மிகக் கடினமாயிருந்ததினாலோ, இப் பாழும்முடல் பல்லாயிரந் துயரங்களையும் அனுபவிக்கவேண் டியிருப்பதினாலோ, அல்லது வேறு எக்காரணத்தினால் எனது ஜீவன் வெளிக்கிளம்பாமலிருந்ததோ, அதையும் நான் அறியேன். பின்னர் எனக்கு வெகு நேரங் கழித்து நினைவு வந்தது; தழலில் விழுந்தவளைப்போல் புவியிற் புரண்டு நான் தவித்துக் கொண்டிருப்பதாயுணர்ந்தேன். சிந்திக் கக்கூடாத அவரது அம்மரணத்திலும் நான் ஜீவித்திருப் பதிலும் அந்த க்ஷணம் எனக்கு நம்பிக்கையில்லை. ‘ஆ! ஆ! இஃதென்ன இவ்வண்ணம் நேர்ந்ததே!’ என்று நினைத்து கதறிக்கொண்டு, ‘ஹா! ஜீவிதேச்வரா! கதியற்ற வளான என்னைக் கருணையின்றியே தனித்துவிட்டு நீர் எங்கே செல்லுகிறீர்? உமது பிரிவாற்றாமையால் நான் எவ்வகையான அவஸ்தையை அனுபவித்தேன் என் பதைத் தாளிகையைக் கேளும். ஒரு பகலையும் ஆயிரம் யுகங்களென்றெண்ணி வெகு கஷ்டத்துடன் கழித்தேனே! அருள்புரிந்து ஒரு முறையேனும் என்னுடன் பேச வேண்டாமா? நான் சிறுமி; காரணமில்லாது இப்படி உமது அடியாளைத் துறந்து விட்டுப் போகிறீரே! நான்

இன்னும் இதோ உயிர்பிழைத்திருக்கின்றேனே! ஓ! உம்மையும் இழந்தேன்; நல்லொழுக்கமும் ஒழிந்தது; உறவினரையும் துறந்தேன்; பரலோகமும் பாழாயிற்று. சீ! என்னைச் சுடவேண்டுமல்லவா? என்னிமித்தமாக வல்லவோ உமக்கு இந்நிலைமை வந்து நேர்ந்தது? இனி எனக்கு அகத்தினால் என்ன? அன்னையினாற்றான் என்ன? தந்தைதான் எதற்கு? வேறு உறவினரால் யாது பயன்? பரிஜனத்தினாற்றான் ஆகவேண்டுவது யாது? ஓ தைவமே! கருணைபுரிந்து கடாக்ஷிப்பாயாக; கணவன் பிக்ஷையைக் கொடுத்தருளவேண்டும்! எல்லா வல்லமையும் வாய்ந்த ஓ தலைவியே! தயவுசெய்து இவ்வநாதைப் பெண்ணை இரக்ஷிக்கவேண்டும்' என்று இன்னும் பலவகையாகப் புலம்பிக்கொண்டு—நான் எவ்வளவென்றுதான் நினைவு வைத்துக்கொள்வேன்?—ஏதோ பேய் பிடித்தவளையொப்பக் கதறினேன். என் கையால் அவரது கபோலங்களிலும், நெற்றியிலும், தோள்களிலும் தடவிக்கொடுத்து, 'புண்டரீக! மிகவும் கன்னெஞ்சராயிருக்கின்றீரே! நான் இவ்வாறு துயருற்றிருக்கையிலும், நீர் என்னைக் கவனிக்கவில்லையே' என்றும் பலவாறு புலம்பினேன்" என்று மஹாச்வேதை தன்வரலாற்றைச் சொல்லி வருகையில், முன் கடந்துபோன கடுமையான நிலைமையை இப்பொழுது அநுபவிப்பவள்போல், நினைவு தடுமாறி திடீரெனக் கற்பாறையின்மீது சாய்ந்தாள். சந்திராபீடன் வெகு கவலையுடன் பரிஜனம்போல் மிகப் பரபரப்புடன் அவளைத் தாங்கிக்கொண்டான். அவளது மரவுரிமயமான உத்தரீயத் தலைப்பினாலேயே மெதுவாக வீசி நினைவு வரச் செய்தான். அவன் உள்ளங் கசிந்து, மூர்ச்சையினின்று தெளிவடைந்த அவளை நோக்கி, 'அம்மணி! நான் [illegible] பழைய துயரத்தைப் புதிதாகச் செய்து

விட்டேனே ; இக்கதையைச் சொன்னது போதும். இதைக் கேட்க எனக்கும் ஸஹிக்கவில்லை' எனக் கூறினன். அதற்கு அவள் பெருமூச்செறிந்து, கண்களில் தாரைதாரையாய் நீர் சொரிய, மீண்டும் இங்ஙனம் மொழிந்தனள் :—' இராஜபுத்திர! கொடியதான அப்பாழும் இரவிலேயே எவ்வுயிர் நீங்கிப்போகாமலிருந்ததோ, அத்தகைய எனதுயிர் இப்பொழுது என்னைத் துறந்துவிடுமென்பது வீணை விஷயம்; உண்மையாகவே இயமனுங்கூட கொடும்பாவியான என்னைக் காண விரும்பான். பேரிடியின் வீழ்ச்சிபோன்ற இச்சம்பவத்திற்குப் பிறகு நேரிட்ட அற்புதச் செயலைக் கேளும். நான் உயிருடன் இன்னும் இருப்பதற்கு நன்கு விளங்காத வகையில் தோன்றிய காரணமொன்றுண்டு. இத்துராசையாகும் பேய்த்தேரில்* பற்றுள்ளவளாய் இப்பாழுமுடலை இன்னமும் தாங்குகிறேன். அதன்பிறகு பிராணத்தியாகம் செய்வதாகத் தீர்மானித்து, சோகத்தில் மூழ்கியுள்ள தரளிகையை யழைத்து, சிதையை அடுக்கச் சொன்னேன்.

இச்சந்தர்ப்பத்தில், தலையில் வெண்பட்டுப் பாகை தரித்து, வெண்ணிறம் பொருந்திய வெகு உன்னதமான வடிவத்தைப்பெற்ற திவ்யபுருஷன் ஒருவன் சந்திரமண்டலத்திலிருந்து திடீரென இறங்கிவந்தான். வெளுத்துக் குளிர்ச்சிபொருந்திய தன் புயங்களால் மாண்டுபோயுள்ள புண்டரீகனின் தேஹத்தை யேந்திக்கொண்டான். உடனே என்னைநோக்கி கம்பீரமான குரலுடன், 'வத்ஸே! மஹாச்வேதே! நீ பிராணபரித்தியாகம் செய்யாதே; மீண்டும் இவன் உன்னுடன் சேருவான்' என்று ஆதரவுடன்

---

* பேய்த்தேர்—கோடைகாலத்தில் மைதானங்களில் வெயிலின் வெப்பத்தாற் காணும் வெள்ளம்போன்ற கானலின் தோற்றம்.

மொழிந்து, புண்டரீகனை யெடுத்துக்கொண்டு ஆகாயத்தில் எழும்பிச் சென்றான். நான் அஞ்சி நடுங்கினேன்; ஆச்சரியப்பட்டேன்; இஃதென்னென்று கபிஞ்ஜலனை வினவினேன். கபிஞ்ஜலனும் வெகு விரைவாக எனக்கு மறுமொழியுங் கூறாமலே எழுந்து, மிகக் கோபங்கொண்டு, 'ஓ! துஷ்டப்பயலே! என் நண்பனை எங்கு அபஹரித்துப் போகின்றாய்' என உரத்துக் கூறி, உயர நிமிர்ந்து தன் மேலிருந்த மரவுரியெடுத்து விசையாகக் கச்சு கட்டி, அத்திவ்ய புருஷனைப் பின்தொடர்ந்து வானத்தில் தானும் எழும்பிப் போனார். நான் பார்த்திருக்கையிலேயே அவர் அனைவரும் நக்ஷத்திரமண்டலங்களின் மத்தியில் மறைந்துவிட்டனர்.

எனக்கோ, அக்கபிஞ்ஜலனும் மறைந்துவிடவே துயரம் அதிகரித்தது; இன்னது செய்வதென்று அறிய முடியாதவளானேன். இஃதென்ன ஆக்சரியம்! எனத் தாளிகையிடம் கேட்டேன். அவ்வேவளைத்தாளிகையும் உடல் நடுங்கினாள்; ஆச்சரியப்பட்டாள்; நான் உயிர் துறந்து விடுவேனோவென்று அஞ்சினாள். அப்பால் அவள் மிகவும் இரக்கத்துடன் கூறியதாவது :—'இராஜகுமாரி! என்றனுக்கு ஒன்றும் தெரியவில்லை; இதுவோ விந்தையிலும் பெரும் விந்தை. இப்புருடன் வடிவமோ தேவாம்சமெனத் தொற்றுகிறது. திரும்பிச் செல்லுகையில், உள்ளங் கசிய இவர் உமக்கு ஆறுதலும் கூறினர். மேலும் நமது கண் முன்னிலையிலேயே இவ்விஷயம் ஸம்பவித்திருக்கிறது. ஆகவே நமது மனோரதம் கைகூடுமென்பதிற் சந்தேஹிக்க இடமில்லை. இத்திவ்ய புருடர் பொய் சொல்லிப் போவதற்கும் சிறிதும் காரணமில்லை. ஆனதுபற்றி, பிராணபரித்தியாகம் பண்ணும் பிரயத்தினத்திலிருந்து நீர் திரும்புவதே சாலவும் நன்று.

இவ்வித நிலைமையில் இதுவல்லவோ மேலான ஆறுதலுக்கு இடமாகின்றது? அன்றியும் கபிஞ்ஜலன் அப்புருடனையே பின்பற்றிச் சென்றிருக்கிறார். இத்திவ்ய புருடனின் வரலாறு, அவர் புண்டரீகனது தேகத்தை யெடுத்துக்கொண்டு போனதன் முகாந்தரம், உமக்கு ஆறுதல் கூறியதற்குக் காரணம் முதலிய எல்லா விவரங்களையும் கபிஞ்ஜலன் திரும்ப வந்ததும் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். அதன் பின்பு பிழைத்திருப்பதோ, உயிரிழப்பதோ இரண்டில் ஒன்றைச் செய்யலாம். மரணமென்பது துர்லபமானதல்ல. கபிஞ்ஜலனும் பிழைத்திருக்குமளவிலும் உம்மைக் காணவாராமல் எங்கும் நிற்கமாட்டார். ஆகையால் அவர் திரும்பி வரும்வரையிலேனும் இப்பிராணனை நீர் வைத்திருக்க வேண்டும்' என்று சொல்லி, என் பாதங்களில் விழுந்தாள். நானும் உயிராசையென்பது மீறக்கூடாததுபற்றியும், கபிஞ்ஜலன் திரும்பிவருவார் என்கிற ஆவலாலும் அச்சமயம் அவள் சொல்வதே யுக்தமெனக் கருதி, உயிரை யிழந்தேனில்லை. அன்றிரவு அவ்விடத்திலேயே நித்திரை கொள்ளாமல் புரண்டுத் தவித்துக்கொண்டு, நாகவாஸம்போன்ற அக்காளராத்திரியைத் தரளிகையோடு ஒருவாறு கழித்தேன். விடியற் காலையில் எழுந்து, இக்குளத்தில் நீராடி, இப்பொழுதுள்ள இந் நிலைமையிலிருக்கத் தீர்மானித்துக் கொண்டேன். புண்டரீகனிடமுள்ள அன்பினால், அவரது கமண்டலத்தைத் தண்ணீரருந்தவும், அவரது மாவுரிகளை யுடுத்திக்கொள்ளவும், அவரது ஜபமாலையைக் கழுத்திலணியவும் எடுத்துக் கொண்டேன். பிறகு ஸம்ஸாரம் ஸாரமற்றதெனவும், அதிக அன்பானது துன்பந்தருவதாகுமெனவும் நினைத்தேன். தாய்தந்தையர் முதலிய உறவினரையும், பரிஜனங்களையும் பரிஹரித்து, பிரஹ்மசர்ய விரதத்தையனுஷ்டிக்க

இங்ஙனம் துணிந்தேன். இக்குளத்தில் த்ரிகால ஸ்நானம் செய்து, காட்டிற் கிடைக்கும் கனி கிழங்கு முதலியதைப் புசித்து, என்னைக் காத்தருளும்படி இச்சிவபெருமானை வேண்டி யர்ச்சித்துக்கொண்டு, இக்குஹையில் தாளிகையோடு நெடுநாட்களாக மனம் வருந்தி வஸித்து வருகிறேன். பிராம்மண வதைசெய்த பாவியான எனது வரலாறு இவ்வகையானது. நீ மஹாபாக்கியவான். மனக்கிலேசந் தருவதான இவ்வரலாற்றைக் கேட்டு அடைந்த பயன் யாது?" என மொழிந்து, சரத்காலத்து வெண்முகில் சந்திரனை மறைப்பதுபோல், வெண்ணிற மரவுரியின் முந்தானை யெடுத்து முகத்தை மூடிக்கொண்டு, தாரைதாரையாகக் கண்ணீர் பெருகக் குரல்விட்டு அலறியழுதாள்.

சந்திராபீடனோ முதலிலேயே அவளது வடிவழகாலும், வணக்கத்தினாலும், தாக்ஷிண்ணியத்தாலும், அருந்தவத்தினாலும் அவளிடத்து அதிக கௌரவம் பாராட்டலானான்; பிறகு உண்மையான ஸத்குணங்களை விளக்குவதான அவள் கூறிய தனது செய்தியாலும், அவளது நன்றி பாராட்டுந்தன்மையினாலும் மனம் இழுக்கப்பட்ட இவனுக்கு அவளிடம் கௌரவ புத்தி இன்னும் விசேஷித்தது. உள்ளங் கசிந்து மெள்ள மெள்ள இங்ஙனம் கூறத் தொடங்கினான்:—

'அம்மணி! ஆயாஸங்களைக் கண்டு அஞ்சுபவரும், நன்றி பாராட்டாதவரும், ஸுகங்களிற் பெரும் பற்றுள்ளவருமான ஜனங்கள்ளல்லவோ அன்பிற்குற்றவாறு நடக்க முடியாதவராய் கண்ணீரைப் பெருக்குவதொன்றினால் மட்டும் பிரீதியை விளக்குவதுபோல் வீணில் அழுகின்றனர்? நீரோ காரியத்தினாற்றானே ஸகலத்தையும் செய்து வருகிறீரே; பிரீதிக்குத் தகுந்தவாறு நீர் பண்ணாத பணியுமுண்டோ? ஆகவே நீங்களுங் கூடவா அழுவது? பிறந்த நாள்முதல்

அன்புடன் பழகிய உறவினரையும் பரிசயமில்லாதவரைப் போல் பரிஹரித்து விட்டீரே! விஷயஸுகங்கள் உமக்கு அருகிலிருந்த போதிலும் அலக்ஷியமாகவே அவற்றைத் திருணம்போல் திரஸ்காரம் செய்தீர். மஹேந்திரனது செல்வங்களுக்கும் மேலான ஐச்வரிய ஸுகங்களை யெல்லாம் இழந்தீர். பங்கயக்கோடிபொன்ற இம்மேனியை அநுசிதமான ஆயாஸங்களால் அதிகமாய் இளைக்கச் செய்தீர். பிரம்மசர்ய விரதத்தையும் ஏற்றுக்கொண்டீர். அருந்தவத்தில் ஆத்மாவையும் செலுத்தினீர். பெண்பாலரால் செய்தற்கரிதான ஆரண்ணியவாஸத்தையும் அங்கீகரித்தீர். மேலும் துயரங்களால் பீடிக்கப்பட்டவர் தமதுயிரை ஆயாஸமில்லாமலே மாய்த்துக்கொள்ளுகின்றனர்; ஆனல் அவர் மஹாப்பிரயத்தினஞ் செய்து பெருந்துன்பத்திற்கே அவ்வாத்மாவை ஆளாக்குகின்றனர். உடன் கட்டையேறுவதென்னும் இவ்வழக்கமானது முற்றிலும் உபயோகமற்றது! தந்தை, உடன்பிறந்தோர், கணவன் முதலியவர் இறந்தாராகில், அவருடனே தாமும் உயிர்விடுவதென்பது மூடத்தனமான செய்கையாகும். தானே பிரிந்து போகாத உயிரை வலுவில் மாய்க்க முயலவே கூடாது. நன்கு ஆலோசிக்குங்கால் ஸஹிக்கக் கூடாத தமது மனவேதனையை வேறு வகையில் பரிஹரிக்க வகையில்லாமல், சுயநலங் கருதியே பிராணபரித்தியாகம் செய்யப்படுகின்றது. மாண்டுபோனவருக்கோ இதனால் குணமேது மிலது. அது பரலோகம் போனவரைப் பார்க்கும் உபாயமு மாகாது. தான் செய்த வினைப்பயன்களது பரிபாகத்திற்கேற்றவண்ணம் வேறு கர்மபூமியிற்றானே பராவசமாக இவ்வாத்மாவானது கொண்டு சேர்க்கப் படுகின்றது? இவ்வாத்மாவினிடமும் ஆத்மஹத்தி செய்துகொண்டவனது பாவம்

மாத்திரம் பற்றிக்கொள்கின்றது. பிழைத்திருப்பாராகில் அஞ்ஜலி ஜலங்கொண்டு தர்ப்பணஞ் செய்தாவது இறந்தவருக்கும் தன் ஆத்மாவுக்கும் உபகாரஞ் செய்யக் கூடும். தற்கொலை புரிந்தவரோ இருவருக்குமே பயனற்றவராகிறார். பிரக்ருத விஷயத்தை விசாரிப்போம். புண்டரீகன் திரும்பி வருவதில் ஐயமேதும் காணவில்லை. நீரோ அதன்பின்பு, 'மீளவும் இவரது சேர்க்கை யுனக்குண்டாகும்' என்று தற்செயலாய் தேவபுருஷன் சொல்லவும் கேள்வியுற்றீர். ஆதலால் ஐயமின்றி இம்மஹாத்மா கருணைபுரிந்து புண்டரீகனைப் பிழைக்கச் செய்யும்பொருட்டே அமரலோகத்திற்கு எடுத்துப்போயிருக்கவேண்டும்; ஸம்ஸாரச் செய்திகள் விதம் விதமானவை; தைவஸங்கல்பம் விசித்திரமானது; தபஸ்ஸித்திகளும் ஆச்சரியகரமானவை; கர்மங்களின் பலன்களும் பலவகைப்பட்டவை; ஸூக்ஷ்மமாக யோசிப்போமாகில் உயிரையளிப்பதற்கல்லாது, புண்டரீகனுடலை யெடுத்துப் போவதில் வேறு காரணம் எதுதான் சிந்திக்கக் கூடியது? இஃதெங்ஙனம் 'நேரிடுமென்று ஐயமுறவேண்டாம். இவ்விதம் ஸம்பவங்கள் உண்டாயிருப்பதாகக் கேட்டிருக்கிறோம். ஆம்; முன்பு அர்ஜுனன் அச்வமேதயாகக் குதிரையைப் பின் தொடர்ந்து செல்லுகையில், போர்க்களத்தில் தன் புதல்வனான பப்ருவாஹனன் என்பவன் அம்புகளெய்து அவன் பிராணனைப் போக்கிவிட, உலூபீ யென்கிற நாககன்னிகை அவனை மீளவும் பிழைப்பு மூட்டினாள். அச்வத்தாமாவினுடைய ஆக்னேயாஸ்திரத்தினால் எரிக்கப்பெற்று, இறந்தவாறே பிறந்த அபிமன்யுவின் மைந்தனான பரீக்ஷித்துக்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தரையின் புலம்பல்களைக் கண்டு கருணைபுரிந்து அடையவரிதான உயிரை அளித்தருளினாரன்றோ? இவ்விஷயத்திலும் எப்படியாகிலும் இவ்வாறே

ஸம்பவிக்கவேண்டும். மேலும் எஃதெவ்விதமாயினும் என் செய்யலாகும்? எவரை வெறுக்கலாம்? ஸர்வ வல்லமையும் வாய்ந்த அவ்விதியல்லவோ மேலானது? நமதிஷ்டப்படி மூச்சுவிடுவதற்கும் முடியாது. ஆகவே உம்மை வெறுத்துக் கொள்வதற்குக் காரணமேயில்லை. தைரியத்தை யிழக்கக் கூடாது. தைரியசாலிகளே ஆபத்தைக் கடந்துவிடுகின்றனர்.' இவ்விதம் பலவாறு அவளுக்கு ஆறுதல் சொல்லி, மறுபடியும் இரு கரங்களாலும் தான் ஏந்தி வந்த மலையருவி நீர் கொண்டு அவளை முகங்கழுவச்செய்தான்.

இத்தருணத்தில் மஹாச்வேதையின் மனமிரங்கக்கூடிய செய்திகளை யெல்லாம் செவியுற்று, சோகங்கொண்டவன் போல் சூரியபகவானும் ஒளி மழுங்கி பகற்பொழுதின் பணியிலிருந்து நீங்கிச் சாய்ந்துவிடலானான். பின்பு மஹாச்வேதையும் மெள்ள வெழுந்து கால்களைக் கழுவிக்கொண்டு, ஸந்தியையும் உபாஸித்துவிட்டு, வெகு சோகத்துடன் பெருமூச்செறிந்து, மாவுரிப்படுக்கையின்மீது உட்கார்ந்தனள். சந்திராபீடனும் எழுந்து ஸந்தியையைத் தொழுது விட்டு, அதே இரண்டாவது சிலாதலத்தின்மீது இளந் தளிர்களாற் சயனம் அமைத்துக்கொண்டுட்கார்ந்து, மஹாச்வேதையினது அதே விருத்தாந்தத்தை அடிக்கடி ஆலோசிக்கலானான். மற்றுபடியும் . அவளை நோக்கி, 'அம்மணி! வனவாஸத்தை விருப்புடனேற்று, துன்பங்களைக் கூடவே அனுபவிப்பவளான அத்தரளிகை யென்னும் உமது தோழி இப்பொழுதெங்கே' என வினவினன். பின்னர் அவள் இங்ஙனம் மொழிந்தனள்:—'ஓ பாக்கியவானே! அமுதத்திலிருந்து ஆவிர்ப்பவித்த அப்ஸரஸுக்களின் குலமொன்று உளதென யான் கூறினேனல்லவா? அக்குலத்தில் மதிரை யென்று பெயருடைய மாதுசிரோமணி ஒருத்தி உதித்

தாள். அவளைச் சித்திரரதன் என்கிற கந்தர்வராஜன் மணம் புரிந்தார். அவளுக்குக் காதம்பரீ யென்று பெயர்பெற்றவளான ஓர் பெண்மணி பிறந்தாள். அவளும் நானும் ஒரு தொட்டிலில் வளர்ந்தவர்கள். எனக்கு அவள் இரண்டாவது இருதயம் போன்ற பிறவித்தோழி. ஸங்கீதம் முதலிய கலைகளை நாங்களிருவரும் ஒரிடத்திற் கற்றுவந்தோம். நான் இப்பொழுது இத்துன்ப மனுபவித்துவருவதை நோக்கி, காதம்பரியும் தான் மணம்புரிந்துகொள்ள விரும்பாதவளாயிருந்து வருகிறாள். தன் ஸங்கற்பத்துக்கு விரோதமாய் தன் தந்தை அவளுக்கு மணம் செய்விக்க முயன்றால், தான் வலிய உயிரிழக்க நேரிடுமென்றும் பல தோழிகளின் முன்னிலையிற் சபதம் செய்திருக்கிறாள். இச்செய்தி கிரமமாக கந்தர்வராஜனான சித்திரதனுடைய காதிலும் எட்டிற்று. காலம் செல்லச் செல்ல காதம்பரிக்கு நல்ல யௌவனப்பருவம் வந்தது. இந்த நிலைமையில் அவளது தந்தைக்கு மனத்துயரம் மேலிட்டு அவர் நொடிப்பொழுதும் சுகம் பெறவில்லை. அவருக்கு அவள் ஒரே புதல்வி. அவள் மனதைச் சரிப்படுத்த வேறு உபாயமொன்றும் அவர் காணவில்லை. பட்டமஹிஷியான மதிரையும் தானுமாக யோசனை செய்து, 'உன்னுடைய நிலைமையைக் கண்டு நாங்கள் ஒரு புறம் துயரமனுபவித்துவர, காதம்பரியின் பிடிவாதத்தாலுண்டான துன்பம் மற்றொருபுறம் எங்களை வாட்டுகிறதாகையால்; நீயே இச்சமயம் நல்வார்த்தை கூறி அவளை வழிக்குக் கொண்டுவரவேண்டும்' என்று க்ஷீரோதன் என்னும் கஞ்சுகியினிடம் சொல்லியனுப்பினார். மூத்தோர் வார்த்தையில் மதிப்பும், தோழியின் க்ஷேமத்திற் கருத்தும் நமக்கியல்பாகையால், காதம்பரிக்கு நான் உடனே செய்தியனுப்பினேன்: 'ஏற்கனவே நான் துன்பமுற்றிருக்க, மேன்மேலும் நீயும்

என்னைத் துன்பத்தில் ஆழ்த்துவது நியாயமல்ல; நான் உயிருடனிருக்கவேண்டுமானால், நமது பெரியோருடைய வார்த்தைக்குட்பட்டு அவரது விருப்பப்படி நடந்துகொள்வாயாக’ என்று காதம்பரியினிடம் நேறிற்போய் மொழியுமாறு தாளிகையினிடம் கூறி, தாளிகையை க்ஷீரோதனோடு அனுப்பினேன். அவள் சென்ற சற்று நேரத்தில் நீர் தைவச்செயலாய் இவ்விடம் வந்தீர்’ என்றாள். இதற்குள் சந்திரோதயமாயிற்று. மஹாச்வேதை மெதுவாகப் படுத்துறங்கலானாள். சந்திராபீடனுக்கு அப்போது தன் ஸேனையைப் பற்றிய கவலை மனதில் தோன்றிற்று. ‘இவ்வேளையில் வைசம்பாயனன் என்ன சிந்திக்கிறானோ? ஏழைப் பத்திரலேகை என்ன எண்ணுகின்றாளோ? மற்ற இராஜகுமாரர் முதலியவர் எங்ஙனமாயினரோ?’ என்று சிந்தித்தவாறு சயனத்திற் சாய்ந்து நித்திரை போயினன்.

பொழுது விடிந்ததும், மஹாச்வேதை யெழுந்து காலையிற் செய்யவேண்டிய ஸந்தியாவந்தனச் சடங்குகளைச் செய்துவிட்டு, ஓர் சிலாதலத்திலுட்கார்ந்து, மஹாபரிசுத்தமான அகமர்ஷண மந்திரங்களை ஜபித்துக்கொண்டிருக்க, சந்திராபீடனும் விடியற்காலத்திற்கேற்ற விதிகளையெல்லாம் நிறைவேற்றினான். தாளிகையும் அதிகாலையில் அங்கு வந்து சேர்ந்தாள். அவளுடன் கம்பீரமான தோற்றத்தைப் பெற்ற கேயூரகன் என்னும் ஒரு கந்தர்வவாலிபனும் வந்தான். அவனுக்கு வயது பதினாறிருக்கும். அவ்விருவரும், அழகிய வடிவம் வாய்ந்த சந்திராபீடனை யுற்றுப் பார்த்துவிட்டு, மஹாச்வேதைக்கு வந்தனம் செய்து, அவளுக்கு அருகில் ஒருத்தி தரையிலும், மற்றொருவன் ஒருசிலாதலத்தின்மீதும் முறையே உட்கார்ந்தனர்.

மஹாச்வேதை ஜபத்தை முடித்ததும், தாளிகையை

நோக்கி, 'காதம்பரீ க்ஷேமமா? நான் கூறியபடி அவள் செய்ய ஸம்மதித்தாளா?' என வினவினள். பின்னர் தரளிகை ஒருவாறு தலைவணங்கிக்கொண்டு, 'நான் காதம்பரியைக் கண்டேன். அவள் ஸௌக்கியமாகவே இருக்கின்றாள். தாம் சொல்லியனுப்பிய செய்தியனைத்தையும் அவளிடம் சொன்னேன். அதைக் கேட்டு, கண்ணீர் சொரிந்து அவள் மொழிந்த மறுமொழி யனைத்தையும். அவளால் அனுப்பப் பெற்ற அவளது வீணை யேந்துபவனான நம் கேயூரகனே கூறுவான்' என மொழிந்தாள். அப்பால், கேயூரகன் கூறத் தொடங்கினான் :—"காதம்பரீ தேவி விஞ்ஞாபனம் செய்வதாவது:— 'தரளிகையினிடம் செப்பியனுப்பிய செய்தி என்னைப் பரிசோதிப்பது போலத் தோற்றுகிறது. அஃதென்ன, என் சித்தத்தைப் பரீக்ஷிக்கும் வகையோ? அன்றேல் நான் அகத்தில் வஸிக்கும் குற்றத்தைச் சுட்டிக்காட்டும் நிபுணமான நிந்தையோ? ஸஹஜமான பிரீதி நிரம்பிய எனது இருதயத்தை நீ முன்பே அறிவாய். அவ்வளவு மிகவும் இனிதாக மொழியுங்குணமுடைய நீ, இப்படிப் பிரியமில்லாதபடி பேசுவதற்கு எவரிடம் கற்றனை? என் அருமைத்தோழியான மஹாச்வேதை பர்த்தாவின் விரஹத்தினால் சோகங்கொண்டு, அங்கங்களையுலர்த்தி அருந்தவஞ்செய்துவரும்போது, நான் சுகத்திற் கருத்துவைத்து எவ்வாறு மணம்புரிந்து கொள்வேன்? அனது பற்றி இதோ கைகூப்பி வந்தனஞ் செய்கிறேன்; என்மீது அருள்புரியவேண்டும்; எனதுயிருடன் இங்கிருந்து நீ கானகமெகினாய்; கனவிலும் இவ் விஷயத்தை மனத்தினில் வைக்காதே.' இதுதான் காதம்பரீ மொழிந்தது" எனக் கூறினான்.

மஹாச்வேதையும் அதைக் கேட்டு வெகு நேரம் ஆலோசித்து விட்டு, 'நீ போ! நானே நேரில் வந்து தந்த

வாறு ஏற்பாடு செய்வேன்' என்று சொல்லி, கேயூரகனை அனுப்பி விட்டாள். அப்பால் சந்திராபீடனை நோக்கி இவ்வாறுரைத்தனள் :—'இராஜபுத்திர! ஹேமகூடம் வெகு இரமணீயமானது; சித்திரரதராஜதானியும் விசித்திரமானது; கிம்புருஷர்களின் தேசமும் மிகக் குதூஹலத்தை யுண்டாக்கக் கூடியது; கந்தர்வஜனங்களும் வெகு ஸௌந்தரமானவர்; காதம்பரியும் ஸரஸமான இருதயமும் மேன்மையும் பொருந்தியவள். ஆகவே அவ்விடம் செல்வது அதிக சிரமமாகமாட்டாது என்று நினைப்பீராகில், பெருங்காரியமும் கெட்டுப்போகாமலிருந்தால், இதுகாறும் காணப்பெறாத விஷயங்களைக் காண்பதில் ஆவலுமிருப்பின், எனது வேண்டுகோளை வீணாக்காமலிருப்பீராக. மிகவும் அழகிய ஹேமகூடத்திற்கு என்னுடன் வந்து, என்னைவிட வேற்றுமை யேதுமில்லாதவளான காதம்பரியையும் பார்த்துவிட்டு, மதிகேட்டினால் அவள் மனத்தில் தோன்றிய அவிவேகத்தை அகற்றி, ஒரு நாள் அங்கு தங்கியிருந்து நாளையதினம் திரும்ப வந்துவிடுவீர். நீர் நிஷ்காரண பந்து; உம்மைப் பார்த்தது முதல் வெகு நாட்களாகத் துயரத்தில் ஆழ்ந்திருந்த என் சித்தம் ஆறுதலை யடைந்தது போலும். உம்மை என் செய்தியைச் செவியுறச் செய்ததால், இப்பொழுது சோகமும் ஸஹிக்கக் கூடியதுபோலாயிற்று. ஆகையால் வரவேண்டும்!' உடனே சந்திராபீடன் 'அம்மணி! தம்மைத் தரிசித்ததுமுதல் நான் உமக்கு பவ்யப்பட்டுவிட்டேன். இஷ்டப்படி அடியேனைத் தாம் கட்டளையிடலாம்' எனக் கூறி, அவளுடன் எழுந்து ஹேமகூடஞ் சென்றான். கந்தர்வராஜனது மாளிகையில் தங்கமயமான தோரணவாயில்களையும், ஏழு அங்கணங்களையும் தாண்டி, கன்னிகைகளது அந்தப்புரத்து வாயிலை யடைந்தன

மஹாச்வேதையைக் கண்டு வந்தனஞ் செய்தெழுந்து வாயிற்காப்பவர் வழிகாட்டினர். கன்னிகைகளின் அந்தப்புரத்திற் பிரவேசித்தார்கள். அவ்வந்தப்புரம் பெண்மணிகளின் களஞ்சியம்போன்றதாகவும், சிருங்காரமயமாகவும், ஸௌந்தரிய ஸ்வரூபமாகவும், குதூஹலமயமாகவும் காணப்பட்டது. இவ்வகையான அவ்வந்தப்புரத்தினுள் காதம்பரியின் அருகிலுள்ள பரிஜனத்தின் அதிமநோஹரமான ஸல்லாபங்களைக் கேட்டுக்கொண்டே, கதாம்பரியினது மாளிகையின் ஸமீபம் போய்ச் சேர்ந்தனன். அங்குள்ள உத்தியானவனம் வெகு இனிது. ஆற்றுநீர்ப் பெருக்குபோல் ஆடவரின் ஆபரணஜாலங்களிலிருந்து கதிரொளிகள் வீழ்ந்து ஒருமிக்கச் சேர்ந்து பாய்வதைப் பார்ப்பவர் பிரமித்திடுவர். அத்தேஜோராசியின் இடையில் ஆற்றுவெள்ளத்தை யெதிர்த்துப் போவது போற் சென்று, வாயிற்காப்பவர் சூழ்ந்த முன்புறத்துடன் கூடிய ஸ்ரீமண்டபம் என்னுமிடத்தை இவன் கண்டான். அம்மண்டபத்தின் மத்தியபாகத்திற் கற்பகக் கொடிகளைப்போன்ற அநேகம் கன்னிகைகள் சூழ்ந்திருக்க, நீல நிறமான மேல்விரிப்புடன் கூடிய சிறிய மஞ்சமொன்றில், வெண்ணிறத் தலையணியிற் சாய்ந்துகொண்டு காதம்பரீ அமர்ந்திருந்தாள். இரத்தின கசிதமான அம்மண்டபத்தின் சுவர்களிலும் தூண்களிலும் தரையிலும் பற்றிய அவளது பிரதிபிம்பங்கள் எவரையும் திகைக்கச் செய்யும். அவள் யௌவனப்பருவத்தை நூதனமாகப் பெற்றவளெனத் தோன்றிற்று. புதிய வாலிபப் பருவமென்னும் வாயுவினால் அலைக்கப்பெற்ற காதலாகும் கடலிற் கிளம்பிய இரண்டு அலைகளுக்கொப்பான பவளக்கொடிபோற் சிவந்த உதடுகளாலும், மது நிரம்பிய மாணிக்கச் சிப்பிகளின் ஸம்புடங்கள்போல் செவ்வெண்மையான இரு

கபோலங்களாலும், இரதிதேவியின் இரத்தினமயமான வீணை மீட்டுங்கோல் போன்ற அழகிய நாசியாலும், நெடுகச்செல்ல முடியாது தமது போக்கைத் தடுக்கும் காதுகளிடங் கோபங் கொண்டவைபோல் சிறிது சிவந்த ஓரங்களையுடைய நேத்திரங்களாலும் அவள் மிகவும் நேர்த்தியாய் பிரகாசித்தாள். அவளருகிலுட்கார்ந்து சந்திராபீடனைப்பற்றி கேயூரகன் வர்ணித்துக்கொண்டிருந்தான். அதன் பின்பு அந்த ராஜபுத்திரனைப்பற்றிய செய்திகளையும், அவன் மஹாச்வேதையின் பரிசயத்தைப் பெற்ற வரலாற்றையும் அவள் வினவியவாறிருந்தாள்.

காதம்பரியினது சந்திரபிம்பம் போன்ற வதனத்தின் சீர்மையைக் கண்டதும், சந்திராபீடனின் இருதயம் கடல் நீர்போல் கொந்தளித்தது. 'ஓ! அழகெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்திருக்குமாறு வெகு விசித்திரமாக இவ்வடிவத்தை நான்முகன் நன்கு படைத்தான்! இவ்வளவு மேன்மையான ரூபத்தைப் படைப்பதற்கு வேண்டிய பரமாணுக்கள் பிரம்மதேவனுக்கு எங்கிருந்து கிடைத்தனவோ? இஃதென்ன ஆச்சரிய ரூபம்!' என்று சந்திராபீடன் சிந்தித்துக் கொண்டிருக்கையில், காதம்பரியும் இவனைப் பார்த்துத் திகைத்துப் போனாள். அப்பொழுது கேயூரகன் கூறிய புருஷன் இவனாகத்தானிருக்கவேண்டுமெனத் தீர்மானித்து, நெடுநேரம் கண் கொட்டாமல் அவனைப் பார்த்தாள். அவனைப் பார்த்ததும், முதலில் காதம்பரிக்கு மயிர்க்கூச்சு எழும்பியது; பின்பு ஆபரணங்களின் ஒலி யிசைந்தெழும்பிற்று; அதன் பின்னர் அவள் எழுந்தனள். பிறகு மன்மதன்தான் அவளுக்கு வியர்வையை யுண்டாக்கினான்; பரபரப்புடன் எழுந்திருத்தலாலுண்டான சிரமமோ அதற்கு ஓர் வியாஜமாயிற்று; ஆனந்தமே கண்ணீரைப் பெருகச் செய்தது; காதிலணிந்த

மலரிலிருந்துதிர்ந்த பூம்பொடியோ வெறுங் காரணமாகப் போயிற்று. காதம்பரி யானவள், சிறிது தூரஞ் சென்று, பார்த்து நெடுநாளாய் விட்டதுபற்றி அபரிமிதமாயுண்டான அன்புடன் மஹாச்வேதையைக் கட்டிக்கொண்டாள். மஹாச்வேதையும் காதம்பரியை ஆலிங்கனம் செய்து, அப்பால் இவ்விதம் கூறினள் :—'காதம்பரி! பாரத வர்ஷத்தில் 'தாராபீடன்' என்று பெயர்பெற்ற மன்னவர் ஒருவருளர். 'சந்திராபீடன்' என்று அவருக்கு ஒரு ஸத்புத்திரன் உண்டு; அவர்தான் இவர் ; கற்றூண்களுக்கொப்பான தமது புயங்களால் புவனத்தின் பீடைகளையெல்லாம் போக்கி திக்விஜயம் செய்துகொண்டுவருகையில் இவர் இவ்விடம் வந்து சேர்ந்தார் ; இவரோ பார்த்தது முதல் எனக்கு நிஷ்காரணமான பந்துவாக ஆய்விட்டனர்; கல்வியிற்றேர்ந்தவர்; தாக்ஷிண்ணியசீலர் ; நிஷ்கபடமான சுபாவமுள்ளவர் ; இவ்விதமான மஹாபுருஷனை உலகத்திற் பார்ப்பது அரிது; பிரம்ம ஸ்ருஷ்டியில் இவ்வளவு ஸௌந்தர்யம் நான் கண்டதில்லை; ஸகல குணங்களும் செல்வமும் நிறைந்த ஸ்ரீமான் ; இவரால் விண்ணுலகினும் மண்ணுலகம் மேன்மையுற்றது; இவர் ஸகல கலாவல்லவர். இம்மஹாபுருஷனை நீயும் என்னைப்போல் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கருதியே இங்கு வலிய அழைத்துவந்தேன். என் அன்பார்ந்த தோழி! உன்னைப் பற்றியும் இவரிடம் விசேஷமாகக் கூறியிருக்கிறேன். ஆகையால், இவர் இதுகாறும் காணப்பெறாதவரென்கிற வெட்கத்தை விட்டுவிட்டு, என்னிடத்திலிருப்பது போலவே தோழனாகவும் பரம பந்துவாகவும் கருதி இவரிடத்திலும் வேற்றுமையின்றி நடந்துகொள்வாயாக.' இங்ஙனம் அவள் கூறிமுடிந்ததும், சந்திராபீடன் அவளுக்கு வந்தனஞ் செய்யலானான். காதம்பரியும் காதலாலுண்டான மனக்குழப்பத்

துடன் பணிந்துவிட்டு, மஹாச்வேதையுடன் மஞ்சத்தில் உட்கார்ந்தாள். பரபரப்புடன் பரிஜனமெடுத்துவந்த பொற்பீடத்திற் சந்திராபீடனும் உட்காரலானான். மஹாச்வேதையின் அபிப்பிராயத்திற்கிணங்க காதம்பரீ முகசாடையால் உத்திரவிட, அதுகண்டு வாயிற்காக்கும் மங்கையர் முகத்திற் கரம்வைத்து, சப்தங்களை யடக்கும் ஸம்ஜ்ஞை செய்து, புல்லாங்குழல்களின் ஒலிகளையும், வீணைகளின் கோஷங்களையும், ஸங்கீத சப்தங்களையும்; புகழ்கூறும் மாதரது வாழ்த்துத் தொனிகளையும் எங்கும் தடுத்துவிட்டனர். காதம்பரீ யெழுந்து ஊழியரெடுத்துவந்த ஜலத்தினால் மஹாச்வேதையின் தாள்களை யலம்பி, உத்தரீயச்சீலையினால் துடைத்துவிட்டு, மஞ்சத்தில் உட்கார்ந்தாள். காதம்பரியின் உயிரெனத்தகுந்தவளும், அவளுக்கீடான வடிவழகு வாய்தவளுமாள மதலேகை யென்னும் அவளுடைய தோழி சந்திராபீடனது சரணங்களை அலம்பி உபசாரம் செய்தாள. மஹாச்வேதையும் காதம்பரியின் தோளில் அன்புடன் கரம் வைத்து, சாமரைக் காற்றால் கலைந்துள்ள முன்னெற்றிமயிர்களை யொருவாறு கோதிக்கொண்டே, அவளது க்ஷேம விருத்தாந்தங்களை வினவினாள். காதம்பரியும் மஹாச்வேதையினிடமுள்ள மனப்பூர்வமான அன்பினால் தான் வீட்டில் வஸிப்பதையும் பிழை யென்றெண்ணி, தான் ஸுகமாக இருப்பதாற்றானே வெட்கமுற்றுப் பிரயாஸையுடனே தன் க்ஷேமச் செய்தியைச் செப்பலானாள். சிறிது நேரஞ்சென்றதும் மஹாச்வேதைக்குக் காதம்பரீ தாம்பூலம் தர முயன்றாள். அப்பொழுது மஹாச்வேதை 'காதம்பரி! இதோ புதிதாக வந்த சந்திராபீடனை நாமனைவரும் சேர்ந்து உபசரிப்பதல்லவோ நியாயம்? ஆகையால் இதை அவ்ரிடம் அளிப்பாயாக' என்றாள். அது கேட்டு காதம்பரீ சிறிது முகத்தைக் குனிந்துகொண்டு, மெதுவாக 'என் அன்பார்ந்த

தோழி! பழக்கமற்றவளான நான் இவ்வளவு தூரம் துணிவு பெற வெட்கப்படுகிறேன்; வாங்கிக்கொள்; நீயே அவரிடம் அளித்துவிடு' என மொழிந்தனள். பலமுறை அவள் நிர்ப்பந்தமாகக் கூறியபின், காதம்பரீ அநாகரிகரைப்போல் நெடுநேரம் சென்று அவ்வாறு அளிப்பதற்கு மனமொப்பினாள். மஹாச்வேதையைப் பார்த்துக்கொண்டே அஞ்சி வீழ்ந்துவிடுபவள்போல தாம்பூலத்துடன் தனது தளிர்போன்ற கரத்தை நீட்டினாள். சந்திராபீடனும், திரண்டுருண்டும் இயற்கையிற் சென்னிறம் பொருந்தியதுமான தனது புயத்தைநீட்டி, அவள் கையும் வியர்த்து நடுங்க, அத்தாம்பூலத்தைப் பெற்றுக்கொண்டான். மற்றொரு தாம்பூலத்தையெடுத்து மஹாச்வேதைக்கும் கொடுத்தாள்.

இவ்வின்பமான ஸமயத்தில், காதம்பரிக்கு அருமையான தோழிபோன்ற காளிந்தீ யென்னும் பெண்கிளி தன் கணவனான பரிஹாஸன் என்னும் மற்றொரு கிளியைப் பழித்து வர, ஒன்றோடொன்று அவை சச்சரவுடன் சண்டையிடுவதைச் சந்திராபீடனும் மற்றவரும் கண்டு சிறிது நேரம் களிகூர்ந்து, அவற்றை வியாஜமாகக்கொண்டு விநோத வார்த்தைகளாடினர்.

இப்படியிருக்கையில் கஞ்சுகி யொருவன் வந்து மஹாச்வேதையை நோக்கி, 'ஆயுஷ்மதி! மஹாபிரபுவான சித்திரரதனும் மதிராதேவியும் உம்மைக் காண்பதற்கு அழைக்கின்றனர்' என்றான். இதுகேட்டு அவளிடம்போக விரும்பிய மஹாச்வேதை 'ஸகி! சந்திராபீடன் எவ்விடத்தில் இருக்கலாம்?' என்று காதம்பரியைக் கேட்டாள். காதம்பரியும் ஒருவாறு சிரித்துவிட்டுக் கூறலானாள் :—'மஹாச்வேதே! நீ என்ன இவ்வாறு சொல்லுகின்றனையே? பார்த்ததுமுதல் எனது சரீரத்திற்கே இவர் அதிபதியாய் விட்டார்.

அப்படியிருக்க இங்குள்ள மற்றவைகளுக்கு அவர் அதிகாரி யாய் விட்டாரென்பதிற் சந்தேஹமென்ன? இவருக்கு எவ்விடம் ப்ரியப்படுகிறதோ, அல்லது என் ப்ரியஸகி எவ் விடத்தில் அவர் இருக்க விரும்புகிறளோ அவ்விடத்தில் அவர் இருக்க யாது தடை?' அம்மொழி கேட்டு, மஹாச் வேதை 'ஆனல் இவ்விடத்திலேயே உன் உப்பரிகைக்கு அருகில் அந்தப்புரத்து உத்தியானவனத்திற் கிரீடாபர்வ தத்தின்மீதுள்ள மணிமாளிகையில் இவர் இருக்கட்டும்' என்றுரைத்துவிட்டு, கந்தர்வராஜனைக் காண்பதற்குச் சென் ருள். சந்திராபீடனும் அவளுடன் கூடவே வெளிக்கிளம்பி ஞன். காதம்பரியின் கட்டளையின்பேரில் வீணைமீட்டுபவரும், புல்லாங்குழலூதுபவரும், ஸுபாஷிதங்களைப் பேசுபவரு மான சில கன்னிகைகள் பின்தொடர, கேயூரகன் முன் சென்று வழிகாட்ட, சந்திராபீடன் அம்மணிமாளிகைக்குச் சென்ருன். சற்றுக்கெல்லாம் காதம்பரியானவள் இரண்டொரு பரிசாரிகைகளை மாத்திரம் அழைத்துக்கொண்டு தன் உப்பரி கைக்கு ஏறிச் சென்று, அங்கு சயனத்தின்மீது தன்னை யறி யாமலே விழுந்தாள். தூரத்திலிருந்தவாறே வணக்கத்துடன் பரிசாரிகைகள் களிப்பூட்டிய பிறகு அவளுக்கு ஒருவாறு உணர்ச்சியுண்டாயிற்று. சந்திராபீடனைக் கண்டதும், தன் மனவுறுதிமாயமாய் விட்டதைப் பற்றியும், தன்னையடக்க முடியாமல் மன்மதனல் மனம் குழப்பமுற்றதைப் பற்றியும் நினைத்து மிகவும் வெட்கத்தில் மூழ்கினள். மேலும் தனக்குத் தானே இவ்வண்ணம் சிந்திக்கலானள்;—'நான் வீணைசைக்காரி யாய் விட்டேன். உணர்ச்சியின்றியே என்ன இவ்வாறு செய் தேனே! இவரை நான் இதுகாறும் கண்டதில்லை. இவர் மனப் போக்கு எவ்விதமானதோ? என்னை இவர் புறக்கணித்துவிடா மல் அங்கிகரிப்பரோ வென்பதையும் நான் தீர ஆலோசிக்க

வில்லையே! பெரியோர் என்ன நினைப்பரோ வென்பதை யும் நான் எதிர்பார்க்காமல் ஸாஹஸம் செய்ய முயன் றேனே! நான் தாக்ஷிண்ணியமற்றவளாய் 'மஹாச் வேதை அவ்வாறு துயரமுற்றிருக்கின்றளே' என்பதையும் நினைக்க வில்லை; இலஜ்ஜைக்கிடமாக உயிர்பிழைத்திருப்பதினும், நான் இப்பொழுது மரித்துவிடுவதே மேலாகும். இச்செய்தியைச் செவியுற்று எனதன்னை என்ன செப்புவளோ; தந்தை யும் மற்ற கந்தர்வ ஜனங்களும் யாது கூறுவர்? என் செய் வேன்? இவ்வொழுக்கத் தவறுதலை யெவ்வுபாயங் கொண்டு மறைப்பேன்? இப்பொல்லாப் புலன்களுடைய சாபல்லி யத்தை யெவரிடம் கூறுவேன்? மஹாச்வேதையின் நிலை மையை நினைத்து அவ்வாறு சபதம்செய்தேனே! கேயூரகனிட மும் அங்ஙனம் செப்பி யனுப்பினேன்! என்னை வஞ்சகம் செய்வதற்கென்று தைவம் இச் சந்திராபீடனையும் இங்ஙனம் இங்கு கொண்டு விட்டதே! அவனைக் கண்ட மாத்திரத்தி லேயே இந்திரியங்களால் இறுகக் கட்டி அவனுக்கு அளிக் கப்பெற்றவள் போலவும், குணங்களையே விலையாகப் பெற்று இருதயத்தினல் விற்கப்பட்டவள் போலவும் அவனது கருவி போலாய்விட்டேனே! சபலசித்தனை அச்சந்திராபீடனல் எனக்கு ஆகவேண்டிய தொன்றுமில்லை' என்று வெகு சிர மப்பட்டு ஒருவாறு தீர்மானம் செய்துகொண்டாள். பிறகு அந்த க்ஷணத்திலேயே அவளது பிராணன் கண்டத்தில் வந்து தங்கியதுபோலும்; கண்களில் நீர் ததும்பிற்று; 'அடி! விசேஷமறியாதவளே! மீண்டும் கண்களைக் கழுவிக்கொண்டு இவன் பரித்தியாகத்திற்குரியவனு என் பதை நன்கு பார்ப்பாயாக' என்று தன் உள்ளத்தினல் தூண்டப் பெற்றவள்போல, மறுபடியும் அங்ஙனமே சந்திரா பீடனிடம் அவள் மனம் பற்றிவிட்டது. தன் மனதையடக்

கத் திறமையற்றவளாய், சாளரத்தின் வாயிலாக அக் கிரீடா பர்வதத்தையே பார்த்துக்கொண்டிருந்தனள்.

சந்திராபீடனும் மணிமாளிகையினுட் சென்று, பல தலை யானைகளுடன் கூடிய சிலாதலத்தின் மீது விரிக்கப்பட்ட ஓர் ஹம்ஸதூலிகா சயனத்திற் சாய்ந்தான். கேயூரகனும் வேறு சில கன்னிகைகளும் இவனுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தனர். ‘எனக்கு எதிரில் காதம்பரீ காட்டிய விலாஸங்கள் யாவும் அவளுக்குச் சுபாவமானவையோ? அல்லது யௌவனப்பருவத்திற் கேற்ப மன்மதனால் எனதிடம் ஏவப்பெற்றவையோ! என்னை அவள் கடைக்கண்ணால் ஆவலுடன் பார்த்தாள்; நான் அவளைப் பார்க்கையில், புன்னகை புரிந்து மெதுவாக வெட்கத்துடன் முகத்தை ஒருவாறு திருப்பிக்கொள்ளுகிறாள். ஆனால் ஒருக்கால் நானே இவ்விதம் பிரமிக்கின்றேனா? வாலிபர்களின் மனப்போக்கானது இவ்வித ரூபத்தைக் கண்டதும், அவளுடைய ஸாதாரண செயல்களும் தன்னைப்பற்றியவையேயென நினைத்துத் தானாகவே எண்ணாததை யெல்லாம் எண்ணித் தவிப்பது இயல்பு. வாலிபாது வீண் மனோரதமானது காணாததை யெல்லாம் காணப்படுவதுபோலச் செய்துவைக்கும். ஆகிலும் நமக்கேன் இக்கவலை? அப்பெண்மணிக்கு எனதிடம் உண்மையில் நோக்கமிருப்பின், எங்களுடைய எண்ணத்தை ஈடேறச்செய்வது அக்காதற்கடவுளின் கடமையல்லவோ!’ என்று யோசித்துவிட்டு, அக்கன்னிகை முதலியவர்களோடு சிறிது நேரம் ஸங்கீதாதி விநோதங்களைச் செய்து, உல்லாஸமாகப் பொழுது போக்கினான். பின்னர் அம்மாளிகையிலிருந்து வெளியில் வந்து உத்தியானவனத்துச் சீர்மைகளைக் கண்டு இன்பமுற்றவனாய், அக்கிரீடாபர்வதத்தின்மீது நின்றுகொண்டிருந்தான். காதம்பரியும் அவன் வெளிவந்திருப்பதைக் கண்டாள்.

மஹாச்வேதை இன்னும் வரவில்லையே யென்று, அவள் வரும் வழியைப் பார்க்கும் பாவனையாய், அச்சாளரத்தை விட்டு, தன் உப்பரிகையின் உச்சிக்கு வந்து சேர்ந்தாள். வெண்பட்டுக் குடையை வெயில் தாக்காது ஒரு பரிசாரிகை இவளுக்குப் பிடித்து வந்தாள். இரண்டொருத்தி வெண் சாமரை வீசினர். மதலேகை முதலிய சொற்பத் தோழி மாரே அவளுடன் இவ்விடத்திலிருந்தனர். தமாலிகை முதலிய தோழிமாரின் தோள்களைப் பிடித்துலாவியும், தாம்பூலத் தளிரைத் தன் உதடுகளில் வைத்துக் கொண்டும், ஒருவர்மேல் ஒருவர் மலர்களை யெறிந்துகொண்டும் விளையாடும் பாவனையாய் அவ்விடத்தில் வெகு நேரமிருந்து, இவள் சந்திராபீடனையும், சந்திராபீடன் இவளையும் இன்பமுறப் பார்த்துக்கொண்டனர். பிறகு மஹாச்வேதை வருவதாக, வாயிற்காப்பவள் வந்து கூறவே, காதம்பரீ கீழே இறங்கி வந்தாள். மனம் ஒரு புறம் அவனிடம் ஈடுபட்டிருக்க, மஞ்சன மாடுவது முதலிய மத்தியானச்சடங்குகளை யெல்லாம் ஒருவாறு மஹாச்வேதையோடு நிறைவேற்றலானாள். சந்திராபீடனும் அங்கிருந்து இறங்கிவந்து நீராட்டம் முதலிய ஸகலத்தையும் அக்கிரீடாபர்வதத்திலேயே செய்து முடித்துக் கொண்டான்.

பிறகு, கிரீடாபர்வதத்தின் முன் புறத்திலிருந்த மனோஹரமான மாகதப்பாறையின் மீது வந்துட்கார்ந்தான். சற்று நேரம் சென்றதும், வெண்ணிற ஜோதி யொன்று வானத்திற் பரவி வருவதைப் பார்த்தான். அப்பொழு தனக்கு எதிர் முகமாக இருபுறமும் சாமரைகள் வீசப்பட மதலேகையானவள் காதம்பரியின் பிரதீஹாரியினுடைய கையைப் பிடித்துக் கொண்டுவந்தாள்; அப்பிரதீஹாரியானவள், சந்தனக் குழம்படங்கியதும், ஈரவஸ்திரத்தினால் மறைக்கப்

பெற்றதுமான ஒரு தேங்காய்க் குடுக்கையை கையிலேந்தி வந்தாள். மிக மெல்லியனவும் பாம்புப்புறணிபோல் வெகு வெண்மையானவையுமான, கற்பகவிருக்ஷத்திலிருந்து கிடைத்த இரண்டு வெண்பட்டு உடைகளைக் கேயூரகன் எடுத்துக்கொண்டு முன் புறத்தில் வந்துகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் தமாலிகை மல்லிகைப் பூமாலையை யேந்திக் கொண்டுவந்தாள். அவர்களுக்கு இடையில் தரளிகையையும் கண்டான்; அவள், உள்ளே வெண்பட்டு அடங்கிய ஒரு ஸம்புடத்தில், நக்ஷத்திரங்களின் பிரதிபிம்பம் போன்றதாய் திரண்டு பருத்த நல்முத்துமாலை யொன்றை யேந்திவந்தாள். அவ்வெண்மையான ஜோதி இம்முத்தாஹாரத்தினுடையதென்று இவனுக்கு இப்பொழுது தெரியவந்தது. அதன் ஒளி சந்திரனது நிலவையொப்ப வெகு மனோஹரமாயிருந்தது. மதலேகை சற்றுத் தூரத்தில் வந்துக்கொண்டிருக்கையிலேயே எதிர்கொண்டு எழுந்திருத்தல் முதலிய உசிதமான உபசாரக்கிரமத்துடன் அவளை வரவேற்றனன். மதலேகையும், அம்மரகதக் கற்பாறையிற் சிறிதுநேரம் உட்கார்ந்துவிட்டு எழுந்து, சந்திராபீடனுக்கு சந்தனக்குழம்பைப் பூசி, அவ்விரு வெண்பட்டுகளையும் உடுக்கச் செய்து, மல்லிகைப் பூச்சரங்களையும் அணியச் செய்து, முத்துமாலையைக் கையிலேந்தியவளாய், சந்திராபீடனை நோக்கி இங்ஙனம் மொழிந்தனள்:—'இராஜகுமார! நீர் அஹங்காரமற்றவர்; வெகு மனோஹரமான ஸௌந்தர்யம் வாய்ந்தவர்; உமது திறமையோ நிகரில்லாதது. ஆகவே உம்மைக் கண்டு எவர்தான் ப்ரீதிபாராட்டாமலிருக்க முடியும்? உங்களுடைய இவ்விநயமே இத்தகைய விஷயங்களுக்கெல்லாம் இடம் தருகின்றது. சுபாவமாகவே தமது வடிவத்தைத்தான் இப்பொழுது நாம் குறிப்பிட்டுக் கூறவேண்டும்; ஏனெனில், அவ்வடிவமல்லவோ

இவ்வாறு முதலிற் பார்க்கும்பொழுதே விசேஷ விச்வா ஸத்தை யுண்டுபண்ணுகின்றது? நீங்கள் புவனமெங்கும் பெரும் புகழ் பெற்று, மிகப்பிரபாவசாலியாய் விளங்கு கிறீர்கள்; அனைவரும் கண்டு களிக்கக்கூடிய இவ்வித விநய ஸம்பத்து இல்லாவிடில், உங்களிடம் நாடுவதற்குத்தான் எவராலாகும்? நீங்கள் சுயமாகவே எமது மனதைக் கவர்ந்துவிட்டீர்கள். இத்தகைய மஹாபுருஷனுக்கு வேறு எதைத்தான் நாங்கள் ஸமர்ப்பித்துக்கொள்ளக்கூடும்? இங்ஙனம் தரிசனம் தந்து எமது ஜன்மத்தை க்ருதார்த்த மாகச் செய்தவரான தங்களுடைய வரவை நாம் ஸபலமாக்கு வது எங்ஙனம்? இதன் மூலமாக நம் காதம்பரியானவள் அன்பை அறிவிக்கின்றாளே யன்றி, தனது செல்வப்பெரு மையைக் காட்டுவதாகக் கருதக் கூடாது. செல்வம் பிறர் பொருளேயன்றி அவருக்குச் சொந்தமல்லவென்பதைப் பற்றி நான் விரிவாகக் கூறவேண்டியதில்லை. செல்வமென்ப திருக்கட்டும்; தம்மைப் போன்றவரிடம் அடிமையாயிருப் பதுங்கூட மேலான பாக்கியம். காதம்பரீ தங்களுக் குத் தன் தேகத்தையே ஸமர்பித்துக்கொண்டபோதிலும் மோசம் போனவளாகாள். மேன்மக்களது பெருந்தன்மை யானது அன்பார்ந்த ஜனங்களைப் புறக்கணிக்கமாட்டாது; தாக்ஷிண்ணியத்திற்குப் பரவசமுமானது. கொடுப்பவருக்குண் டாகும்வ்வளவு லஜ்ஜை வாங்குபவருக்கில்லை. அமுதம் கடை கையில் உற்பவித்த உயர்ந்த வஸ்துக்களனைத்திலும் பிறருக் குதவாது இஃதொன்றே சேஷமானது; இக்காரணத்தினா லேயே சேஷன் என்று இம்முத்துமாலை அழைக்கப்படு கிறது. ஸமுத்திரராஜனால், தன் அகத்திற்கு வந்த வருண பகவானுக்கு இது நன்கொடையாக அர்ப்பணம் செய்ப் பட்டு, வருணனால் பிறகு கந்தர்வராஜனுக்கு அளிக்கப்

பட்டது; காதம்பரிக்குத் தன் பிதாவினிடமிருந்து அப்பால் இது கிடைத்தது. தமது மேனியே இவ்வாபரணத்திற்கு ஏற்றதெனக் கருதி,காதம்பரியினால் இஃது தமக்கு அனுப்பப்பட்டது. தமது குணாதிசயங்களே தம்மை அலங்கரிக்கப் போதுமானவை; ஆகிலும் இதை யணியச்செய்வதில் காதம்பரியின் அன்பே காரணமாகும். ஆதலால் தமதிடமிருந்து இந்த நன்மதிப்பைப் பெறுவதற்கு இவள் ஏற்றவளாகின்றனள். தங்களுடைய அன்பை அடைவதற்கு இவள் பாத்திரமாகாதவளுமல்லள். ஆனதுபற்றியே மஹாச்வேதை தாளிகையையும் இந்த ஹாரத்தை யெடுத்துக்கொண்டு, தமதிடம் போகச் சொல்லி யனுப்பினார். மஹாச்வேதயும் தங்களிடம் நான் மொழிந்தவாறு விண்ணப்பம் செய்துகொள்ளச் சொன்னார். மஹாபாக்கியசாலியான தாம் காதம்பரியினால் முதன் முதல் காட்டப்படும் இந்த பிரீதியைத் தடுக்கக் கூடாது' என மொழிந்து,அம்முத்துமாலையை அவனது மார்பில் அணிந்தாள்.

சந்திராபீடனும் ஆச்சரியமுற்று இங்ஙனம் மறுமொழி கூறினான்:—'மதலேகே! என் சொல்வேன்! நீ வெகு ஸாமர்த்தியக்காரி! விஷயத்தைத் தெரியச் சொல்வதற்கு நீ நன்கறிவாய். மறுமொழி கூறுவதற்கும் இடங்கொடாமல் வார்த்தையில் வெகு திறமையைக் காட்டிவிட்டனை. ஆனால் ஒன்று கூறுகிறேன்: எதைப் பெறுவற்கும் பெருமலிருப்பதற்கும் எமக்கேது ஸ்வாதந்த்ரியம்? அக்கதை அஸ்தமித்தல்லவோ போய்விட்டது? உங்களுக்குக் கருவியாக நான் ஆய்விட்டேன். நீங்கள் அனைவரும் மேன்மக்கள்கள். இஷ்டப்படி எக்காரியத்திலும் என்றனை யேவுவீர்களாக. மிகவும் உதாரத் தன்மைபொருந்திய காதம்பரீ தேவியின் குணங்கள் தாக்ஷிண்ணிய மற்றவராயிருப்பினும் எவரையும் ஊழியராகச்

செய்யாமலிருக்கமாட்டார்' என்று மறுமொழி கூறி, அப்பால் காதம்பரியைப் பற்றிய கதைகளையே சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து, பின்பு மதலேகையை அனுப்பிவிட்டான். தான் அனுப்பிய சந்தன-முத்தா ஹாராதிகளால் வெண்மையான அழகிய தேகமுடைய சந்திராபீடன், உதயகிரியையடைந்திருக்கும் சந்திரனைப்போல கிரீடாபர்வதத்தில் அமர்ந்திருக்கையில், அவனைப்பார்ப்பதற்கு, மீண்டும் காதம்பரியானவள் குடை சாமரை முதலியவனைத்தையும் நீக்கி, தமாலிகை யொருத்தியைமட்டும் அழைத்துக்கொண்டு அதே உப்பரிகையின்மீது ஏறிவந்தாள். அங்கிருந்து கொண்டு, அவள் மறுபடியும் விதம் விதமான விலாஸங்களுடன் அலை பாயும் பார்வைகளால் இவனது மனதைக் கவர்ந்தனள்.

பின்பு மெல்ல மெல்லக் கதிரவன் மேற்றிசையில் மறைய, இருளும் சிறுகச் சிறுகப் பார்வையை மறைக்கவே, உப்பரிகையின் உச்சியிலிருந்து காதம்பரியும், கிரீடாபர்வதத்திலிருந்து சந்திராபீடனும் இறங்கிவிட்டார்கள். பிறகு மன்மதனது ஆதிபத்தியத்திற்குரிய வெண்குடைபோற் சந்திரனும் உதித்து சற்று நேரமாயிற்று. சந்திராபீடனும், அகத்தைச் சார்ந்த ஆம்பலோடையின் கரையில், இரத்த சந்தனக் குழம்பால் கழுவப்பெற்றதும், சந்திரன்போல் சீதளமாயிருப்பதுமான முத்துமயக் கற்பலகையின்மீது சயனித்துக்கொண்டான். அங்ஙனமிருக்கையில் கேயூரகன் வந்து, காதம்பரீ இவனைக் காண்பதற்கு வந்திருப்பதாகக் கூறினன். சந்திராபீடன் உடனே பரபரப்புடன் எழுந்தான். சில தோழிமாருடன் மதலேகையின் காத்தைப் பிடித்துக் கொண்டு காதம்பரீ அவ்விடம் வந்தாள். மஹாப்பிரபுவின் மகளுக்குரிய சின்னங்களை விலக்கி விட்டு, ஏகாவளீ யென்கிற

ஒற்றைவட முத்துமாலை யொன்றையே அணிந்துகொண்டிருந்தாள். அச்சமயம் இருந்த அவளது தோற்றத்தினால் அவள் இவனிடம் அன்புகொண்டு இன்புற்றிருப்பதாக நன்கு விளங்கிற்று. வந்ததும் ஸாதாரண பரிஜனத்தைப் போலவே வெறுந்தரையில் உட்கார்ந்தாள். சந்திராபீடனை அச்சிலாதலத்தின்மீதே உட்காரவேண்டுமென மதலேகை வேண்டியும், அவன் காதம்பரியைப் போலவே தரையிலுட்கார்ந்தான். மற்றவரும் கீழே அமர்ந்தனர். சற்று யோசனை செய்து, சந்திராபீடன் இவ்வாறு மொழிந்தனன் :—
‘தேவி! அளவுக்கு மீறி அனுக்கிரஹம் செய்து என்னைப் பெரிதும் பெருமைப்படுத்திவிட்டீர். இவ்வளவு அதிகமாக நீங்கள் அருள்புரிவதற்கு அணுவளவேனும் என்னிடம் குணமிருப்பதாகத் தெரியவில்லை. உமது ஸரள சுபாவமும், அன்பார்ந்த தன்மையும் மிகவும் இரம்யமாயிருக்கின்றன. உமக்கு நான் ஓர் ஊழியனாய்விட்டேன்; இதோ நாம் இருக்கின்றனம்; இதோ எமதுடல்; இதோ எமதுயிர்; இதோ எமது புலன்கள். இவைகளுள் எதையும் நீர் உம்முடையதாக வேற்றுச் சிறப்பிக்கலாம்’ என்று மொழிந்துவருகையில், இவனது வார்த்தையை மறுத்து, மதலேகை புன்னகை புரிந்து, ‘இராஜகுமார! அஃது இருக்கட்டும். இவ்வாறு தாங்களே தம்மைத் தாழ்மைப் படுத்திக்கொள்வதைக் கேட்டு காதம்பரீ மனவருத்தமுறுளா? இதெல்லாம் எதற்கு? இவ்வாறு தாங்கள் அறிவிப்பதற்கு முன்பே தாங்கள் கீழ்க் கூறிய பொருளனைத்தையும் இவள் அறிந்தவளே ; அப்படியிருக்க மீளவும் இவ்வுபசார மொழியினால் ஏன் ஸந்தேஹத்தை யுண்டாக்கி அலைபாயச் செய்கின்றீர்கள்?’ என்று மொழிந்தனள். பின்பு அவள், பெற்றோர் மந்த்ரிமார் முதலியவர்களின் யோகக்ஷேமங்களையும், உஜ்ஜயினீநகரத்தின் வளப்பத்தையும்,பாரதவர்ஷத்தின் பானை

மையையும், மனுஷ்யலோகத்தின் தன்மையையும், சந்திராபீடனைக்கேட்டுத் தெரிந்துகொண்டாள். இவ்வரலாறுகளைப் பற்றியெல்லாம் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, கேயூரகனையும் வேறு சில பரிஜனத்தையும் அவ்விடத்திலேயே படுக்கக் கட்டளையிட்டு, காதம்பரீ தோழிமாருடன் தன் சயன மாடிக்குச் சென்று, வெண்பட்டுப் படுக்கையிற் படுத்தாள். சந்திராபீடனும் அதே கற்பாறையின் மீதிருந்து, காதம்பரியினது அந்த அஹங்காரமற்ற சுபாவம், வடிவழகு, கம்பீரத் தன்மை இவைகளையும், மஹாச்வேதையின் மாசுமறுவற்ற வாத்ஸல்யத்தையும், மதலேகையின் அன்பார்ந்த குணத்தையும், பரிஜனங்களின் பெருந்தன்மையையும், கந்தர்வலோகத்தின் செழுமையையும், கிம்புருஷதேசத்தின் மனோஹரத் தன்மையையும் மனத்தினாலாலோசித்துக்கொண்டே, கேயூரகன் கால் பிடித்தவாறிருக்க, இரவை ஒரு நொடியைப் போற் போக்கிவிட்டான்.

பிறகு விடியற்காலையில் சந்திராபீடன் சயனத்திலிருந்தெழுந்து, கமலமலர்போன்ற தனது வதனத்தைக் கழுவிக்கொண்டு; ஸந்தியாவந்தனம் அனுஷ்டித்து, தாம்பூலந்தரித்துக் கொண்டான். பின்னர் கேயூரகனையழைத்து, காதம்பரீ துயிலெழுந்தாளா வென்பதையும், அவளிருக்குமிடத்தையும் தெரிந்துவர அனுப்பினான். அவன் அப்படியே சென்று திரும்பிவந்து, 'தேவ ! காதம்பரீமந்தரம் என்கிற மாளிகையின் முற்றத்து மேடையில் மஹாச்வேதையுடன் இருக்கின்றாள்' என மொழிந்ததும், அவளைக் காண்பதற்குப்போனான். ஆங்கு அநேகம் தாபஸ ஸ்த்ரீகளால் சூழப்பட்டு, அவர்களுக்கு மஹாச்வேதை ஆஸனாதிகள் அளித்து உபசாரம் செய்து கொண்டிருந்தாள். கின்னரதம்பதிகள் பின்புறத்திலுட்கார்ந்து புல்லாங்குழலூதி ஒத்துகளை ஓதிவர, வேறு சிலரால் மஹா

பாரதம் படிக்கப்படுவதை காதம்பரீ சிரவணம்செய்து கொண்டிருந்தாள்.

இவன் அருகிற் சென்று நமஸ்காரம் செய்து, அவர்கள் வீற்றிருக்கும் திண்ணையின்மீது அமைத்திருந்த ஆஸனத்தில் அமர்ந்தான். சிறிது நேரம் இருந்து, மஹாச்வேதையின் முகத்தை நோக்கிவிட்டு, தன் கபோலத்தின் பாரிசங்கள் சிறிது வெளிறித் துலங்குமாறு புன்னகை புரிந்தான். அவளும் அவ்வளவிலேயெ அவனது அபிப்பிராயத்தை அறிந்து, காதம்பரியை நோக்கி 'ஸகி! மதியின் கதிரொளிகளால் சந்திரகாந்தம்போல், சந்திராபீடனது மனம் உனது குணங்களால் மிகவும் கசிவுண்டு, அவர் ஏதும் கூறமுடியாதவராயிருக்கின்றனர். இவருக்குப் பின்னால் தங்கிவிட்ட இராஜஸமூஹங்களெல்லாம் இவரது செய்தியை யறியாது வருத்தமுற்றிருக்கும். மேலும் நெடுந்தூரத்திலிருப்பினும் உங்களிருவருக்கும் கமலங்களுக்கும் கதிரவனுக்கும் இருப்பதுபோல ஆயுளுள்ளவரையிலும் பாசம், இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. அவருக்கு, ஆதலால் நீ விடை தருவாயாக'. என மொழிந்தனள்.

பிறகு காதம்பரியானவள் 'ஸகி! நானும் நமது பரிஜனமும் அவருடைய தேகமும் ஆத்மாவும் போல ஸகல விதத்திலும் ஸ்வாதீனமாயிருக்கையில் வேறே என் அனுமதியென்பதெதற்கு?' என மொழிந்து, உடனே கந்தர்வ குமாரர்களைக் கூப்பிட்டு, சந்திராபீடனைத் தன் தேசத்திற் சேர்த்து வரும்படி கட்டளையிட்டாள்.

சந்திராபீடனும் எழுந்து, முதலில் மஹாச்வேதையையும், பின்பு காதம்பரியையும் பணிந்துவிட்டு, காதம்பரியினுடைய அன்பார்ந்த திருஷ்டியினாலும் மனத்தினாலும் பற்றிக்கொள்ளப்பட்டவனாய், 'தேவி! என் சொல்வேன்? மிகு[illegible]கப்

பேசுகிறவர்களை யுலகத்தார் நம்பார்கள். ஆகவே நான் ஒரே விஷயம் கேட்டுக்கொள்கிறேன் : தமது பரிஜனங்களைப் பற்றிய பேச்சுக்கள் வருங்கால், என்னையும் அவர்களில் ஒருவனாக அப்பொழுது நினைத்துக் கொள்வீர்களாக' எனக் கூறி, கன்னிகைகளின் அந்தப்புரத்திலிருந்து வெளிக் கிளம்பினான். காதம்பரீ அத்துடன் நின்றாள். மற்றக் கன்னிகைகள் எல்லோரும் அவனது மேன்மையான குணங்களாகும் பாசங்களால் வலித்திழுக்கப்பட்டு, கோபுரவாயில்வரையிலும் பின் தொடர்ந்து திரும்பிவிட்டனர். அப்பால் கேயூரகனால் கொண்டுவரப் பெற்றக் குதிரையின்மீதேறிக்கொண்டு, கந்தர்வகுமாரர்களால் பின்பற்றப்பட்டவனாய் ஹேமகூடத்தை விட்டுப் புறப்பட்டான். அவன் போய்க்கொண்டிருக்கையில், சித்திரரத புத்திரியின் உருவமும் அவன் சித்தத்தில் மாத்திரமேயல்ல, அவனுக்கு முன்னிலையில் எங்கும் இருப்பது போலவே தோன்றிற்று. கிரமமாக மஹாச்வேதையின் ஆச்ரமத்தை யடைந்து, அங்கு அச்சோதகுளக்கரையில் இந்திராயுதத்தின் குளப்படிக் குறிகளைத் தொடர்ந்து வந்து, தனது ஸேனை யிறங்கியிருக்கக் கண்டான். கந்தர்வகுமாரர்களை வரையும் திரும்பிப் போகச் செய்து, தனக்கென்று அமைத்திருந்த படக்குடியிற் பிரவேசித்தான். ஸேனையிலுள்ள அனைவருக்கும் இவனைக் கண்டதும் உண்டான ஆனந்தத்திற்கு அளவில்லை. பிறகு அரசரனைவரையும் ஸம்மானித்தான்.

பத்திரலேகை முதலியவர்களிடம் மஹாச்வேதை ,காதம்பரீ முதலியவர்களைப்பற்றிய பெருமைகளை யெல்லாம் பேசிக்கொண்டே பகற்பொழுதைப் போக்கினான். இதன்பிறகு இவனுக்கு இராஜ்ய லக்ஷ்மி முன் போல் இன்பந்தாவில்லை. காதம்பரியை நினைத்து நினைத்து மிகக் கலவரமடைந்தவனாய் நித்திரையின்றியே இராப்பொழுதைக் கழித்தான். மறுநாட்

காலையில் அவளைப்பற்றிய ஞாபகத்துடனேயே ஆஸ்தான மண்டபஞ்சென்று வீற்றிருக்கையில், திடீரென பிரதீஹாரனுடன் கேயூரகன் வரக் கண்டான். தூரத்திலிருந்தே அவன் வந்தனஞ் செய்தான். சந்திராபீடன் அவனை வெகு ஆதரவுடன் வரவேற்று அருகில் உட்காரச் செய்து, காதம்பரீ மஹாச்வேதை முதலியவர்களுடைய யோகக்ஷேமங்களை விசாரித்தான். அவ்வாதராதிசயத்தினால் கேயூரகனும் களிப்புற்றான். அப்பால் கேயூரகன் ஈரமான சிறு வஸ்திரத்தினால் மறைத்துக்கொண்டுவந்த தொன்னை யொன்றையெடுத்தான். சந்தனத்தினால் அதன் முகம் முத்திரையிடப்பெற்று, தாமரை நூலால் அது கட்டப்பட்டிருந்தது. அப்பெரியதோர் தொன்னையில் காதம்பரியால் அனுப்பப்பட்டிருந்த மரகத மணிபோலப் பசுமையான புராணி நீக்கப்பட்ட பச்சைப்பாக்குகள், வெண்பசுமையான வெற்றிலைகள், சந்திரனது பிறைபோல் மிகக்குளிர்ச்சி பொருந்திய பச்சைக்கற்பூரக்கட்டி, கஸ்தூரி முதலியவற்றைக் கலந்து நறுமண மேற்றிய சந்தனம் ஆகிய இவை சாணப்பட்டன. கேயூரகன் பிறகு இங்ஙனம் கூறினான்:—"காதம்பரீ, மஹாச்வேதை முதலியவர்கள் வந்தனை செய்து தங்களைக் கௌரவிக்கிறார்கள். மேலும் மஹாச்வேதை இவ்வாறு தமதிடம் விஞ்ஞாபனம் பண்ணுகிறாள் :—'தம்மைக் காணாமலிருந்திருந்தால் மேல்; நீர் எமது முன்னிலையில் சந்திரனைப்போல பரமானந்தத்தை யளித்தீர்? நீர் சென்றுவிட்டதும் கந்தர்வராஜனது அரண்மனை முற்றிலும் ஊக்கங்குன்றி உரக்கங்கொண்டது போலாய்விட்டது. நான் அடியோடு அனைத்தையும் துறந்தவளென்பதையும் நீர் அறிவீர்; ஆகிலும் நான் விரும்பாமலிருந்தும், நிஷ்காரணமாகவே பக்ஷம் பாராட்டுபவரான உம்மை எனது இருதயம் காண விரும்புகின்றதே! அல்லாமலும் காதம்பரி

யானவள் புன்னகை புரிந்த முகத்தினரும் புஷ்பபாணனுக்கு நிகரானவருமான உம்மையே நினைந்து வருந்துகிறாள். ஆனது பற்றி மீண்டும் ஒரு முறை இவ்விடம் வந்து எம்மைக் கௌரவிக்கவேண்டும்' என்று அவளுரைத்தனள். இதோ தேவர் படுக்கையில் தவறி விட்டு விட்ட சேஷஹாரமும் அனுப்பப் பட்டிருக்கின்றது" என்று உத்தரீயத்தின் முந்தானையில் முடிந்திருந்த முத்துமாலையை அவிழ்த்துச் சாமரை யேந்துபவளிடம் அளித்தாள்.

பின்பு சந்திராபீடன், 'காதம்பரீ தேவியின் மஹத்தான ஆதரவை நான் பெற்றது மஹாச்வேதையின் தாள்களைத் தொழுததன் பயனேயாம்' எனச் சொல்லி, அவையனைத்தையும் பெற்று, திவ்யமான அச்சந்தனத்தை மார்பில் பூசிக்கொண்டான்; முத்தாஹாரத்தையும் அணிந்து கொண்டான்; அத்தாம்பூலத்தையும் தரித்தான். சற்றுநேரம் கழித்து, கேயூரகன் தோளைப் பற்றிக்கொண்டு 'கந்தமாதனன்' என்கிற கஜத்தினிடம் சென்று, அதற்குச் சிறிது புற்கவனம் தன் கையால் எடுத்துப்போட்டு, குதிரைக் கொட்டிலுக்குச் சென்றான். சென்றுகொண்டே ஒரு பக்கமாகச் சற்று முகத்தைத் திருப்பி ஒருவாறு பரிஜனத்தைப் பார்த்தான். உடனே இவனது அபிப்பிராயத்தை யறிந்த பிரதீஹாரிகள் பரிஜனங்களனைவரையும் பின் செல்லக் கூடாதெனத் தடுத்துவிட்டனர். சந்திராபீடன் கேயூரகனோடு தோழத்திற் சென்று, இந்திராயுதத்தின் முதுகிலிருந்து ஒரு பக்கமாய் நழுவியிருந்த அதன் போர்வையைச் சரிபடுத்தி அதன் கண்களை மறைத்துக்கொண்டு கலைந்து தொங்கும் கருஞ்சிவப்பான பிடரிமயிரை ஒழுங்காக ஒதுக்கிக் கொண்டே, குளம்பு தாங்கியென்னும் முளையின்மீது காலை வைத்துக்கொண்டு, கொட்டிலிலிருக்கும் ஓர் மரக்கட்டை

யின்மீது மெதுவாகச் சாய்ந்தவண்ணம், கேயூரகனை கந்தர்வ ராஜக்ருஹத்தில் தான் வந்தபிறகு நடந்த செய்திகளைப் பற்றியும், காதம்பரீ மஹாச்வேதை முதலியவர்கள் தன்னைப் பற்றி பேசிக்கொண்டிருந்த விஷயங்களைப் பற்றியும் ஆவலுடன் வினவினான். கேயூரகனும் இங்ஙனம் பதிலுரைத்தான:—'தேவ! தாங்கள் வெளிவந்ததும் காதம்பரீ தேவி பரிஜனங்களுடன் உப்பரிகையின் மீதேறி, தேவர் செல்லும் பாதையையே வெகு நேரம் பார்த்துக்கொண்டிருந்தனள். அங்கிருந்து வருத்தத்துடன் கீழிறங்கி, க்ஷண நேரம் ஆஸ்தானமண்டபத்தில் வீற்றிருந்தாள். மீண்டும் எழுந்து தேவரிருந்த கிரீடாபர்வதத்திற்கே வந்து, தேவரிருந்த இடங்களைப் பார்த்து ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு மத்தியான்னகாலத்தைக் கழித்தாள். அந்திப்பொழுதில் கஷ்டப்பட்டு மஹாச்வேதையின் முயற்சியினால் அப் படிக மணிமாளிகையிற்றானே உண்டியினை முடித்துக்கொண்டு வருத்தத்துடன் துயிலறைக்குச் சென்று சயனத்திற் சாய்ந்தாள். மனோவியாதியினாலும், சிரோவேதனையினாலும் கண் மூடாமலே துயரத்துடன் இராப்பொழுதைக் கழித்தனள். விடியற்காலத்தில் என்றனையழைத்து, தேவரது செய்திகளை யறிந்துவரும் பொருட்டு கட்டளையிட்டாள்.' இது செய்தி.

சந்திராபீடனும் அது கேட்டு அவ்விடம் போக விரும்பி, 'குதிரை குதிரை' யென்று கூறிக்கொண்டு வாஸஸ்தலம விட்டு வெளிப்புறப்பட்டான். சேணமிட்டு வெகு துரிதமாகக் குதிரைக்காரனால் கொண்டுவரப்பட்ட இந்திராயுதத்தின் மீதேறிக்கொண்டான். பத்திரலேகையைப் பின்புறத்தில் உட்காரச்செய்தான். படைகளைப் பார்த்துக்கொள்ள வைசம்பாயனனிடம் ஏற்பாடு செய்தான். பிறகு மற்றொரு குதிரையிலேறி கேயூரகன் பின்தொடர, ஹேமகூடம்

போய்ச் சேர்ந்து, காதம்பரியின் அரண்மனை வாயிலிற்போய்க் கீழிறங்கினான். அங்கே வாயிற்காப்பவனிடம் குதிரையைக் கொடுத்துவிட்டு உள்ளே சென்றான்; காதம்பரியை முதன் முதற் காண்பதில் ஆவலுடன் பத்திரலேகை இவனைப் பின் தொடர்ந்தாள். கிரீடாபர்வதத்திற்குக் கீழே நடபாவியின் கரையில் அமைத்துள்ள ஹிமக்ருஹத்தில்* காதம்பரீ இருப்பதாயறிந்து கேயூரகன் முன் சென்று வழிகாட்ட, அவ்விடம் சென்றான். ஆங்கு பணிவிடை செய்பவர் அவளது சரீரத்திற்குக் குளிர்ச்சியை யுண்டாக்குமாறு பற்பல உபாயங்களைச் செய்துவருவதைக் கண்டான். அந்த ஹிமக்ருஹம் இமயமலையின் இருதயமெனக் கூடியதாகக் காணப்பட்டது. ஹிமக்ருஹத்தின் உள்ளே இவன் செல்லுகையில் மிகச் சீதளமான பரிசத்தினால் மெல்ல மெல்ல உள்ளும் புறமும் பூசப்பட்டவன்போல் அபரிமிதமான குளிர்ச்சியை யுணர்ந்தான். அந்த ஹிமக்ருஹத்தின் ஒரு பாரிசத்தில் சுற்றிலும் அமைத்த வாய்க்காலிற் சுழன்றோடும் கர்ப்பூரக் குழம்பின் வெள்ளத்தினால் சூழப்பெற்ற தாமரைத்தண்டு மயமான சிறிய மண்டபத்தின் அடித்தடத்தில் புஷ்பசயனத்தின்மீது காதம்பரீ படுத்திருந்தாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர்த்துளிகள் கசிந்துகொண்டிருந்தன. தோழிமார்கள் அவளைச் சூழ்ந்து நின்றனர். பின்பு காதம்பரீ அவன் வருவதை நோக்கி, தூரத்திலிருந்தே தனது மேற்சீலை நழுவி விழ, வெகு பரபரப்புடன், கண்களில் பேரின்பக் கண்ணீர் பெருக, சிறிது தலை குனிந்தவண்ணம், புஷ்பசயனத்திலிருந்து எழுந்தாள். சந்திராபீடனும் அருகிற் சென்று, முன்பு மஹாச்வேதைக்கும் பின்பு காதம்பரிக்கும் வந்தனம்

---

* ஹிமக்ருஹம் — தாபத்தைத் தணிப்பதற்கு அனுகூலமான குளிர்ச்சியாயிருக்குமாறு ஏற்படுத்திய வீடு.

செய்ய, அவளும் பிரதிநமஸ்காரம் செய்து, பிறகு அப் புஷ்பசயனத்திலேயே உட்கார்ந்தாள். பிரதிஹாரியினால் கொண்டுவந்திடப் பெற்றப் பொற்பீடத்தைத் தள்ளிவிட்டு வெறுந்தரையிலேயே இவனும் அமர்ந்தனன். பிறகு கேயூரகன், 'தேவி! இவள் சந்திராபீடதேவனது அநுக்கிரஹத்திற்குப் பாத்திரமான பத்திரலேகையென்னும் தாம்பூலக் கரண்டக மேந்துபவள்' எனப் பகர்ந்து, பத்திரலேகையைக் காட்டினான். பின்னர் காதம்பரியும் அவளுடைய ஸௌந்தர்யத்தைக் கண்டு மகிழ்ந்தாள். பத்திரலேகையும் பணிந்த பின்பு, காதம்பரீ அவளை ஆதரவுடன் 'வர வேண்டும்' என மொழிந்து, வெகு குதூஹலத்துடன் தன் அருகிலுட்காரச் செய்தாள். பார்த்தமாத்திரத்திலேயே பத்திரலேகையின் மீது காதம்பரிக்கு அளவற்ற ஆதரவு ஏற்பட்டுவிட்டது.

சந்திராபீடனும் உடனே தனது வரவுக்கேற்ற உபசாரங்களனைத்தையும் பெற்றுக்கொண்டு, சித்திரரதனுடைய புதல்வி அவ்வித நிலைமையிலிருப்பதைப் பார்த்துவிட்டு, அவ்வித ஸங்கடத்திற்குக் காரணம் என்னவென்று சில சமத்கார வார்த்தைகளால் வினவ, அம் மொழிகளுக்கு மதலேகையும் இவனிடம் ஏற்பட்ட காதலாலேயே காதம்பரீ துன்பமனுபவிப்பதாக வெகு சமத்காரமான மொழிகளால் விடையளித்தாள். தன்னிடம் காதல் கொண்டே அவள் அவ்வித நிலைமையிலிருப்பதாய் நிச்சயித்து, பல இங்கிதங்களால் தனக்கு அவளிடம் அன்பு அபரிமிதமாயிருப்பதாக யறிவித்து இரஸமான வார்த்தைகளால் ஆறுதலும் கூறினான். அதன் பிறகு மஹாச்வேதை முதலியவர்களோடு வெகு நேரம் ஸல்லாபம் செய்துவிட்டு, அவர்களிடமிருந்து வெகுப் பிரயாஸையோடு விடைபெற்றுக்கொண்டு காதம்பரீ

மாளிகையைவிட்டு, தன் ஸேனையிருக்குமிடம் செல்லப் புறப்பட்டாள்.

அவன் வெளிவந்து குதிரையிலேறுங் தருணத்திற் கேயூரகன் பின்பற்றிவந்து 'தேவ! காதம்பரீ தேவி பத்திரலேகையினிடம் பிரீதிமேலிட்டு, அவளைத் தன்னிடம் வைத்திருந்து அப்பால் அனுப்புவதாக மதலேகையின் வாயிலாக விண்ணப்பம் செய்கிறாள். இது கேட்டு தமது சித்தம்' என்றான். அதற்குச் சந்திராபீடன் 'கேயூரக! பத்திரலேகை வெகு பாக்கியசாலி; இவளுக்குக் காதம்பரியின் அருள் எளிதிற் கிடைத்ததல்லவா? நல்லது அழைத்துப்போகலாம்' என்று, பத்திரலேகையைக் காதம்பரியினிடம் அனுப்பிவிட்டு, தன் ஸேனையினிடம் சென்றான். அவ்விதம் செல்லுகையில் தன் தந்தையினிடமிருந்து வரும் ஒரு ஸேவகனைக் கண்டு, குதிரையை இழுத்துப் பிடித்து, அவனை அன்புடன் வரவேற்றான்; தன் பெற்றோர் முதலியவர்களுடைய யோகக்ஷேமங்களைப்பற்றி முதலில் விசாரித்தான். அச்சேவகன் பணிந்து 'அனைவரும் ஸௌக்கியம்' என பதிலளித்து, இரண்டு கடிதங்களைக் கையிற்கொடுத்தான். அவற்றைச் சந்திராபீடன் வெகு ஆதரவுடன் பெற்றுப் பிரித்துப் படித்தான். அவற்றிற் பின் வருமாறு எழுதியிருந்தது:—'மஹேச்வரிடம் மஹாபக்தி வாய்ந்தவரும், மஹாராஜாதிராஜனுமான தாராபீடதேவனை யான், ஸகல செல்வங்களுக்கும் இருப்பிடமான சந்திராபீடனை உஜ்ஜயினீ நகரத்திலிருந்து உள்ளம் மகிழ வாழ்த்து கூறுகிறேன். பிரஜைகளெல்லாம் க்ஷேமம். ஆனால் உன்னைப் பார்த்து வெகு நாட்களாயின. எமது மனம் உன்னைக் காண்பதற்குப் பேராவல் கொண்டிருக்கிறது. அகில அந்தப்புரத்தோரும் விலாஸவதீ தேவியும் மிக வாடிப்போயினர். ஆனதுபற்றி இக் கடிதத்தைப் படித்து முடிக்கும் நேரமே

பிரயாணத்திற்குரித்தான காலமாகக் கொள்ளக் கடவாய்' என்று தன் தந்தை எழுதியிருந்ததையும், சுகநாஸன் அனுப்பிய மற்றொரு பத்திரிகையிலும் இவ்வண்ணமே பொருள்படுமாறு வரைந்திருந்ததையும் வாசித்துப் பார்த்தான். உடனே வைசம்பாயனனும் ஸமீபத்தில் வந்து, இவற்றிற்கு மாறுபடாத பொருளையே யுணர்த்துபவையான தனக்கு வந்திருக்கும்வேறிரண்டு கடிதங்களையும் காட்டினான். பிறகு 'தந்தையினுத்தரவுப்படியே' என மொழிந்து, அக்குதிரையிலிருந்த வண்ணம் புறப்பாட்டுப் பறையை முழங்கச் செய்தான். பிறகு வலாஹகனுடைய புத்திரனும் பெரும்படைக்குத் தலைவனுமான மேகநாதனென்பவனை நோக்கி இவ்வாறு கட்டளையிட்டான் :—' நீ பத்திரலேகையுடன் வரவேண்டும் ; கேயூரகனே அவளை இவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்துவிடுவான். அவளைக் கொண்டு காதம்பரீ தேவியினிடம் நான் இவ்வண்ணம் விஞ்ஞாபனம் செய்ததாக மொழிந்திடவேண்டுமெனக் கூறுவாயாக. அதவாது—மானிடரின் சுபாவம் ஒருவாறு நிலையற்றது. நான் இங்ஙனம் செல்வதால் என்னை உமக்கு அர்ப்பணஞ்செய்து கொண்டது கேவலம் உபசாரத்திற்காகவே யென்று கருதக் கூடியதாய் விட்டது. நான் இருக்கட்டும்; தைவலோகத்தவரை அடைவதற்கு ஏற்றவளான காதம்பரீதேவியுமல்லவோ என்னைப்போன்ற தகாத மனிதனிடத்தில் அன்பு பாராட்டலானாள். நான் மஹாகுணசாலியெனப் புகழ்ந்து பேசி என்னை அறிமுகம் செய்து வைத்த மஹாச்வேதையையும் காதம்பரீ இனி வெறுக்க நேரிடும். என் செய்வேன்? பெரியோரது கட்டளையானது எனது தேகத்தைக் கட்டுப்படுத்துகிறது. என் இருதயமோ ஹேமகூடத்தில் வஸிக்க விருப்பங்கொண்டு, அநேக ஜன்மங்களில் காதம்பரீ முதலியவருக்குத்தொண்டு புரிய முற்றிலும் ஆவல்

கொண்டு விட்டது. எப்படியும் என் தந்தையின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து இதோ உஜ்ஜயினிக்குப் போய்ச் சேருகிறேன். நான் உயிருடனிருக்கும் வரையில் மறுபடியும் காதம்பரியைக் காணுமற் போகமாட்டேன். மஹாச்வேதையிடமும் எனது வந்தனங்களைக் கூறவேண்டும். மதலேகை முதலிய மற்ற ஸகிகளையும் மனப்பூர்வமாய் வாழ்த்து கூறி விசாரித்ததாக மொழிய வேண்டும்.'

பிறகு தன் தோழர் முதலானவர்களையும், மற்ற ஸேனைகளையும் வருத்தப்படுத்தாது மெதுவாக அழைத்துவருமாறு சொல்லி, வைசம்பாயனனைப் படைகளின் பொருப்பிலமர்த்தி, அக்குதிரையின் மீதேறியவாறு பிரயாணமானன். அழகிய இலதைகளுக்கொப்பான ஈட்டிகளை யேந்தி அச்வங்களின் மீதேறிய பல போர்வீரர்கள் இவனை வரிசையாகப் பின்பற்றி வந்தனர். அவனுக்குக் காதம்பரியைப் பிரிந்ததனுல் மனம் சூன்னியமாயிருந்தும், தன் சேனத்தைப்பற்றியவாறு நடந்து வரும்ஸேவகனை உஜ்ஜயினீ விருத்தாந்தங்களைப்பற்றி வினவிக்கொண்டே ஓர் அடவியை ஊடுருவிச் சென்ருன். காடுகளில் வஸிக்கும் பாமர ஜனங்கள் அடித்தண்டுகளிற் செதுக்கிய கானகக்காளிகளின் உருவங்களுடன் கூடியவையான மஹாவிருக்ஷங்கள் அநேகம் ஆங்கு அடர்ந்திருந்தன. வழிப்போக்கர் தோண்டிய மணலூற்றுகளடர்ந்த நீர் வற்றிய சிறிய காட்டாறுகளால் அக்காடு மேடுபள்ளமாயிருந்தது. பகலெல்லாம் அவ்வடவியிற் பிரயாணம் செய்து, மாலைப்பொழுது வந்ததும், அவ்வனப்பிரதேசத்தில் ஓங்கி வளர்ந்துள்ள ஒரு சந்தன விருக்ஷத்தின் உச்சியில் தூக்கிக் கட்டியிருந்த சிவப்புக் கொடியொன்று சிறிது தூரத்திலிருந்தே இவனுக்குத் தென்பட்டது. அப்பிரதேசங்களிற் செழிப்பாக வளர்ந்த கம்பம்பயிர் நிரம்பிய நிலங்களும், அவற்றை மிரு

கங்கள் மேய்ந்தழிக்காமலிருப்பதற்கு நிர்மிதத் புருஷா காரமான அநேகம் மருள்களும் காணப்பட்டன. அந்தக் கொடியானது வேறு சிறிய சிவப்புப் பதாகைகளாலும், கறுப்புச் சாமரைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அக் கொடியிற்றொடுத்த இருப்புச் சங்கிலியில் மணியொன்று கட்டப்பட்டு கணீரென்று சப்தித்துக் கொண்டிருந்தது. அக்கொடியின் உச்சியிற் சிங்கத்தின் பிடரிமயிர்களாலாக்கிய சிறிய சாமரையுடன் கூடியதான தங்கத்திரிசூலம் ஒன்று கட்டப்பட்டு, மேகபடலத்தை அது கீறிக்கொண்டிருந்தது.

அக்கொடியைநோக்கிச் சிறிதுதூரம் சென்றான். காட்டானைகளின் தந்தங்களால் ஆக்கிய கபாடங்கள் பூட்டப்பெற்ற காளிகோயில் ஒன்று ஆங்கு இருக்கக் காணலானான்; அதன் தோரண வாயிலில் இரத்த சாமரங்கள் வரிசையாகத் தொங்கவிடப்பட்டிருந்தன. அக்கோயிலுக்கு முன் புறத்தில், ஒரு கருங்கல் மேடையின் மீது உருக்கிரும்பால் ஓர் எருமைக்கிடா அமைக்கப்பட்டிருந்தது; அதன் உடம்பில் செஞ்சந்தனக்குழம்பில் நனைத்த கரதலங்களால் முத்திரைகளிடப் பெற்றிருந்தன; அதன் கண்கள் சிவப்பாக அமைக்கப்பட்டிருந்தன. ஆங்கு காளிக்கு பலியிடுவதற்காக வதைக்கப் பெற்ற எண்ணிறந்த மிருகங்களின் நாக்குகள் செந்தளிர்களைப் போல அறுத்து எறியப்பட்டிருந்தன. அக்கோயிலின் கர்ப்பக்ருஹத்து வாயிற்படியில் தீபங்களின் தூமம் படிந்து காவியேறிய திரைச்சீலை தொங்கிக் கொண்டிருந்தது. மயில்களின் தொண்டை முருந்து வளயங்களாலும், வெண்கல மணிகளாலும் தோரணங்கள் அவ்வாயிற்படியிற் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன. சிங்கமுகம்போல் அமைக்கப்பெற்ற கனத்த பித்தளைக் குழையையும் தந்தத்தாளையுமுடைய இரண்டு கபாடங்கள் அவ்வாயிற்படிக்கு இருபுறமும் இருந்தன.

அக்கர்ப்ப கிருஹத்தில் இருந்த காளி தேவதையின் கழுத்திற் பில்வத் தழைகளாலும், பில்வப் பழங்களாலும் தொடுக்கப்பெற்ற மாலைகள் ஊசலாடின. நீண்ட தாடிகளைப் பெற்ற பலியாடுகள் ஒரு புறம் வரிசையாகக் கட்டப்பட்டிருந்தன. அக்கோவிலிற் கருநிறமான கம்பளத்தைப் போர்த்துக்கொண்டு தமிழ்த்தேசத்து கிழட்டுப் பூசாரி யொருவன் இருந்தான். தடித்துப் பருத்த இரத்தநாளங்கள் அவனுடலெல்லாம் பரவியிருந்தன; மசூரிகைகளாலுண்டான ஆழ்ந்த வடுக்கள் அவனது முகம் முதலிய முழு தேகத்தையும் குழி குழியாகச் செய்திருந்தன; உலர்ந்த காட்டுக் கொடிகளாற் செய்த பூக்குடலையை ஒரு தோளிலும், பூப்பறிப்பதற்கான நீண்ட துறட்டை ஒருகையிலும் அவன் ஏந்திக்கொண்டிருந்தான்; காளியின் கால்களில் மூட பக்தியுடன் அடிக்கடியும் வீழ்வதால் வீங்கிப்போன அவனது நெற்றியிற் கருநிறமான புரைகுழல் புறப்பட்டிருந்தது; இரஸவாதம் செய்யக் கற்றுக்கொண்டு அதில் தேர்ச்சியடைவதற்கு முன்பே, தானே ஸித்தாஞ்ஜனம் ஒன்று செய்து, அதை யிட்டுக் கொண்டதனால் ஒரு கண் அவனுக்கு அவிந்து போயிருந்தது; அவன் பற்கள் பருத்து வளர்ந்து வெளியே வெகுதூரம் நீண்டு வந்திருந்தன; இக் கிழத்தனத்திலும் தென் தேயத்துக்குத் தான் அர்சகைக் கருதி, துர்க்கா தேவியைத் தெண்டனிட்டு வேண்டிவந்தான். தான் மந்திர வாதி யெனக் கூறி, பலமுறை பலருக்கும் பேயோட்ட முயன்றதில், அப்பேய்பிடித்தவர் கைகளால் ஓங்கி அறைந்ததால் அவனது கன்னங்கள் குன்றிக் கிடந்தன; இடையிடையே சுரக்குடுவையாற் செய்த வீணையைக் கையிலேந்தி, தலையயசைத்து, கொசுக்கள் கீச்சிடுவது போல் கங்காஸ்தோத்திரத்தைத் தாறுமாறாகப் பாடி நர்த்

தனம் பண்ணினுன். மேலுக்கு ஸந்நியாஸ வேஷம் பூண்டவனுயிருந்தும், ஆங்கு வழிபாடு செய்ய வரும் சில கிழவிகளின் மீது காதல் கொண்டு, அவர்களை வசப்படுத்துவதற்காக அவர்கள்மீது மோஹசூர்ணமென்னும் பொடியை இவன் மெது வாக இறைப்பான். இதற்கிடையே காளியை அர்ச்சிக்கையில், கை உதறுவதால் தவறிப்போய் கீழே விழும் புஷ்பத் தட்டின்மீது கோபங்கொள்வான். தன் கூன் விழுந்த முதுகுடன் முகநொடிப்புகளைக் காட்டி, அக் காளியையும் இடையிடையே கேலி செய்வான். ஒரு ஸமயம் அக்கோயிலிற் பூசைக்காக வைத்திருந்த கனிகளை யெடுக்க வந்த குரங்குகளை இவன் ஓட்ட, அவை இவனது நாசியைக் கடித்து அதைப் பல ஓட்டைகளுள்ளதாகச் செய்துவிட்டிருந்தன. திராவிடதார்மிகன் என்கிற இத்தமிழ்ப் பூசாரி வஸிக்கும் அக்காளிகோயிலில் அன்றிரவு வஸிப்பதென்று சந்திராபீடன் தீர்மானித்தான்.

பிறகு குதிரையை விட்டிறங்கி, அக்கோயிலிற் பிரவேசித்து, பக்தியுடன் காளிகாதேவியை வலம்வந்து வணங்கினுன். அப்பால் சாந்தமான அப்பிரதேசத்தைப் பார்ப்பதில் ஆவலுடன் அங்குமிங்குமாய் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில், அத்தமிழ்ப் பூசாரி வெகு கோபாவேசங்கொண்டு கூச்சலிட்டு வெருட்டத்தொடங்கினுன். காதம்பரியின் பிரிவாற்றாமையால் அவன் மனம் ஒரு பக்கம் கவலைகொண்டிருந்தும், அப்பூசாரியின் விநோதத்தைக் கண்டு மிகவும் நகைத்தான். இவனது [illegible] அவனைக் கேலி செய்ததையும் தடுத்து, அவனிடம் [illegible]க்கையாகப் பேசி, நல்வார்த்தை கூறி, அவனைக்கடுங் [illegible]வத்திலிருந்து தெளியச் செய்தான். அப்பால் அப்பூசாரியின் [illegible]ப்பு வளர்ப்பு முதலிய வரலாறுகளைக் கருணையுடன் வினவி அவனைக் களிப்புறச் செய்யவே, அக் கிழட்டுப் பூசாரி [illegible]க்கிருந்த அழகு, ஐச்வர்யம்,

ஆண்மை, செல்வாக்கு முதலியவற்றை வெகுவாகத் தற்புகழ்ச்சியோடு வர்ணித்துப் பெருமை பாராட்டிக்கொண்டான். இராஜகுமாரன் அதையெல்லாம் புன்னகைப்புடன் கேட்டு இன்புற்றான். காதம்பரியை விட்டுப் பிரிந்ததால் மனோவேதனைகொண்ட சந்திராபீடனுக்கு சிறிதுநேரம் கிழவனது விநோத வார்த்தைகள் ஒருவாறு பொழுது போக்குக்கு உபயோகமாயின. பிறகு அப்பூசாரிக்குத் தாம்பூலம் அளிக்கச் செய்தான்.

ஆதித்தன் அஸ்தமித்தான். குதிரைகளெல்லாம் புவியிற் புரண்டு பிடரிகளை யுதரிக்கொண்டு எழுந்த பிறகு, அவற்றைக் குளிப்பாட்டி, ஆயாஸம் தீர்ந்ததும், ஈட்டிக் கழிகளை வரிசையாகப் புதைத்து, அவற்றிற் கட்டினார்கள். இந்திராயுதம் பிரத்தியேகமான ஓரிடத்திற் கட்டப்பட்டது. இந்திராயுதத்திற்கு எதிரில், ஒழுங்காக அமைக்கப் பெற்ற ஓரிடத்தில் இடப்பட்ட சயனத்திற் சந்திராபீடன் சென்று சயனித்தான். அவனுக்கு அருகில் அவனது மித்திரர்கள் படுத்தனர். அதன் பிறகு ஒருவரோடும் அவனுக்குப் பேச மனம் வரவில்லை. மனக்கவலை மீண்டும் அவன் இருதயத்தைப் பரிசித்தது. மற்றொன்றிலும் நோக்கமில்லாமல் அவனது மனம் ஹேமகூடத்தையே நாடிற்று. மஹாச்வேதையின் மாசற்ற பிரீதியைப் பல முறை சிந்தித்துப் பாராட்டினான். காதம்பரியின் தரிசனத்தால் தன் ஜன்மமே ஸபலமானதாகக் கருதினான். மதலேகை முதலிய அவளது தோழிமார் தன்னை அன்பு மிக்க உபசரித்ததை உவந்தான். தான் மார்பிலணிந்த சேஷஹாரத்தினிடம் அதிக அபிமானம் கொண்டாடினான். பின் தங்கிய பத்திரலேகை பாக்கியசாலியென அவனைப்பாராட்டினான். சுடச்சுடப் பெருமூச்செறிந்தான். இச்சிந்தையுடன் நித்திரை பெருமலே அவ்விரவை கண்விழித்தவண்ணம்

கழித்தான். காலையிலெழுந்து தமிழ்ப் பூசாரிக்கு வேண்டிய பொருட்களளித்து, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு சிறிது நாட்களில் உஜ்ஜயினீ நகரம் போய்ச் சேர்ந்தான்.

இளவரசன் இங்ஙனம் திடீரென நகரத்திற் பிரவேசித்ததை அறிந்த ஜனங்கள் ஆனந்தத்துடன் ஆரவாரம் செய்தனர். பரிஜனங்கள் பரமானந்தத்துடன் அரண்மனைக்கு விரைந்தோடி, இளவரசனது விஜயத்தைத் தாராபீடனிடம் அறிவித்தார்கள். அநேகம் சிற்றரசர்களும், சத்திர சாமராதிகளை யேந்திய பரிஜனங்களும் பின் தொடர, தாராபீடன் கால் நடையாகவே எதிர்கொண்டுபோனான். தனது தந்தையைக் கண்டதும், சந்திராபீடன் குதிரையைவிட்டிறங்கி, சிரஸ்ஸிலணிந்த சூடாமணியின் காந்தி பூமியிற்பாய அவனது பாதங்களிற் பணிந்தான். 'என் குழந்தாய்! வரவேண்டுமப்பா!' எனப் பெருமகிழ்ச்சியுடன் புயங்களை நீட்டி, அருமைப் புதல்வனை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டான். அருகிலிருந்த மற்றப் பெரியோரையும் சந்திராபீடன் வணங்கினான். தாராபீடன் அவன் கையைப் பிடித்து விலாஸவதியினிடம் அழைத்துச் சென்றான். அந்தப்புரத்துப் பரிவாரம் அனைத்தும் பின்பற்ற அவளும் தன் செல்வப்புதல்வனை எதிர்கொண்டழைத்து,ஆராத்திரிகை முதலிய மங்களாசாரங்களைச் செய்தாள். பிறகு அவளருகில் உட்கார்ந்து திக்விஜய ஸம்பந்தமான செய்திகளைப் பிரஸ்தாவித்துக்கொண்டு சிறிதுநேரம் இருந்தான். பிறகு சுகநாஸனிடம் சென்று, திக்விஜயத்தைப்பற்றிப் பேசிவிட்டு, ஸேனையோடு வைசம்பாயனன் க்ஷேமமாகப் பின்னால் வருவதாகக் கூறி, மனோரமையையும் பார்த்து, விலாஸவதியின் அரண்மனைக்கு மீண்டும் போய், ஸ்நான பானாதிகளைச் செய்து இளைப்பாறிவிட்டு, மாலையில் தன் மாளிகைக்குச் சென்றான். அப்பால் இவனுக்கு

மனக்கவலை மீண்டும் அதிகரித்தது; காதம்பரியில்லாமல் எப்பிரதேசமும் இன்பமற்றதாகவே தோன்றிற்று. காதம்பரியினிடமிருந்து பத்திரலேகையின் வரவை மஹோத்ஸவதினத்தைப்போல எதிர்பார்க்கலானான்.

அப்பால் சில நாட்கள் சென்றன. பத்திரலேகையை அழைத்துக்கொண்டு ஒருநாள் மேகநாதன் வந்துசேர்ந்தான். அவள் இவனுக்குத் தூரத்திலிருந்தே வந்தனம் செய்ய, காதம்பரியின் பிரீதிக்குப் பாத்திரமாகவே, அவனுக்கு அப்பத்திரலேகையினிடம் முன்பிருந்த அன்பு இன்னும் அதிகரித்தது. அப்பால் அவளைப் பரமஸந்தோஷத்துடன் கட்டிக்கொண்டான். தலைவணங்கி தெண்டனிட்ட மேகநாதனைத் தனது கரத்தினால் முதுகில் தடவிக்கொடுத்தான். பிறகு மஹாச்வேதை, காதம்பரீ, கேயூரகன் முதலியவர்களுடைய யோகக்ஷேமங்களை விசாரித்தான். சந்திராபீடனுக்குக் காதம்பரீ இரு கரங்களையுங் கூப்பி வந்தனம் செய்ததாகப் பத்திரலேகை மொழிய, பரிஜனங்களையெல்லாம் விலக்கிவிட்டுத் தன் குதிரைத் தோழந்திற்குப் பத்திரலேகையை அழைத்துச் சென்று, பத்திரலேகை ஹேமகூடத்திலிருக்கையில் நடந்த வரலாறுகளையெல்லாம் வினவினான். அதற்குப் பத்திரலேகை பின் வருமாறு பதிலுரைத்தாள்:—

“தேவரீர் அங்கிருந்து வந்துவிட்டதும், கேயூரகனோடு திரும்பிச் சென்று நான் அங்ஙனமே பூப்படுக்கையின் பக்கத்திலுட்கார்ந்தேன். காதம்பரீதேவி எனதிடம் காட்டிய பிரீதுக்கு அளவில்லை. மாலைநேரத்தில் என் தோளைப் பிடித்துக்கொண்டு ஹிமக்ருஹத்திலிருந்து வெளிவந்து, அவள் என்னை அவளது இளம் பூஞ்சோலைக்கு அழைத்துச் சென்றாள். அங்குள்ள சுண்ணம் பூசிய அழகிய திண்ணையின் மீதிருக்கும் மரகதத்தூணிற் சாய்ந்தவண்ணம் சிறிது நேரம் ஆழ்ந்து யோசித்து, ஏதோ சொல்லவிரும்பினாள்.

அவளுள்ளமறிந்து, 'ஆஞ்ஞாபிக்கவேண்டும்' எனக் கேட்டேன். மணிமேடையைப் பாதத்தின் பெருவிரலாற் கீறிக்கொண்டும், நாற்புறமும் திகைத்துப் பார்த்துக்கொண்டும் வெட்கத்தினாற் பேச நாவெழும்பாமல், முத்துச்சரம்போல் கண்ணீரைப் பெருக்கினாள். 'இஃதென்ன? மனத்திலுள்ளதை எனதிடம் சொல்லவேண்டும்' என பலமுறை யான் வற்புறுத்திக் கேட்கவே இங்ஙனம் காதம்பரீ கூறினாள் :—
'பத்திரலேகே! இப்பொழுது உனக்குச் சமானமான உறவினர் எனக்கு வேறொருவருமில்லை. உன்னைப் பார்த்தது முதல் நீ எனக்குப் பிரியமுள்ளவளாய் விட்டாய். தோழிமாரனைவரையும் விட்டு விட்டு, என் மனம் உன்னையே விச்வஸிப்பதற்குக் காரணம் எனக்கே தெரியவில்லை. நான் கூறப்போகிற செய்தி எனக்கே வெட்கத்தையுண்டு பண்ணும்போது, அதைப் பிறரிடம் கூறத் துணிவது எளிதல்லவே! பரிசுத்தமான குலத்திற் பிறந்து, அதற்கு என்னால் ஒரு களங்கமுண்டாகலாமோ? கன்னிகைகளுக்குத் தகாத சாபல்யத்திற் சித்தத்தைச் செலுத்திவிட்டேன். அவரைப் பாணிக்கிரஹணம் செய்ய நான் பெற்றோரின் அனுமதியைப் பெறவில்லை. என்ன எனது மூடத்தனம்? இந்த சந்திராபீடன் இங்ஙனம் என் விவேகத்தைப் போக்கி விட்டாரே! நான் உன்னிடம் என் ஒழுக்கத்தவறுதலை ஒளியாமல் ஒருவாறு மொழிந்துவிட்டேன். மறு பிறப்பில் உன்னுடன் சேர இறைவனை வேண்டுகிறேன். நான் செய்த பிழையைப் பிராணபரித்தியாகமாகும் பிராயச்சித்தத்தினால் பரிஹரிக்க விரும்புகிறேன்' என்றாள். நடந்த விருத்தாந்தங்கள் எனக்குத் தெரியாவாகையால், வெகு மனக்கவலையோடு நான், 'தேவி! சந்திராபீடதேவன் இழைத்த பிழையாதென்று எனக்குத் தெரியவேண்டும். அதைக் கேட்டு, உண்மை தெரிந்து,

யாள் உயிர்துறந்த பின்பு, நீங்களும் பிராணனை யிழக்க முயலுவது யுக்தம்' என்றேன். அதற்குக் காதம்பரீ மீண்டும் கூறியதாவது :—' அவர் விட புருடனைப்போல் இரவில் எனதிடம் கனவில் தோன்றுகிறார். அவர் தூது அனுப்புவதும், எனக்கு விசிறி யெடுத்து வீசுவதும், வேறு பல விதமான சிருங்கார சேஷ்டைகளைச் செய்வதும் ஆக இத்தகைய பிழைகளையே என் ஸ்வப்னத்திற் செய்து வருகிறார்.' அது கேட்டு எனக்கு மனம் களித்தது. இதற்காகவா சந்திராபீடதேவனைப் பழிப்பது? உமக்கு ஸ்வப்னத்தில் இவ்விலாஸங்களை யுண்டுபண்ணுவதற்குக் காரணமான மன்மதனையல்லவோ நீர் வெறுக்கவேண்டும்? மன்மத பாணத்துக்குத் தப்பினவர் எவரும் மூவுலகிலும் அகப்படார். அன்பார்ந்த கணவனின் குணங்களை வரைவதற்கு வையகமும் போதாதே' என்று மொழிந்தேன். அதற்கப்பால் க்ஷண நேரம் யோசித்து, மீண்டும் அவள், நீசொல்லும் விதமாகவே மன்மதன் எனக்குச் சந்திராபீடனிடம் காதலை யுண்டாக்கி விட்டது உண்மை. ஆனால் இவ்விஷயங்களை நான் இதுகாறும் அறியாதவள். நீ என் மனதிலும் வேறுபடாதவளாய்விட்டதால், நான் செய்ய வேண்டுவதென்ன வென்பதைக் கூறுவாயாக. பெரியோர்கள் பார்த்துப் பழிப்பரேயென்று பெரிதும் வெட்கத்தில் ஆழ்ந்த நான் இனி சாவதே சாலவும் நன்று எனக் கருதுகிறேன்!' என்றாள். யான் மீளவும் இங்ஙனம் அவளுக்கு மொழிந்தேன் :—'தேவி! போதும்; இப்பொழுது முகாந்தரமேதுமின்றி இவ்விதம் ஏன் முயலவேண்டும்? ஆராதிக்காமலே அருள்புரிந்த மன்மதனாலேயே உமக்கு வரன் அளிக்கப்பட்டது. இதற்காகக் குருமார் உம்மை நிந்திப்பதேன்? மன்மதனே மணம்புரிந்துகொள்ள குருவைப் போல் கன்னிகையை ஸங்கல்பிக்கின்றான்; அன்னையைப் போல்

அநுமதிக்கின்றான்; தந்தையைப் போல் நத்தம் செய்கின்றான்; தோழியைப்போல் காதலை யுண்டாக்குகின்றான். சுயமாகவே கணவனை வரித்துக் கொண்ட உத்தம கன்னிகைகள் எத்தனையோ பேர். தர்மசாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள சுயம்வரவிதி தப்பாகுமோ? தேவி! அருள் புரிவீராக. உமது பாதபங்கஜங்களைப் பரிசித்து வேண்டுகிறேன். கட்டளையிட்டு என்னை யனுப்பும். நான் சென்று, உமது மன்னனை இதோ அழைத்து வருகின்றேன்' என்று நான் கூறியதும், அன்பார்ந்த திருஷ்டியினால் என்னை அருந்துபவள்போல மகிழ்ச்சியால் மனம் தழுதழுக்க, மிக்க வெட்கத்துடன் காதம்பரி இங்ஙனம் மொழிந்தாள் :—

"பத்திரலேகே! உனது மேலான பிரீதியை யான் அறிவேன்; ஆனால் காட்டுவாகைமலர்போல் மிருதுஸ்வபாவமுள்ள மங்கையருக்கு, அதிலும் சிறு பிராயம் வாய்ந்த குமரிகளுக்கு இவ்வளவு தைரியமேது? எந்த மாதர்கள் புதிதாகக் கணவனுக்குத் தாமாகவே செய்தி யனுப்புகின்றனரோ, அல்லது அருகிற் செல்லுகின்றனரோ, அவர்களை ஸாஹஸக்காரிகளென்று எண்ணுகிறேன். நான் என்னென்று சந்திராபீடனுக்குச் செய்தி யனுப்பக்கூடும்? நீர் எனக்கு மிகவும் அன்பார்ந்தவரென்றால், அஃது மொழிந்ததையே மீண்டும் பயனின்றி மொழிவதாகும்; நான் உமது உருவமெடுத்த பிரீதியல்லவா வென்பது விவேகமற்றவரின் வினவுதலாகுமல்லவா? உம்மைவிட்டு யான் பிழைத்திரேன் என்பது அநுபவவிரோதம்; அவசியம் வரவேண்டுமென்றால், அது என் செருக்கை விளக்குவதாகும்; சுயமாக நானே உமதிடம் வருகின்றேன் என்றால் அதை ஸ்திரீசாபல்யமென்பார்கள்; யான் உயிரிழந்தேனாகில் எனது அன்பை நீர் அப்பொழுது அறிவீர் என்றால் அதுவும் நேரிடக் கூடியதாயில்லை.

# உத்தர பாகம்.

---

"மேலும் இப்பொழுது இராஜகுமாரரை அழைத்து வரினும் பெரிதும் வெட்கமுற்ற என் மனம், நிலையற்றதாயிருப்பதுபற்றி அவரைக் காண்பதற்கும் இடங்கொடுப்பதாகக் காணோம். இப்பொழுதுள்ள என் மோஹாந்தகாரமானது, அவரிடம் அணுகுவதெங்ஙனமென்று ஐயமுண்டு பண்ணுகிறது. அவரை வலிய அழைத்துவந்த பிறகு அவர் முன்னிலையில் எவ்வாறு நிற்கத் துணிவேன்? நீ என்னிடம் அன்பார்ந்தவள்; ஆகவே நீ ஆவலுடன் சென்று அவர் பாதத்தில் வீழ்ந்து அவரை வேண்டுவாய்; அப்படிச் செய்தும் அவரை அழைத்துவர இயலாமற் போனால் அப்பொழுது என் செய்வது? ஏனெனில் அவர் பெரியோரிடம் பயந்து என்னை அலக்ஷ்யம் செய்யலாம்; அல்லது இராஜக்ருத்தியங்கள் இடையூறுகளிருக்கலாம்; அன்றேல் மீண்டும் இவ்வளவு தூரம் வருவது துன்பமெனக் கருதலாம்; தமது இருப்பிடம் செல்ல விரும்பி என்மீது விருப்பமும் விலகக்கூடும்; அன்றேல் நமக்குத் தோன்றாத வேறு பலமான காரணமும் அவரை இங்கு வரமுடியாமல் தடுக்கலாம். அப்பொழுது இன்னும் நிராசையாகவல்லவோ ஆய்விடுவோம்? அல்லாமலும் முன்னிலும் இப்பொழுது என்ன விசேஷம்? முன்னால் இந்த இராஜகுமாரர் ஹிமகிருஹத்திற் புஷ்பசயனத்தின்மீது படுத்திருக்கையிற் பார்த்த அக்காதம்பரியை யான். பிறரைப் பிடிக்க விரும்பாத அச்சந்திராபீடனும், இங்கு இரு முறை வந்த போனவரே.

மஹாச்வேதை துயரமுற்றிருந்ததைக் கண்டு, அவள்
முன்னிலையில் நானும் மணம்புரிவதில்லை யென்றுறுதி
கூறுகையில், இப்பிரதிஞ்ஞை ஆபத்தாக முடியக்கூடிய
ஸந்தர்ப்பம் நேரிடக்கூடுமென்று அவள் சொன்னதுண்டு.
அவ்விதம் இப்பொழுது பிராணாபத்தும் நேரிடவில்லை. மன்ம
தனோ, தைவமோ, என் இருதயமோ, வேறு எதுவோ ஸங்
கற்பமயமான இராஜகுமாரனை* என் முன்னிலையில் தோற்று
விக்கின்றது. மனத்தோற்றத்தினாலான இவ்விராஜகுமாரர்
ஜனங்கள் அருகில் இருக்கையிலும், ஒருவருமறியாமல்
ஸித்தபுருஷன்போல்† எப்பொழுதும் எனக்குத் தரிசனம்
தந்தருளுகிறார். இச்சங்கற்பமயமான சந்திராபீடன், உண்
மைச் சந்திராபீடனைப் போல என்னை விட்டுப் பிரிந்து
போகக்கூடிய கன்னெஞ்சரல்ல. ஆதலால் அவரை அழை
த்து வருவதென்னும் பேச்சு இத்துடன் நிற்கட்டும்'' என்று
கூறி, கண்ணீரைச் சொரிந்துகொண்டு, மேடையின் மேற்
கட்டிற் கட்டித் தொங்கிய பட்டுக்கயிற்றை ஒரு கரத்தினாற்
பற்றிக்கொண்டு, அக்கையின்மீது தன் முகத்தைச் சாய்த்த
வாறு அசையாமற் பதுமையைப் போல் நின்றாள்.

நானும் அது கேட்டு 'ஸங்கற்பமயமான கணவனைக்
காண்பதென்பது—மணாளனை விட்டுப் பிரிந்த பெண்மக்க
ளுக்கு, மேலும் நற்குலத்துதித்த நங்கையருக்கு வெகு வினோ
தமாயும், உயிர்பிழைத் திருப்பதற்கு உயர்ந்ததோர் உபாய
மாகவும் ஆகின்றது' என்று எண்ணினேன். இதற்குள் பகற்
பொழுது சாய்ந்து வானமும் சிவந்தது. உடனே தம் தமது

---

* ஸங்கற்பமயமான இராஜகுமாரன்—தனது எண்ணத்திற் கேற்கக் கனவிற்காணுவதுபோல், மனத்தோற்றத்தினாற் காணப்படும் இராஜகுமாரன் போன்ற உருவம்.

† ஸித்தபுருஷன்—யோகாப்பியாஸத்தினால் ஸித்தி பெற்று, ஒருவரும் காணாவண்ணம் ஸஞ்சரிக்கவல்ல யோகி.

கடமையைக் கருத்துடன் செலுத்துபவரான சிறு மங்கையர் வந்து, தீபங்களை யேந்திக்கொண்டு சற்றுத் தூரத்திற் சூழ்ந்து கொண்டனர். பின்னர், காதம்பரியை நோக்கி "தேவி! அருள்புரிவீராக; துயரத்தை யடக்கிக்கொள்ளும். யான் சென்று, சந்திராபீடனை அழைத்துக்கொண்டு இதோ வந்து விட்டேன்' என்றேன். தேவரது திருநாமமடங்கிய என் மொழியைக் கேட்டதும், நேத்திரங்களை நன்கு விழித்து, நேசத்துடன் என்னை நோக்கி மரகதமயமான கற்பாறையின் மீது அமர்ந்தாள். உடனே 'பத்திரலேகே! நீ எனக்குப் பிரியமானவள் எனக் கருதி நான் கூறவில்லை. யான் உன்னைப் பார்த்துக்கொண்டிருப்பதால் உயிர் தரித்திருக்கின்றேன். ஆகிலும் இங்ஙனம் உனக்குப் பிடிவாதம் இருக்கின், உனது எண்ணப்படி நீ நிறைவேற்றுவாயாக' என மொழிந்து, விடையளித்து என்றனை விடுத்தனள்."

இவ்விதம் பத்திரலேகை விஷயங்களை விளங்கக் கூறி, சிறிது தன் முகத்தைச் சாய்த்து 'தேவ! இந்நிலைமையிலுள்ள காதம்பரீதேவியை தேவரீர் இங்ஙனம் ஒதுக்கியிருப்பது தமது இனிய சுபாவத்திற்கு ஏற்குமோ!' என்று வினவினாள். சந்திராபீடனும் பத்திரலேகை வெறுப்புடன் உரைத்த வார்த்தையையும், கம்பீரக்கொள்கை யமைந்ததான காதம்பரியின் கருணைபுரியத்தகும் மொழியையும் கேட்டு, வெகு தைரியசாலியா யிருந்தும், காதம்பரியின் கண்ணீர் ததும்பும் முகத்தை நினைத்து நினைத்து மிகக் கவலையில் ஆழ்ந்தான. காதம்பரிக்குக் கூறிய அந்நிலைமையனைத்தும் இவனிடமும் தாவிப் பற்றிக்கொண்டதுபோலும. பிறகு அவன் நா தழுதழுக்க இவ்வாறு மறுமொழியுரைத்தான் :—'பத்திரலேகே! என் செய்வேன்! அதற்குமுன் தேவகன்னிகைகளை நான் கண்டதில்லை. அவளது இங்கிதச் சேஷ்டை

கள் அத்தேவகன்னிகைகளின் ஒப்பற்ற இலாவண்ணியத்திற்கு இயற்கையானவையாயிருக்கு மெனக் கருதினேன். அவ்வளவு பாக்கியத்தைப் பெறுவதில் நம்பிக்கையற்றதான என் மூட இருதயமானது காதம்பரீதேவியின் இவ்வளவு மனத்துயரத்திற்குக் காரணமாகவும், உனது இவ்விதமான நிந்தைக்குப் பாத்திரமாகவும் என்னைச் செய்து வைத்தது. காதம்பரியானவள் அவ்வளவு விளக்கமாகத் தன் நடையுடை முதலிய நடிப்புகளாலும், சிருங்கார வார்த்தைகளாலும் என்னிடம் காட்டிய அன்பில் நான் ஏதோ கவனக்குறைவாயிருந்து விட்டது ஒரு சாபமாகவே இருக்கவேண்டும். அந்த நடிப்பு முதலியவை யிருக்கட்டும்; தன் கழுத்தில் வெகு நாட்களாயணிந்திருந்த இவ்வபூர்வ சேஷஹாரத்தை யளித்து என் கழுத்தில் அணியச் செய்தது ஒன்றே, என்னை அவள் நாயகனாக வரித்ததற்கு முற்றிலும் போதிய முகாந்தரமாய் விட்டது. மேலும் ஹிமக்ருஹத்தில் அவளிருந்த நிலைமைகளும், நான் அவ்விடம் சென்றபோது நடந்த நடக்கைகளும் ஆக இவை யாவும் அவள் என்னை மணம் புரிய ஸங்கற்பித்தாளென்பதை வெளிப்படையாகவே மொழிந்தன. ஆகவே எனது உயிரைத் தந்தேனும் காதம்பரீதேவி என் குற்றத்தை மன்னிக்குமாறு முயல்வேனாக' என்று பேசிவருகையில், திடீரென விலாஸவதியின் கட்டளைக்கிணங்க ஒரு வாயிற்காப்பவள் வந்து வந்தனம் செய்து, பத்திரலேகையையும், இராஜகுமாரனையும் பார்ப்பதற்கு விலாஸவதி யழைப்பதாகக் கூறினாள்.

சந்திராபீடன் அதைக் கேட்டு 'ஓகோ! என் தயிர் இப்பொழுது அலைபாயும் நிலைமையிலிருக்கிறது. அன்னையோ இங்ஙனம் என்னை நொடிப்பொழுதும் காணுமலிருக்க முடியாதவளாயிருக்கிறாள்; காரணமின்றியே வாத்ஸல்யம்

வாய்ந்த காதம்பரீதேவியோ இவ்வாறு வரவேண்டுமெனக் கட்டளையிட்டிருக்கிறாள்; போற்றக்கூடிய பிதாவுக்குப் பணி செய்வதாகும் பேரின்பமோ பரிஹரிக்கத் தகாதது; பாழும் மன்மதனோ பாதை செய்கின்றான்; மனதோ காலதாமதத்தைச் சஹிக்கவியலாதது; ஹேமகூட விந்திய மலைகளுக்கு இடையிலுள்ள வழியோ மிகவும் தூரமானது' என்று சிந்தித்துக்கொண்டே, வாயிற் காப்பவள் வழி காட்ட, பத்திரலேகையின் கையைப் பற்றிக்கொண்டு அன்னையினிடம் சென்றான். அவளிடத்திலேயே அப்பகலெல்லாம் போக்கினான். நித்திரையின்றியே காதம்பரியின் முககமலத்தை நினைத்து நினைத்து இரவையும் கழித்தான். அது முதல் அவன் உள்ளங்கசிந்து, உடலழன்று, பொல்லாத மனக்கவலையுடன் வருந்தியும், அதைப் பிறர் அறியாதபடி மறைத்தும் வந்தான்.

இவ்வாறாக அல்லும் பகலும் அமைதி பெறாதவனாய், ஆயாஸமடைந்து தன் உடலிளைப்பை யங்கீகரித்தானன்றி இலஜ்ஜையை யிழக்க அவன் ஸம்மதிக்கவில்லை. வீர புருஷனுக்கு இயல்பான ஆண்மையை அலக்ஷ்யம் செயவதினும் இன்பத்தைத் துறப்பதே மேலெனக் கருதி ஒவ்வொரு ஸமயம் மனதுக்கு அமைதியுண்டு பண்ணிக்கொண்டான். தனது கம்பீரத்தன்மையினால், தன் மனோவாஞ்சை கரைபுரளாவண்ணம் ஒருவாறு தன்னைத் தானே நிலை நிறுத்திக்கொண்டு சில நாட்களைக் கழித்தான் பிறகு ஒருக்கால் பத்திரலேகையோடு நகரத்திற்கு வெளியில் சிப்ராநதிக்கரையிற் சிறிது தூரம் நடந்துலாவினான். அந்நதியின் எதிர்க்கரையில் ஆறுமுகக்கடவுளின் பெரிய ஆலயம் ஒன்றுண்டு. இவன் உலாவி வருகையில் அத்தேவாலயத்திற்கு எதிர்முகமாக ஒரு குதிரைப்படை பதைக்கப் பதைக்க வந்து கொண்டிருந்தது. அவ்வளவு ஆரவாரத்துடனும் பரபரப்புட

னும் அக் குதிரைப்படை வருவதற்குத் தகுந்த விசேஷ ஸந்தர்ப்பம் ஏதோ இருக்கவேண்டுமென இவன் யோசித்தான். இவனுக்கு அதன் செய்தியையறிய குதூஹலமுண்டாயிற்று. தன் அருகிலிருந்த ஸேவகன்களில் ஒருவனை முன்னதாய் அக்குதிரைப்படையைக் கண்டு செய்தியறிந்து வர அனுப்பினான். தானும் துடையளவு நீரிலிறங்கி ஆற்றைக் கடந்து அச்சுப்பிரம்மண்ணியாலயத்தில் அச்சேவகன் கொண்டுவரப்போகிற செய்தியைக் கேட்கக் காத்துக் கொண்டிருந்தான். சில க்ஷணத்திற்கெல்லாம் அக்குதிரைப்படையுடன் மயிற்றோகையினாலான சத்திரமேந்தியவனாய் கேயூரகன் வருவதை இவனும் பத்திரலேகையும் கண்டார்கள். சந்திராபீடன் காதம்பரீவிஷயமாய் அடைந்துள்ள அவஸ்தையைச் சற்று முன்பு சந்திராபீடன் அனுப்பிய ஸேவகனிடமிருந்து கேயூரகன் ஏற்கனவே தெரிந்து கொண்டிருந்தான். கேயூரகனது முகம் தோற்றத்தில் மிகத் துயரமும் கவலையுங் கொண்டதாயிருந்தது. இராஜகுமாரன் வெகு அன்புடன் அவனை வரவேற்றான். வெகுதூரப் பிரயாணத்தினால் பெரிதும் பிரயாஸமடைந்த கேயூரகனைப் பார்த்து, க்ஷேமவிருத்தாந்தங்களைப்பற்றி ஆயாஸம் தீர்ந்த பிறகு மெதுவாகப் பேசலாமெனச் சொல்லி, யானையின்மீது கேயூரகனையும் பத்திரலேகையையும் ஏற்றிக்கொண்டு, தன் உத்தியான வனத்திற்குச் சென்றான். அப்பொழுது க்ஷேம விஷயத்தில் ஒருவாறு அதிருப்தியுடன் கேயூரகன் ஏதோ குறிப்பிட்டும், அச்சமயம் எதையும் துரிதப்பட்டுக் கேட்க சந்திராபீடன் விரும்பவில்லை; அக் காலை அத்தோட்டத்திலுள்ள அவன் மாளிகையில் மத்தியான்னச் சடங்குகளை அனைவரும் ஒருவாறு நிறைவேற்றினார்கள். பிறகு பத்திரலேகையையும் அருகில் வைத்துக்கொண்டு, காதம்பரீ

முதலியவர்களுடைய க்ஷேமங்களைப்பற்றி இனி கூறும்படி கேயூரகனை வினவினான்.

கேயூரகன் அவனது முன்புறத்தில் வணக்கமாய் உட்கார்ந்து, இங்ஙனம் சொல்லத் தொடங்கினான்:—"ஆண்டவ! என்னென்று விண்ணப்பம் செய்வேன்! காதம்பரீ தேவியினிடமிருந்தேனும், மஹாச்வேதையினிடமிருந்தாகிலும் செய்தியேதும் சிறிதேனும் யான் கொண்டுவந்தேனில்லை. காதம்பரீ தேவியினிடமிருந்து இப்பத்திரலேகையை அழைத்து வந்து, தாம் அனுப்பிய மேகநாதனிடம் மஹாச்வேதையின் ஆசிரமத்திற்கருகில் ஒப்புவித்தேன். அப்பொழுது, தாம் கூறிய செய்திகளையெல்லாம் மேகநாதன் என்னிடம் சொல்ல, நானும் திரும்ப ஹேமகூடம் சென்று, தேவர் உஜ்ஜயினீ சென்றுவிட்டதையும், தேவர் மேகநாதனிடம் அனுப்பிய செய்தியையும் மஹாச்வேதையினிடம் விளங்கக் கூறினேன். அப்பொழுது மஹாச்வேதை பெருமூச்செறிந்து, மனம் வருந்த, 'சரி இதுவுமிப்படியா!' என மொழிந்து, மீண்டும் தவம் புரிவதற்குத் தனதாச்ரமம் சென்றாள். காதம்பரீ தேவியும் உடனே இருதயத்திற் சமட்டியால் தாக்குண்டவளைப்போல, மஹாச்வேதை சென்றுவிட்ட செய்தியையும் அறியாதவளாய், சிறிது நேரம் பேசாமலிருந்து, 'இவ்வின்பமான செய்தியை மஹாச்வேதையினிடமே சொல்லிக் கொள்' என்று முகச்சுளிப்புடன் என்னை நோக்கிக் கூறிவிட்டு, மதலேகையைப் பார்த்து 'இந்த இராஜகுமாரன் செய்தவாறு வேறெவரேனும் செய்வரோ?' என வெறுப்புடன் மொழிந்து, சயனத்திற் சென்று வீழ்ந்து, வெகு துயரத்துடன் அத்தினத்தை அப்படியே கழித்தாள். மறுநாள் விடியற்காலையில் நான் அருகிற் செல்ல, 'இங்ஙனம் திடகாத்திரர்களாய் நீங்கள் இருக்கையிலேயே, யான் இத்தகைய அவஸ்தையை அனுபவிக்கின்

றேன்' என்று முகச்சாடையினால் என்னை வெறுப்பவள் போல வெகுநேரம் குறிப்பிட்டுப் பார்த்தாள். அவ்வாறு நோக்கியதும், துயரமுற்றவளான தேவியானவள் யான் போவதற்கு விடையளித்தாளென்றே நினைத்து, தேவியினிடம் சொல்லிக் கொள்ளாமலே, இதோ தேவாது திருவடியையடுத்துவந்தேன். தேவரீரொருவரையே கதியாகக் கருதியவள் காதம்பரீ. அடியேன் விண்ணப்பத்தைக் கருணையுடன் கேட்டு நிறைவேற்றுவீரென்று நான் முற்றிலும் நம்பியிருக்கிறேன். சந்தனமணத்துடன் மலயபர்வதத்திலிருந்து வரும் மந்தமாருதம்போல் மனமகிழ்ச்சிக்குக் காரணமாயிருந்த தமது முதல்வரவானது, கந்தர்வராஜக்ருஹத்திலிருக்கும் கன்னிகைகளாகும் கொடிகளின் கூட்டமனைத்தையும் ஒருவாறு அலைக்கச்செய்தது. அச்சந்தர்ப்பத்திற் காதம்பரியும் தேவரீரைத் தரிசித்து காதல் கொண்டாள். இப்பொழுது உமது நிமித்தம் அவள் அனுபவிக்கும் ஆயாஸம் அளவற்றது. மனதுக்கிசைந்த மனிதருடன் கூடவேண்டுமென்னும் வாஞ்சை வெகு வலிவுள்ளதன்றோ! ஆகவேதான் கடும் வேதனைகளையனுபவித்தும் அவள் தைவச்செயலாய்ப் பிழைத்திருக்கின்றாள். மிகக் கடுமையாய் அவள் அனுபவிக்கும் மனவேதனையை எதுடன் ஒப்பிடுவேன்? மனதிலும் மேனியிலுமுண்டாகும் மன்மததாபத்தைத் தணித்துக்கொள்ள அடிக்கொருமுறைக் கொடிமண்டபத்தில் அவள் வாஸம் செய்கின்றாள்; அடிக்கடி நிலைத்தாமரைகளின்மீது சயனிக்கின்றாள்; பலமுறை உத்தியானவனத்துக் குளத்தின் குளிர்ந்த நீரில் குளிக்கிறாள். இவ்விதம் செய்துகொண்டே அவளுக்கு ஆயாஸமயமாகவே பகற்பொழுது சாய்கிறது. சந்திரனுதித்தாலோ இன்னும் சொல்லத்தேவையில்லை. அச்சமயம் அந்தகாரம்போலவே, அவளது தைரியமும் மறைந்து

விடுகின்றது; அம்புயம் போல, அவள் இருதய கமலமும் குறுகித் துன்புறுகின்றது; சந்திரகாந்தச்சிலைபோலவே, அவள் நேத்திரங்களும் நீரைச் சொரிகின்றன; மேலும் அவளுக்குத் தென்றற்காற்றுடன் கூடவே சந்தன பரிமளம் போல, மூர்ச்சையும் வருகின்றது. தாமரை மலர்களின் மீதும் தளிர்களின் மீதும் நடமாடிக்கொண்டு நிசியையும் கழிக்கின்றாள். பலவாறு பேசுவதிற் பயனென்ன? இப்பொழுது அவளது தோழிமாரனைவர் உரைப்பதும் உமது நாமதேயமே; பரிஜனம் செப்புவது அனைத்தும் உமது செய்தியே; கனவிலாவது உம்மைக் காண்பதற்கென்றே பலமுறை அவள் கண்வளர முயல்கின்றாள்'' என்று கேயூரகன் கூறியவாறிருக்க, 'இருக்கட்டும்; இதற்குமேல் என்னால் செவியுறக்கூட வில்லை' என்கிற விஷயத்தைக் கண்மூடும் பாவனையால் அறிவிப்பவன்போல், சந்திராபீடன் மூர்ச்சையடைந்தான். கேயூரகன் தன் பேச்சை முடித்ததற்கு அம்மூர்ச்சையே மூகாந்தரமாயிற்றல்லாது, அவளது அவஸ்தை அனைத்தும் மொழியப்பெற்று முடிவடைந்த தென்பதல்ல.

சந்திராபீடன் மூர்ச்சையடைந்து கண்களை மூடிக்கொள்ளவே, வெகு பரபரப்புடன் கேயூரகன் அவனைத் தாங்கிக்கொள்ள, பத்திரலேகையும் ஆலவட்டமெடுத்து வீசினாள்; அவனுக்கு அம்மூர்ச்சை தெளிந்தது. கேயூரகன் தனக்கு எதிரில் திகைத்து நிற்பதைச் சந்திராபீடன் பார்த்து, தைரிய மிழந்தவனை யொப்ப கண்ணீர் ததும்ப நா தழுதழுக்க இங்ஙனம் பதிலுரைத்தான்:—'கேயூரக! நீ விவரித்த விஷயமனைத்தையும் உனக்கு முன் வந்த பத்திரலேகையே எனக்கு நன்கு அறிவித்துவிட்டாள். காதம்பரீதேவி நற்குலத்திற் பிறந்த ஸரஸமான சுபாவம் வாய்ந்தவள்; அவள் தன்னைத்

தானே அறிந்துகொள்ளாதவள் என்பது எனது எண்ணம். சந்திரகாந்தச்சிலை அசேதனமானது; அதற்குச் சந்திர மூர்த்தியைக் கண்டு கசியுந் தன்மையுண்டு; ஆனால் அச்சந்திரகாந்தக்கல் மதியின் கதிரொளியை வலித்திழுக்குமோ? ஆகவே காதம்பரீதேவி என்னை நோக்கி இவ்விதம் நடக்கவேண்டுமெனக் கட்டளையிடா மற்போனது அவள் குற்றம். அவ்வள் உதடு அசைந்தாலும் போதுமென நான் காத்துக்கொண்டிருந்தேன்; அவள் இரக்கமின்றி ஏதும் சொல்லாமல், பிறர்து நெஞ்சம் நோவுறுவதையும் பொருட்படுத்ாது வெட்கத்துடன் விலகிநின்றது அவள் குற்றமல்லவா? அவளைச் சேர்ந்த மற்றவரும், இவ்வபாய நிலைமை நேரிடுவதை இலக்ஷ்யம் செய்யாமலிருந்ததும் நியாயமோ? ஆனால் மங்கையருக்கு நாணமென்பது தொன்றுதொட்டுவந்ததே. எனதிடம் மாத்திரம் அவள் வெட்கத்தை யொழித்திருந்தால் உசிதமாயிருந்திருக்கும். மதலேகையோ, இவளுக்கு இரண்டாவது இருதயம்; இங்ஙனம் துன்பமனுபவிக்கும் காதம்பரீதேவியின் மேனியை அம்மதலேகையும் என் உபேக்ஷிக்க வேண்டும்? ஆங்கிருக்கையிலேயே இவ்விதம் செய்யவேண்டுமென எனதிடம் இரஹஸ்யமாக ஏன் கூறியிருக்கக்கூடாது? வழியும் பல நாட்களிற் செல்லவேண்டியதாயிருக்க யான் இப்போழுது கேள்வியுற்றும் என் செய்யலாகும்? பாழும் தைவத்தின் இவ்விஷமச் செயல்களை நோக்குங்கால், இத்துடன் இத்தைவம் நிற்காதென என் மனம் அஞ்சுகிறது. அன்றேல், பயன் என்னவெனக் கருதாமலே குதிரைமுகத்தோரைப் பின்பற்றி மனிதஸஞ்சாரமொழிந்த தேசத்திற்குச் சென்றதெங்கே! அங்கு நீர் வேட்கையுண்டாய் அச்சோதஸரஸ்ஸைக் கண்டதெங்கே! அதன் கரையின் கண் விடாய்தீருங்கால், தைவலோகமாதின் கீதத்தொனி

யைக் கேள்வியுற்ற தெங்கே! அதை அறிய விரும்பிச் சென்றவனுக்கு மஹாச்வேதையின் தரிசனம் கிடைத்த தெங்கே! மஹாச்வேதையோடு ஹேமகூடத்திற்குப் போனதெங்கே! ஆங்கு காதம்பரீதேவியைக் காண்ப தெங்கே! என் கோரிக்கை நிறைவேறாமலிருக்கையிலேயே, தன்னிடம் வரவேண்டுமென்று, தந்தை என்றனக்குக் கடக்க முடியாத கட்டளையை அனுப்பியதுதானெங்கே! ஆனதுபற்றி அடாத காரியங்களை இயற்றிவைக்கும் குணமுள்ள இப்பாழும் தைவம் எம்மை வெகுதூரம் எற்றி வைத்தல்லவோ வீழ்த்துகிறது! ஆகிலும் தேவிகளுக்கு ஆறுதல் செய்ய முயலுவோமாக.' சந்திராபீடன் இவ்வாறு பேசிவருகையில் சூரியாஸ்தமானமாயிற்று. அன்றிரவு அவர்கள் அனைவரும் அச்சிங்காரவனத்திலேயே சயனித்தனர். சந்திராபீடனுக்கு நித்திரைவராமல் ஏதேதோ எண்ணங்களெல்லாம் உண்டாயின:—"பெற்றோரிடம் விடைபெறாமல், நான் காதம்பரியினிடம் சென்றும் மனதுக்கு இன்பமேது? அப்படிச்செல்வதால் பயன் யாது? பிற்காலத்தில் வரப்போகிற இவ்வாலோசனை இருக்கட்டும்; தந்தையானவர் இராஜ்யபாரத்தை எனதிடம் எற்றிவைத்துவிட்டார். யான் சொல்லாமலே ஓடியெடுத்து வைக்கினும், நம்மைச் சேவித்து வரும் மன்னவரும், பரிவுடன் பரிபாலிக்கப் பட்டுவரும் பிரஜைகளும் அவசியம் பின்பற்றுவரென்றே எனதெண்ணம். அன்றியும் தந்தைக்குத்தான் வேறெவன் இருக்கின்றான்? அவருக்கு மனவெறுப்புண்டாக்கிச் செல்லுவதிற் சுகமில்லை; அது முற்றிலும் நமக்குற்றதுமல்ல. ஒருக்கால் பிதாவும் பின் தொடர்வாராகில், பதினெட்டு த்வீபங்களுடன் கூடிய மேதினியே தொடர்ந்து வரப்போகிறது. அப்பொழுது யான் என்னை எங்கு மறைத்து வைத்

தவனுவேன்? என்னைக் கண்டுபிடித்த பின்னர் இங்கு யான் முகத்தைத்தான் எங்ஙனம் காட்டுவேன்? கேட்குங்கால் மறுமொழியும் என்னென்று கூறுவேன்? அன்றியும், வெகுநாட்களாய் வெளிநாடு சென்று அலைந்து பல சிரமங்கட்கும் உள்ளான எனது அச்சேனை இப்பொழுது ஹேமகூடத்திற்கு மறுபடி பிரயாணம் செய்வதும் எளிதல்ல. ஒருவாறு என் பெற்றோரிடம் விண்ணப்பம் செய்துகொண்டு, அவ்விருவரிடமும் விடைபெற்றுப் பரிவாரத்துடன் போவோமென்றால், அவரிடமும் யான் என்னென்று மொழியலாகும்? 'என்னிடம் அன்பினால் கந்தர்வ மன்னவனது மகளான காதம்பரி துன்பமுற்றிருக்கின்றனள்' என்று கூறுவேனு? அன்றேல், 'காதம்பரியின்றி யான் உயிர்தரிப்பதியலாது' என்றுரைப்பேனு? மீண்டும் அவ்விடம் போவதற்கு மற்றொரு முகாந்தர மேனும் கற்பிக்கக்கூடவில்லையே. போக வேண்டுவதற்குப் பொருத்திய காரணம் கூறாமல் எங்ஙனம் என்னை விடுவித்துக்கொள்வேன்? தந்தையும் அன்னையுந்தான் என்னை விடுவது எவ்வாறு? ஆனதுபற்றி நண்பரால் நிறைவேற்றக்கூடிய இத்தகைய விஷயத்தில், யான் ஒருவனுகவே துன்பத்தில் அகப்பட்டுக்கொண்டவனுய் என் செய்யலாகும்? வைசம்பாயனனும் எனதருகில் இல்லையே; எவரை வினவுவேன்? எவருடன் மொழிந்திடுவேன்?' இங்ஙனம் அவன் எண்ணமிட்டுக்கொண்டே அவ்விரவைக் கழித்தான். விடியற்காலத்தில் தசபுரத்துக்கு அப்பால் தன் ஸேனை வருவதாகக் கேள்விப்பட்டான். தனது இரண்டாவது இருதயமெனத் தகும் வைசம்பாயனன் உற்ற ஸமயத்தில் வந்து சேர்ந்ததாகக் கருதி, மனப்பால் குடிப்பவன் போல, கடவுள் தன்மீது ஒருவாறு அருள்புரிந்ததாக மனமகிழ்ந்தான். உடனே கேயூரகன் வந்து வந்தனம் செய்தான். அவனைப்

பார்த்து, 'அப்பா கேயூரக ! வைசம்பாயனனும் வந்துவிட்டான். காரியம் கைகூடியதாகவே கருதலாம்' எனப் பெருமையுடன் மொழிந்தான். அதைக் கேட்டதும், தான் செல்லுவதற்குச் சிறிது காலதாமதம் அதனால் நேரிடுமென்று கேயூரகனுக்குத் தோன்றிற்று. ஆகிலும் 'நல்ல சுபவார்த்தை ; தேவரது மனம் மகிழ்வுற்றதே' எனப் பதிலுரைத்துவிட்டு, அரிகிற் சென்றுட்கார்ந்து இங்ஙனம் விண்ணப்பம் செய்து கொண்டான் :—'தேவ! கீழ்த்திசை வெளிறியதும் சந்திரன் உடனே உதிக்கப்போவது உண்மை; அங்ஙனமே விரஹத்தினால் வெளுத்துள்ள தமது இத்தேக நிலைமை தாம் தடையின்றி காதம்பரியினிடம் வந்து சேருவீர்களென்பதை நன்கு அறிவிக்கின்றது. ஆனால் வைசம்பாயனன் வந்து, அவருடன் இப்பூர்வோத்தரங்களை யெல்லாம் விளங்கக் கூறி யோசனை செய்து, அப்பால் பிரயாணத்திற்கான ஸந்நாஹங்களைச் செய்து கிளம்புவதற்குக் காலதாமதம் அவசியம் நேரிடும். காதம்பரீதேவியின் தேகநிலைமையோ காலவிளம்பத்தைத் தாங்கக் கூடாததாயிருப்பதைப் பற்றி ஏற்கனவே தெரிவித்திருக்கிறேன். ஏதோ பிரத்தியாசையினால் அவள் ஒருவாறு உயிர் பிழைத்திருக்கிறாள். நான் முன் சென்று தேவர் சீக்கிரம் வருவதாகக் கூறினேனானால், அவள் தேறுதலடைவள். மேலும் யான் இங்கு இருந்து இனி ஆகவேண்டிய காரியமும் ஒன்றுமில்லை. ஆகவே அருள் புரிந்து எனக்குப் போக விடையளிக்கவேண்டும்.'

உடனே சந்திராபீடன் உள்ளம் மகிழ்வுறத் தன் அருளை யறிவிப்பவன்போல் கேயூரகனைப் பார்த்து, 'கேயூரக! நல்ல யோசனை செய்தாய்; ஸமயோசிதமாக இங்ஙனம் செய்ய வேறு எவருக்குத் தோன்றும்? காதம்பரியின் உயிரைக் கருதும்போது நீ உடனே செல்லுவதுதான் உத்தமம்.

நான் அவ்விடம் வருவதை ஊர்ஜிதப்படுத்துவதற்குக் காதம்பரியின் பூர்ணக்ருபைக்குப் பாத்திரமான பத்திரலேகையையும் இதோ உன்னுடன் அனுப்புகிறேன்' என்று மொழிந்து, தன் பின்புறத்திலுட்கார்ந்திருந்த பத்திரலேகையை உற்றுப்பார்த்து, 'என்ன, சரிதானே!' எனக் கேட்டான். அவளும் உடனே புறப்படுவதற்கு ஸந்நாஹம் செய்து கொண்டாள். உடனே மேகநாதனை யழைத்து, 'முன்பு பத்திரலேகையை அழைத்து வருவதற்காக எவ்விடத்தில் உன்னை இருக்கச்செய்தேனோ, அதுவரையிற் பத்திரலேகையை அழைத்துக்கொண்டு முன்னதாகக் கேயூரகனுடன் செல்லுவாயாக. நானும் வைசம்பாயனனைப் பார்த்துவிட்டு, குதிரைகளுடன் உன்னைப் பின்தொடர்ந்தே வருகிறேன்' என ஆஞ்ஞாபித்தான். கேயூரகன் இராஜகுமாரனுக்கு வந்தனம் செய்து எழுந்திருந்தான். அவனைச் சந்திராபீடன் கட்டிக்கொண்டு, தன் காதுகளிலிருந்து கர்ணாபரணத்தைக் கழற்றி அவன் காதிலிட்டான்; பிறகு கேயூரகனை நோக்கி, 'அப்பா! நீ காதம்பரியினிடமிருந்து எனக்குச் செய்தி யொன்றும் கொண்டுவரவில்லை. ஆகையால் நான் பதில் சொல்லி யனுப்புவதற்கு அபூர்வமான விஷயம் என்னிடம் யாது இருக்கிறது? ஆகிலும் பத்திரலேகையே அவசியமானவற்றை எப்படியும் விஞ்ஞாபனம் செய்து கொள்ளுவள்' என்று சொல்லிவிட்டு, பத்திரலேகையை நோக்கி இங்ஙனம் கூறலானான்:—'பத்திரலேகே! நான் இவ்விதம் கைகூப்பி அறிவித்துக்கொள்வதாகக் காதம்பரீதேவியினிடம் விண்ணப்பம் செய்வாயாக:—முதற்பார்வையிலேயே முழுநேசத்தையும் எனதிடம் விளங்கக் காட்டிய தேவியை யான் இவ்வளவு ஸங்கடத்திற்கு உட்படுத்தியது எனது பேதமையே யன்றி வேறல்ல. அவள் உருவத்திற் கோமளமானவள்; குணத்

தில் மிகச் சரஸமானவள்; அவளுடைய அருங்குணந்தான், இவ்வளவு பிழைசெய்த என்னையும் இங்ஙனம் தைரியமாக மீண்டும் பேசச் செய்கிறது. காதம்பரியின் ஒப்பற்ற உதார மான சுபாவமே, என்னை அவள் கைவிடமாட்டாள் என்கிற ஒரு பிரத்தியாசையைக் கொடுத்து என் உயிரைக் காத்து வருகிறது. என் வரவு அவ்விடத்திற் பயனுள்ளதாக வேண்டுமானால், பாருலகும் பாக்கியசாலியாயிருக்கவேண்டு மானின் காதம்பரீதேவி தன் உயிருக்கு யாதோரபாயமும் உண்டுபண்ணிக்கொள்ளக்கூடாது. பத்திரலேகே! இங்கிருந்து தூரதேசம் போகும்போது, நீயும் என்னைப் பிரிந்ததால் வருந்தவேண்டாம்; சரீரத்திற்குச் செய்துகொள்ள வேண்டிய சீர்பாட்டில் அனாதரவு செய்யக்கூடாது; உண வருந்தும் வேளையை அதிக்கிரமிக்காதே; தெரியாத வழி களில் தனித்துச் சென்றுவிடவேண்டாம். என் செய்வேன்! தேவின் உயிரானது உன்னைவிட என்றனக்கு அதிக அரு மையாய்விட்டதே! அவளுயிரைக் காக்கவேண்டுமென்று இதோ உன்னை அனுப்பவேண்டியிருக்கிறதே! அன்றியும் என் உயிரும் உன் கையிலேயே இருக்கின்றது. ஆதலால் நீ ஜாக்கிரதையாகப் போய்வருவாயாக' என்றுரைத்து, கேயூரகனை மீண்டும அணைத்துக்கொண்டு, பத்திரலேகை யைக் கவனித்துக் கொள்ளச் செய்து, 'நான் அவ்விடம் சீக் கிரம் வருகிறேன்; ஆனால் நீயும் பத்திரலேகையும் ஹேமச் வேதையின் ஆச்ரமத்திற்கு வந்து அப்பொழுது என்னை ஹேமகூடத்திற்கு அழைத்துப் போகவேண்டும்' எனக் கட்டளையிட்டு அவர்களை அனுப்பினான்.

ஸேனைவருகிற செய்தியைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும்பொருட்டு ஸேவகனை விடுத்தான். சில நாட்களாகக் காணாத வைசம்பாயனனை யெதிர்கொண்டழைப்பதற்கு அநு

மதிபெறுவதற்காகப் பிதாவினிடம் சென்றான். அங்கு அவன் தந்தைக்கு வந்தனஞ் செய்ய, தாராபீடன் தன் அருமைக் குமாரன் நல்ல யௌவனப்பருவ மடைந்திருப்பதைக் கண்டு மிகக் குதூஹலமடைந்தான்; தன் மைந்தனுடைய ஸுந்தரமான தேகத்தைப் பரிசித்துக்கொண்டே, சுகநாஸனை நோக்கி, 'ஐயா! மதியின் மத்தியிலுள்ள மறுவைப்போல் இவனது முகத்தில் தோன்றிய மெல்லிய மீசையும், மற்ற யௌவனக் குறிகளும் இவனுக்கு இப்பொழுது மணம் செய்விக்க வேண்டியது அவசியமென்பதை அறிவிக்கின்றன; அருமைப் புதல்வனது முகத்தை இவ்வளவு காலங்கழித்துத் தைவச் செயலாகக் காணப்பெற்றோம்; மருமகளின் முகத்தையும் காண மனம் இப்பொழுது ஆவலுறுகின்றது' என்றான். சுகநாஸனும் அதற்கு 'தேவ! நன்றாகச் சொன்னீர்; நமது சந்திராபீடன் வெகு இரஸிகன்; வித்தைகளையும் குறைவின்றியே கற்றுவிட்டான்; குடிகளின் பிரீதியையும் ஸம்பாதித்துக் கொண்டான்; இராஜ்ய பரிபாலன பாரத்தையும் ஏற்றுக்கொண்டு பூமண்டலத்தையும் திக்விஜயம் செய்து சுற்றிவந்தான்; இனி என்ன குறை? மணம்புரியவேண்டியது முற்றிலும் இப்பொழுது இன்றியமையாதது' என்று பதிலுரைத்தான். அச்சமயம் ஒருவாறு தலைகுனிந்திருந்த சந்திராபீடன் 'ஓ! காதம்பரியைப்பற்றி யான் காதல் கொண்டிருக்கும் இச்சந்தர்ப்பத்திலேயே கடவுளும் என் தந்தையின் மனதிற் புகுந்து இவ் வெண்ணத்தையுண்டு பண்ணியது, காரிருளிற் புகுந்தவன் தீவர்த்தியின் கதிரொளியைக் காண்பது போல ஆயிற்று; வைசம்பாயனனைக் காண்பதுதான் ஒரு தடை; அவனைச் சந்தித்ததும் காதம்பரியை மணம்புரிந்தாய் விட்டதாகவே கருதலாம்' என்று எண்ணிக்கொண்

டான். உடனே வேந்தன் எழுந்து, தன் மைந்தனின் விசால மான அழகிய தோளைப் பிடித்துக்கொண்டே விலாஸவதி யினிடம் சென்றான். இவர்கள் வருவதைக் கண்டு விலாஸ வதி பரபரப்போடு எழுந்து எதிர்கொண்டு வந்தாள். தாரா பீடன் அவளை நோக்கி, சற்றுயரத்தில் நின்றவாறு இங் ஙனம் மொழிந்தனன்:—'தேவி! நமது குமாரனது முகத் தைப் பார்த்தையோ! அவனுக்கு மணம் செய்விப்பது இனி அத்தியவச்யமென்று உனக்குத் தோன்றுகிறதா? யான் கேட்கும்போது நீ இங்ஙனம் வெட்கப்பட்டு முகத்தை அப்புறம் மறைத்துக் கொள்கிறாயே! ஓ! சந்திராபீடன் மீது உனக்குள்ள அன்பு இவ்வளவு தானோ?' என்று விநோதமான கபடஸல்லாபங்களைச் செய்து, அனைவரும் இன்புற்றவர்களாய், விலாஸவதீ க்ருஹத்திலேயே உண்டி வினை முதலியதை முடித்துக்கொண்டனர். வைசம்பாயனனை யெதிர்கொண்டு அழைக்கச் செல்லுவதற்காகச் சுகநாஸனைக் கொண்டே தன் தந்தையின் அனுமதியைப் பெற்றான். அன்றிரவு மூன்றாவது யாமத்தில் நிலவு பிரகாசமாயிருக் கும்போது இளவரசின் புறப்பாட்டை அறிவிக்கச் சங்குகள் முழங்கப்பட்டன.

பின்னர் பெரிய குதிரைக்கூட்டம் ஆரவாரத்துடன் முதலிற் கிளம்பிற்று; சந்திராபீடன் கஞ்சுகம் தரித்துக் கொண்டு, முற்றத்தில் ஆயத்தமாயிருந்த இந்திராயுதத் தின் மீதேறிக்கொண்டு நகரத்திற்கு வெளியில் குதிரைக் கூட்டத்துடன் கூடி சிப்ராநதியையும் கடந்துவிட்டான். தசபுரத்திற்குப் போகும் பாதை நன்கு தேய்ந்து விசால மாயிருந்ததாலும், நிலவு வெகு இரமணீயமாகப் பிரகாசித்த தாலும் வழிநடப்பதற்கு அனைவருக்கும் உத்ஸாஹமாயிருந் தது. உதயகால மந்தமாருதம் வீசவே சிரமமும் தோன்றாமல்

பொழுது விடிவதற்குள் மூன்றுயோஜனை தூரம் சென்று விட்டனர். கதிரவனும் சற்றுக்கெல்லாம் உதயகிரியின் உச்சியை வந்தடைந்தான். இவர்களுக்கெதிரில் ஓர் கூப்பிடு தூரத்தில் கடல் புரண்டுவருவதுபோல் பெரியதோர் படைத்திரள் வந்துகொண்டிருந்தது. எதிரில் வரும் அச் சேனையிற் புகுந்து சந்திராபீடன் திடீரென வைசம்பாயன னுக்கு எதிரில் தோன்றி, விநோதத்தின் பொருட்டு அவ னைத் திகைக்கச் செய்ய விரும்பினான்; உத்தரீயத்தினால் தலையை ஒருவாறு மறைத்துக்கொண்டு, இந்திரா யுதத்தை விரைவா யோட்டி அப்படைத்திரளிற் பிரவேசித் தான். ஸேனையினுள் சுற்றிப் பார்த்துவிட்டு, வைசம்பாய னன் இருக்குமிடத்தை விசாரித்தான். அச்சேனையில் வரும் சில மன்னர்கள் இந்திராயுதத்தைப் பார்த்துவிட்டு, இவன் சந்திராபீடனெனத்தெரிந்து, கண்ணீர் பெருக முகங்கலங்கி இவனைச் சூழ்ந்துகொண்டனர். மீண்டும் ‘ வைசம்பாயனன் எங்கே ?’ என அச்சிற்றரசர்களைக் கேட்டான். அவ்வனை வரும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்து யோசித்து, ‘ தாங்கள் இவ் விருக்ஷத்தினடியில் இறங்கியுட் காருங்கள் ; நடந்ததைக் கூறுகிறோம்’ என்றார்கள். அவ்வார்த்தையே அவன் இருதயத்திற் சல்லியம்போல் பாய, உடனே உடல் தெரியாமற் போனான் ; அருகிலிருந்தவர்கள் அவனை யுடனே அச்வத்தின் மீதிருந்து இறக்கிக் கீழே அமர்த் தித் தாங்கிக்கொண்டனர். க்ஷணநேரத்திற் கெல்லாம் தன் ஞாபகம் அவனுக்கு வந்தது. தன் அருமைத்தோழனுக்கு என்ன ஆபத்து நேர்ந்துவிட்டதோ, இனி அவனைக் காண் பது எங்ஙனமோ வென்று பலவாறு கவலையுற்றான். ‘நான் வந்துவிட்டதும் நடுவில் ஏதேனும் யுத்தம் நேரிட் டதோ ? அல்லது ஏதேனும் அவனுக்குக் கடும் பிணி

கண்டு பிராணாபாயம் ஸம்பவித்ததோ?' என வினவினான். அதுகேட்டு அவ்வரசர் அனைவரும் தமது காதுகளை மூடிக் கொண்டு, 'நமது வைசம்பாயனனைக் குறித்து இவ்வித அமங்களச் சொல்லை நாம் கேட்கவும் துணியோம்; தேவரீரைப் போலவே வைசம்பாயனனும் நூறாண்டு சுகமாக வாழட்டும்' என்றனர். சந்திராபீடனுக்கு அப்பொழுது ஒருவாறு ஆப்யாயமுண்டாயிற்று. வைசம்பாயனன் உயிருடனிருக்கையில் இவ்விதம் வேறிடத்தில் நிற்கமாட்டானே என்கிற கொள்கையோடு அவ்விதம் வினவவேண்டியதாயிற்றென்றும், அவன் பிழைத்திருக்கிறான் என்கிற செய்தி தன் செவியைக் குளிரச் செய்ததென்றும் கூறி, ஆனால் இப்பொழுது அவன் செய்தியென்ன வென்றும் அவர்களைக் கேட்டான். அதற்கு அவர்கள் கூறிய மறுமொழி பின்வருமாறு:—

"தேவர் மஹாச்வேதையின் ஆச்ரமத்திலிருந்து வந்து விட்டதும், அன்றையதினம் நமது படைப்பிரயாணம் புறப்படவில்லை. ஆனால் மறுநாட் காலையிலே புறப்பாட்டுப் பறை சாற்றப்பட்டது. அப்பொழுது வைசம்பாயனன், 'அச்சோதம் என்னும் பொய்கை வெகு புனிதமானதெனப் புராணம் புகழ்கின்றது; ஆதலால் இதில் நீராடி, மஹிமை தங்கிய மஹேச்வரனையும் பணிந்து விட்டுப் போவோமாக; விண்ணுலகத்தோர் வஸிக்கும் இப்புண்ணிய பூமியை மீண்டும் நாம் எப்பொழுது கனவிலாயினும் காணப்போகின்றோம்!' எனக் கூறி, அச்சோத குளக்கரைக்கு நடந்துபோனார். அவ்விடம் வெகு மனோஹரமாயிருந்ததுபற்றி எல்லாவற்றையும் உற்றுப் பார்த்துக் கொண்டு, எல்லாக் காட்சிகளுக்கும் மேலாக அமைந்திருந்த இலதாமண்டபமொன்றை அவர் கண்டார். அக்காலை இமை

கொட்டலையும் மறந்து அக்கொடி வீட்டையே, நெடுநாட்களாகக் காணப்பெருது மறைந்திருந்த நண்பனைப்போல் பார்த்துக்கொண்டு, எதையோ நினைவுக்குக் கொண்டு வருபவரை யொப்ப, கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, மௌனமாய் நின்ருர். அவர் அவ்வண்ணம் இருப்பதைக் கண்டு, 'வாலிபப் பருவத்தில் இரஸிகர் அதி மனோஹரமான இப்பிரதேசத்தைப் பார்த்துச் சிந்தனை யுறுவதியல்பு. ஆகவே இவ்விடத்தைப் பார்த்து இவருக்கு இச்சித்த விகாரம் உண்டாயிற்று,' என்று நாங்கள் யோசித்து, நெடு நேரம்வரையில் அவரை நோக்கி, வெகு மனோஹரமான பிரதேசத்தை உண்மையில் கண்டுகொண்டோம்; இனி எழுந்திரும். ஸரஸ்ஸில் இறங்கி ஸ்நாநாதிகளை நிறைவேற்றுவோம். புறப்படுவதற்கு அனைத்தும் ஸந்நத்தமாயிருக்கின்றது; ஸேனையனைத்தும் பிரயாணத்திற்கு உம்மையே எதிர் பார்த்து நிற்கின்றது' எனக் கூறினோம். ஆனல் எங்களுடைய சொல் அவர் செவியிலேறவில்லை; அவர் ஒன்றும் பேசாமல் அக்கொடிவீட்டையே கண்கொட்டாமற் பார்த்துக் கொண்டு நின்ருர். பன்முறை நாங்கள் நிர்ப்பந்தித்து வேண்டியதற்கு அவர் கடுமையாக இங்ஙனம் பதிலுரைத்தார் :—'இவ்விடம் விட்டு வருவதற்கு என்னாலாகாது; சந்திராபீடனுடைய பெரிய ஸேனையை அவர் சென்றபிறகு இவ்விடத்தில் தாமதிக்கச் செய்வது உங்களுக்குச் சிறிதும் யுக்தமல்ல; உடனே நீங்கள் ஸேனையுடன் புறப்பட்டுச் செல்லுங்கள்.' என்ருன். 'இங்ஙனம் ஏன் பொருத்தமில்லாமல் பேசுகிறீரே' என்று நாங்கள் துன்பமுற்று, சற்றுக்கண்டித்து இங்ஙனம் உரைத்தோம் :—'இப்படி இங்கு இருப்பது எங்களுக்குத் தகாது தான், தாராபீட தேவனைப்போலவே பூஜிக்கக் கூடியவரான சுகநாஸரிடமிருந்து பிறந்து, சந்திரா

பீடதேவனுடன் ஓரிடத்தில் வளர்ந்த உமக்கோ இப்பொழுது செய்வது வெகு யுக்தம்! சந்திராபீடன் உமக்கு உடன்பிறந்தவர்; அஸாதாரணமான நண்பர்; நமக்கெல்லாம்மேலான அரசனாகவுமிருக்கிறார்; அவர் உமதிடம் ஸேனை முதலியவனைத்தையும் ஒப்படைத்துப் போனார்; அப்படியிருக்க அவரைத் துறந்து இங்கு தங்குவது உமக்கு உசிதமோ? உமதிடம் எங்களுக்குள்ள அன்பை நீர் லக்ஷ்யம் செய்யவில்லையென்றாலும், மனிதஸஞ்சாரமற்ற இவ்வடவியில் உம்மைத் தனித்து விட்டுப் போனோமாயின், சந்திராபீடதேவனுக்கு நாம் என்ன பதிலுரைப்பது? இஃதென்ன மோஹம்? இம்மனோவிகாரத்தை விட்டுப் புறப்படும்; போவோம்' என்று யாம் மொழிந்ததும், சற்று வெட்கத்துடன் நகைத்து, எம்மை நோக்கிப் பின்வருமாறு கூறினார்:—'புறப்படுவதற்கு நீங்கள் எனக்கு இவ்வளவு போதிக்கின்றீர்களே; யான் இவ்வளவுகூடவா அறியமாட்டேன்? அன்றியும் சந்திராபீடனின்றி நொடிப்பொழுதும் வேறிடத்தில் என்னால் இருக்கவும் முடியாதுதான்; ஆகிலும் ஏன் செய்வேன்? ஒரு நொடிப்பொழுதில் எனது வல்லமையெல்லாம் நழுவிவிட்டதே? ஆம்; என் மனம் எதையோ நினைவுக்குக் கொண்டுவருவதுபோல், வேறொன்றிலும் நோக்கம் பெறவில்லை. என் கண்களும் வேறெதையும் காணமுடியாததாயிருக்கின்றது. காலிரண்டும் விலங்கிடப்பெற்றவைபோல் ஓரடியெடுத்து வைப்பதற்கும் இசையாதவைகளாயிருக்கின்றன. இப்பொழுது என் தேகமே எனக்கு ஸ்வாதீனமாயில்லை. அப்பால் நீங்கள் என்னை வலிய அழைத்துப் போக முயன்று நான் இங்கிருந்து நகர்ந்தால், எனதுயிர் நிலைத்திருக்குமென நான் நம்பவில்லை. இங்கிருப்பேனாயின், இதோ எனது இரு

தயத்தினுள் யாதோர் விஷயம் உணரக்கூடாத் வகையில் உழலமிடுகின்றதோ, எதனலேயே யான் இப்பொழுது தாங்கப்பெற்றிருக்கின்றேனே, அதே விஷயத்தினல் யான் உயிர்தரித்திருப்பேன் என எனதெண்ணம். ஆகையால் நிர்ப்பந்திக்க வேண்டாம். நீங்கள் சொல்லுங்கள். சந்திரா பீடனை எப்பொழுதும் தரிசித்து, அதனல் நீங்களாவது பேரின்பம் அனுபவியுங்கள். எனக்கு அவ்வளவு பாக்கியம் இல்லை.' இங்ஙனம் அவர் கூறியதைக் கேட்டு நாங்கள் வியப்புற்று. மீண்டும் பலமுறை வேண்டிக் கேட்டோம். அதற்கு அவர் 'யான் எனது நண்பனை சந்திரா; பீடனது பிராணன்மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். எக் காரணத்தினல் இவ்விடம்விட்டுப் பெயரமுடியாதவனு கின்றேனே, அதைச் சிறிதளவும் யான் அறியமாட்டாத வனு யிருக்கிறேன். மேலும் இச்செய்தியை நீங்களும் கண்முன்னிலையிற் பார்க்கின்றீர்கள். ஆதலால் நீங்கள் போகலாம்' என்றுரைத்துச் சும்மாவிருந்தார். சிறிது நேரஞ் சென்றதும் எழுந்து, ஏதோ தொலைந்து போனதைத் தேடுபவர்போல் இங்குமங்கும் அலைந்தார். பின்பு, நெடு நேரங் கழித்து, மஹத்தான மனக்கவலையோடு பெருமூச் செறிந்து, அந்த இலதாமண்டபத்தில் வந்துட்கார்ந்தார். நாங்களும் அவருக்குத் தெளிவுண்டுபண்ணுவதிற் பிரயாஸை யுடன் அங்கு தங்கி யிருந்தனம். பிறகு இரண்டு யாமம் கழிந்தது. உண்டிவினை முதலியதை நிறைவேற்றுவதன் பொருட்டு யாம் வேண்டினேம்; அதற்கு அவர் 'சந்திரா பீடனுக்கு என் உயிரின்மீது அளவற்ற பாசமாயிற்றே. ஆகவே எனதாவி தானே என்னை விடுவதா யிருந்தாலும், நான் அதை விட்டுவிடத் துணியமாட்டேன்' என்று ரைத்து, நீராட்டஞ் செய்து, காடுதனில் வஸிப்பதற்கேற்பக்

காய் கிழங்குகளைப் புஜித்தார். அதன் பிறகு நாங்களும் உணவருந்திேனும். இவ்வாறகவே அல்லும் பகலும் ஆச்சரிய முற்ற மனத்தினராய், அவரது செய்தியையே சிந்தித்த வண்ணம், மூன்று நாட்கள் ஆங்கு தங்கியிருந்து, அப்பால் நிராசையாகவே நாங்கள் இதோ வந்து சேர்ந்தோம்".

கனவிலும் எதிர்பாராத வைசம்பாயனனது அச்செய்தியைச்செவியுற்று, ஒருமிக்க திகிலும் ஆச்சரியமும் சந்திராபீடன்மனதிற் குடிகொண்டன. இவன் பிறகு இங்ஙனம் யோசிக்கலானன்:—'இத்தகைய வைராக்கியத்திற்குக் காரணம் யாது? எனதிடமும் சிறிதும் தவறுதலைக் காணேன். அரசரனைவரும் என்னைப்போலவே அவனையுந்தாம் பெருமைபடுத்தி வருகிறர்கள். ஸகல ஸுகானுபவங்களிலும் அவனுக்கும் ஏதும் குறைவில்லையே! இத்தகைய சாந்திக்கு இப்பிராயம் உற்றதன்றே! வித்வஜ்ஜனங்களுக்கேற்க கிருஹஸ்ததர்மத்திலும் இன்னும் இவனைச் சேர்க்கவில்லையே! பித்ருக்கள், மானிடர் இவரது கடன்களையும் தீர்க்கவில்லையே!* தன் தாயீ தந்தையர் முதலிய பெரியோர்களுக்குபசாரம் செய்து அவரை இன்புறச் செய்யவுமில்லை, இஃதென்ன இவன் இவ்வாறு செய்தானே!' என்ற இக்கவலையுடன் அதே மரத்தடியில் நெடுநேரம் இருந்து சிந்தித்து, பிறகு ஜலம் நிரம்பிய பொற்குடங்கள் இரு புறமும் அமைக்கப்பெற்ற ஓர் பந்தலினுட்பிரவேசித்து, அழுக்கடைந்த வேஷங்களையுடைய வேலைக்காரரால் வணங்கப்பெற்றவனுய், மெதுவாக வாஸகிருஹமடைந்து, கஞ்சுகம் முதலியவற்றைக்கழற்றி யெறிந்து, சயனத்திற் சாய்ந்தான். மறுபடியும் சிந்தித்தான்— 'தாய் தந்தையரிடம்

* புத்திரனைப் பெருதவன் என்று கருத்து [புத்திரன் பிறந்தால் தேவர், பித்ருக்கள், மனுஷ்யர் இவர்களுக்குத் தர்ப்பணம் முதலிய சடங்குகளைச் செய்து, கடமையைச் செலுத்தி, மானிடர் கடனைத் தீர்க்கின்றனர் என்று சாஸ்தி கூறுகிறது.]

அனுமதி பெறாமலே, மனத்துயரத்தில் அவ்விருவரையும் ஆழ்த்திவிட்டு, புத்திரசோகத்தினால் சோர்வடைந்த சுகநாஸருக்கும் மனோரமைக்கும் ஆறுதல் கூறாது, இவ்விடத்திலிருந்தே யான் வைசம்பாயனனிடம் போவேனாகில், அப்பொழுது நானும் வைசம்பாயனனை அனுஸரித்தவனாகிறேன். அப்படிக்கல்லாமல் மீளவும் மாளிகைக்குத் திரும்பிப்போனேனாயின், அங்கிருந்து விடுதலை பெறமுடியாமற் போகலாம். ஆதலால் என் செய்வேன்? ஆகிலும் மீண்டும் இப்பொழுது வீட்டிற்குப் போவதே நன்று. எனது நண்பன் தன்னையும என்னையும் விட்டு விட்டவனானாலும், நான் ஹேமகூடம் செல்லுவதற்கு வழியுண்டுபண்ணினான்; காதம்பரியினிடம் போக உபாயம் தேடிக்கொண்டிருந்த என்றனக்கு அவன் உதவிபுரிந்தவனேயாவான். ஆகையால் இப்பொழுது வைசம்பாயனனை அழைத்து வரப் போக வேண்டுமென்றால், என்றனை என் பெற்றோராகிலும் சுகநாஸர் முதலியவராகிலும் தடுக்கமாட்டார்' எனத் தீர்மானித்தான். அச்சமயம் வைசம்பாயனனைப் பிரிந்திருத்தல் வியாதி நிவாரணத்திற்கு ஔஷதமுபயோகிக்கும் கஷ்டத்தைப் போல் ஒருவாறு ஹிதமாகவே அவனுக்குத் தோன்றிற்று. சிறிது நேரம் விடாய்தீர்ந்து உணவு முதலியதையும் முடித்துக்கொண்டான். அன்றைய தினம் முடியவும் ஸேனையிளைப்பாறுவதற்காக அவ்விடத்திலேயே தங்கியிருந்து, அன்றிரவு அருணோதயத்திற்கு முன்பே, பிரயாண வாத்தியம் முழங்க, அவ்விடம் விட்டுப்புறப்பட்டு ஸகல ஸேனைகளோடும் உஜ்ஜயினி போய்ச் சேர்ந்தான். இவனுக்கு முன்பு துரிதமாகச் சென்ற சிலரிடமிருந்து வைசம்பாயனனது செய்தி நகரத்தில் எங்கும் பரவிவிட்டது. 'இஃதென்ன விந்தை! இஃதென்ன கஷ்டம்!' என்று ஜனங்கள் ஒருவ

ரோடொருவர் துயரத்தோடு பேசிக்கொண்டிருப்பது இவன் காதில் விழுந்தது. இந்த ஜனங்களுக்கே இவ்வளவு கவலையும் துன்பமும் உண்டாயிருக்கும்போது, பத்து மாதம் சுமந்துப் பெற்று வளர்த்தெடுத்த அவனது மாதாவான மனோரமாதேவியின் மனம் இதையறிந்து எவ்வாறு துடிக்குமோ?’ எனச் சிந்தித்துக்கொண்டே, எதையும் கண்ணெடுத்துப் பாராமல், அரண்மனை வாயிலிற் சென்றதும், தன் பிதா விலாஸவதியுடன் ஆர்ய சுகநாஸனது கிருஹத்துக்குப் போயிருப்பதாகக் கேள்விப்பட்டான். உடனே இவனும் சுகநாஸகிருஹம் சென்றான். இவ்விளம் பிராயத்தில் வைசம்பாயனன் மனிதஸஞ்சாரமற்ற மஹாரண்ணியத்தில் மனம் தடுமாறி நின்றதை நினைந்து, மனோரமை மனமுருகுமாறு அவ்விடத்திற் புலம்புவதைச் செவியுற்றான். அப்பால் தன் தந்தைக்கும் சுகநாஸனுக்கும் முன்னிலையிற் சற்றுத் தூரத்தில் தலைவணங்கிய வண்ணம் இவன் சென்றுட்கார்ந்தான். அரசனும் அவனை நொடிநேரம் போல் நோக்கிவிட்டு, கடுந்துயரத்துடன் மெதுவாகக் கூறலானான்:—‘வத்ஸ! சந்திராபீட!, உனது உயிரைப்பார்க்கினும் உனக்கு உடன்பிறந்தோன்மீதுள்ள மிகுதியான அன்பை யான் அறிவேன். அன்பார்ந்த ஜனத்தினிடமிருந்தே சில ஸமயம் துன்பம் நேரிடுகிறதென்பதைச் சிலர் நம்பார்கள். வைசம்பாயனனது பிறப்பையும், ஒழுக்கத்தையும், அவன் உன்னிடங் கொண்ட அன்பையும் நோக்குங்கால், நாம் கேள்வியுறும் செய்தி அவற்றிற்கு முற்றிலும் மாறுபட்டவையாகத் தோற்றுகின்றன. ஆகவே உனது குற்றத்தினால் தான் இவ்விதம் நேர்ந்திருக்குமென யான் சங்கையுறுகிறேன்’. உடனே இதைக் கேட்டு சுகநாஸனது முகம் கறுத்தது; மன்னவன் அங்ஙனம் மொழிந்ததை மந்திரி பொறுக்கவில்லை; அவன்

உடனே கூறியதாவது:—'மன்னவ! சந்திரனிடம் சூடு தோன்றினால் சந்திராபீடனிடமும் குற்றத்தைக் காணலாம். தன்னைத் தான் அறியாத மித்திரத்துரோஹி வைசம்பாயனனல்லவோ? நற்குணசாலியின்மீது காரணமறியாமற் குற்றம் சாட்டுவதினும் கடுந்துன்பமளிப்பது பிறிதொன்றில்லை. உடலில் இவ்வைசம்பாயனனைப்போல எத்தனையோ கிருமிகளும் உண்டாகின்றன. துராத்மாக்களால் ஸத்குணம் நிரம்பியவர்களும் அவச்சொல்லுக்கு ஆளாகின்றனர். நற்குலத்திற் பிறப்பும், கல்விகளின் கற்பும், செல்வாக்கும் இத்தகைவோர்க்கும் குற்றம் புரிவதற்குக் கருவிளாகின்றனவேயன்றி குணத்திற்கல்ல. சந்திராபீடன் பிறவித்தோழனாயிற்றே யென்பதையும், தான் தாய்க்கு ஒரு பிள்ளையாயிற்றே, அவள் இத்துயரத்தைச் சஹிப்பாளோ வென்பதையும் அவன் யோசிக்கவில்லையே! பிதாவுக்கு ஒரு பிள்ளையாயிருக்க, அவரது அனுமதியைப் பெறாமல் அனைத்தையும் இவ்வயதில் துறந்துவிடுவது எங்ஙனமென்றும் அப்பேதையனுக்குத் தோன்றாமற் போயிற்றே. இவ்வறிவிலாப் பிராணியைக் கிளியைப்போல் அருமையாகப் போஷித்துக் கல்விகளையும் வீணே கற்பித்து வைத்தோம். இவனும் அவ்வறிவில்லாப் பிராணியின் வயிற்றிற் பிறக்க வேண்டியவனே. எங்களுடைய மனத்துயரத்திற்கென்றே எமது வயிற்றில் இவ்வறிவீனன் வந்து தோன்றினான்' எனப் பகர்ந்து, பெருமூச்செறிந்தான்.

அங்கிலைமையிலிருக்கும் சுகநாஸனை நோக்கி, தாராபீடன் கூறியதாவது:—'தாம் மிகப் பெரியோர். தமக்கு எம்மைப் போன்றவர் போதிப்பதென்னும் இவ்விஷயம் தீபத்தினால் சூரியனைப் பிரகாசிக்கச் செய்ய முயல்வது போலாகின்றது. ஆகிலும், நல்லறிஞராயினும் துயரம் வந்து தோன்றினால் மாரிநீரால் மஹாஸரஸ்ஸைப்போல் கலங்கி விடுகின்றனர்

வாலிபப் பருவத்தை விகாரமின்றியே கழித்தவன் புவியில் எவனாயினும் ஒருவன் உளனோ? யௌவனம் வருகையில் பெற்றோரிடமிருக்கும் பிரீதி பெரும்பாலோருக்கு நழுவிப் போகின்றது. மோஹத்தினால் ஏற்பட்ட இந்திரிய விருப்பங்களுக்கு முக்கியாதாரமான வாலிபப் பருவம் உதிக்கையில், அனைவருக்குமே தவறுதல் ஏற்படுகின்றது. சீராட்டி நாம் களிப்புறச்செய்யக்கூடிய குழந்தையை இங்ஙனம் சினங்கொண்டு திட்டினீர்களே! பெரியோர் முகத்திலிருந்து யாதொரு சொல் வெளிவருகின்றதோ, அது சுபம் அல்லது அசுபமாகவிருப்பினும், அவசியம் பாலரிடம் பலித்து விடுமே! மூத்தோர் அளித்த வாழ்த்துக்கள் வரனாக ஆவதுபோலவே, சினங்கொண்டு சொன்ன கடுஞ்சொற்களும் சாபமாய் முடிகின்றனவே. ஆனதுபற்றி, வைசம்பாயனனைக் குறித்துக் கோபாவேசத்தினால் பெரியோரான தாம் இவ்வாறு கடுமையாகக் கூறியதைக் கேட்டு என் மனம் துன்புறுகின்றது. தான் வளர்த்த மரங்களின்மீதும் பிரீதியுண்டாகின்றதே! ஆகையால், வைசம்பாயனன்மீது உண்டான இக்கடுங்கோபத்தை ஒழித்து விடுவீர்களாக. அவன் தகாத காரியம் எதையும் செய்தவனல்லன். அவன் அனைத்தையும் துறந்து இருக்கின்றான் என்னும் இவ்விஷயத்தைக் காரணமறியாது குற்றமென யாம் ஏன் கூறவேண்டும்? நாம் குற்றமென நினைப்பதே ஒரு ஸமயம் குணமாகவும் இருப்பதுண்டு. இவன் செய்கது இவன் வயதுக்கு அநுசிதமென்பது உண்மையே; ஆகிலும் இவனும் இவ்விதம் நடந்து கொள்வதற்கு மூலகாரணம் என்னவென்று நாம் தீரவும் விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகவே வைசம்பாயனனை நாம் அழைத்துவருவோமாக.'" தாராபீடன் இப்படிக் கூறியதும், மறுபடியும்

சுகநாஸன், 'தமது இயற்கையான கம்பீரத் தன்மையினாலும், வாத்ஸல்லியத்தினாலும் தேவர் இவ்வாறு மொழிகிறீர்கள்; இளவரசை விட்டுவிட்டு, தன் மனம் போனபடி நடந்துகொண்டு, நொடிநேரமேனும் மற்றோரிடத்தில் தங்குவதென்றால் இதைவிட தகாத காரியம் வேறொன்றும் வேண்டுமோ?' என மொழிந்ததும், சந்திராபீடன், சுகநாஸனை நோக்கி மெல்ல மெல்ல இங்ஙனம் விண்ணப்பம் செய்தான்:—

'ஐயன்மீர்! வைசம்பாயனன் வாராமலிருப்பது எனது குற்றத்தினாலல்லவென்பதை, வாய்மொழியின்றியே அறிந்திருந்தும், தந்தை என்னவோ இவ்வாறு கருதுகின்றனர். அது எவ்வாறாயினும் அக்குற்றத்தை நானே ஏற்றுக் கொள்கிறேன். இக்குற்றத்திற்காக வைசம்பாயனனை அழைத்துவரும் பொருட்டுப் போவதற்கு உத்தரவு பிறப்பிப்பதாகும் பிராயச்சித்தத்தைத் தாம் தந்தையைக்கொண்டு விதித்தருளவேண்டும். குதிரைகளுடன் ஏகும் என்றனக்கு, முன்பே பார்த்திருக்கும் பாதையிற் போவதில் ஆயாஸம் சிறிதுமிராது. யான் பெரியதோர் ஸேனையை அவனுக்குத் துணையாகவும், அதற்கு அவனைத் தலைவனாகவும் வைத்து விட்டுத் துரிதமாக வந்து சேர்ந்தேன்; அவனும் பெருத்த ஸேனையோடு எனக்குப் பின்னாலேயே மெதுவாக சிரமமின்றி வருகிறான் என்கிற கொள்கையுடனே வந்தேன். பிறந்தது முதலாக என்றைக்காவது, எக்காரியத்திலாவது வைசம்பாயனனை விட்டு நான் பிரிந்ததில்லையே. தசபுரசத்திலிருந்தே இவனது செய்தியைக் கேள்விப்பட்டவுடனே அவனிடம் ஓடி அவனையழைத்துவர ஆவலேற்பட்டும், பெரியோரது உத்தரவைப் பெறாமல் அவ்விதம் போவது உசிதமல்லவென்று யோசித்தே நான் இங்கு வந்தேன். உடனே அங்கிருந்து நான்

போகாமலிருந்தது ஒருக்கால் தவறுதலானால் அதையும் க்ஷமி த்தருளக் கோருகிறேன்.' உடனே சுகநாஸன் 'இஃவாசு அவ் விடம்செல்லுவதாகச் சொல்லுகிறானே; ஆண்டவன் ஆஞ் ஞை யென்ன?' என்று மெதுவாக வினவ, தாராபீடன் கூறிய தாவது :—

'ஐய! நமது மகனுக்கு இப்பொழுதே மனைவியைத் தேடி மணம் புரிவோம் என நினைத்தோம்; அதற்குள் ளாகவே இதோ வேறோர் வெறுப்பான விருத்தாந்தத்தை, விபரீதத் தன்மையுள்ள விதி நடுவில் நிகழச் செய்ததே! குமாரன் கூறுவது உண்மையே. அவனை அழைத்து வருவதில் வேறொருவனும் திறமையுள்ளவனாகான்; அவனின்றி இவனும் இங்கு இருக்கமாட்டான். ஆகையால் அவசியம் இத்துயரக்கடலை இவ்வோடத்தைக் கொண்டே கடக்கவேண்டும். வைசம்பாயனனைத் திரும்ப அழைத்து வருவதன்பொருட்டு, விலாஸவதீதேவியும் இவனை அவசியம் அனுப்புவள் என்றே நான் நிச்சயமாய் நினைக்கி றேன். ஆனால் வத்ஸன் வெகு தூரம் போக வேண்டியிருக் கின்றமையால், ஜோதிடகலைஞருடன் ஆலோசித்து, இவன் ஏகுவதற்கு ஏற்ற நாளையும், இலக்கினத்தையும் நீங்களே நிச் சயித்து, புறப்படுவதற்கேற்ற ஏற்பாட்டையும் செய்து விடுங் கள்' என்று மொழிந்து, 'வத்ஸ! நீயே சென்று மனோ ரமா தேவியினிடமும், உன் மாதாவினிடமும் சொல்லி விடை பெற்றுக்கொள்வாயாக' எனக் கூறிவிட்டு, தன் மாளிகைக்குச் சென்றான். சந்திராபீடன் அந்தப்புரம் சென்று, அவ்விரு வரையும் வணங்கிவிட்டு, விலாஸவதியின் பக்கத்திலுட்கார் ந்து, மனோரமையை நோக்கி 'அம்மா! பொறுத்துக்கொள்ள வேண்டும். தந்தை வைசம்பாயனனைப் போய் அழைத்து வர உத்தரவளித்துவிட்டார்; நீங்களும் தடை சொல்லக்

கூடாது'. எனக்கேட்டுக் கொண்டான். அதற்கு மனோரமை இங்ஙனம் பிரதிவுரைத்தாள் :—'அப்ப! நீயே செல்லுவதாகச் சொல்லி, என்னைத் தேற்றுகிறாயா என்ன ? என்றனக்கு உனதிடமேனும் அவனிடமாயினும் யாது வேற்றுமை? கன்னெஞ்சுக்காரனை அவனொருவனைக் காணாமலிருப்ப தொன்று; நீயும் சென்றுவிட்டாயாகில், எவரைக் கண்டு நாம் மனம் தேறுவது? ஆகையால், வத்ஸ! நீ போவது தகாது. உங்கள் இருவரில் ஒருவனாலேயே, நாங்கள் இருவரும் புத்திரப்பேறு பெற்றவராவோம்.' விலாஸவதீ அது கேட்டு வெகு தீரத்தன்மையுடன் இங்ஙனம் உரைக்கலாயினள் :—'எனதன்பார்ந்த தோழி! நீ மொழிந்தவண்ணம் உனக்கும் எனக்கும் இஃது இவ்விதமே தான். ஆனால் இவன், வைசம்பாயனனை விட்டிருக்கத் தகுமோ? இவனை நீ மறுக்கக் கூடுமோ? மறுக்கப்படினும் இவன் நிற்கவே கூடாது. தந்தையும் இதை யெண்ணியே இவன் போவதை அனுமோதித்ததாகக் கருதுகின்றேன். இவன் செல்லட்டும். சில நாட்களளவும் இவ்விருவரையும் காணாததால் ஏற்படும் கிலேசங்களை யாம் இருவரும் சேர்ந்து அனுபவிப்பதும் நன்று; வைசம்பாயனனது வதனத்தைக் காணாதால் கடுந்துயாமுற்று ஏங்கித் தவிக்கும் சந்திராபீடனது முகத்தைத் தினந்தோறும் காண்பதோ துன்பத்திலும் துன்பம். ஆகையால் எழுந்திரு; குழந்தையையனுப்ப ஏற்பாடுசெய்வோம்.' இவ்விதம் சொல்லிக் கொண்டே, மனோரமையைக் கையிற் பற்றிக்கொண்டு, சந்திராபீடனால் பின்தொடரப்பட்டவளாய், தனது வாஸகிருஹம் சென்றாள். சந்திராபீடனும், அன்னையின் அருகிற் சற்று நேரம் ஸல்லாபம் செய்துவிட்டுத் தன் மாளிகையேகினான். ஆங்கு உடைகளைக் களைந்தான். பிரயாணத்திற்காக அவன் இருதயம் பட

படத்தது. உடனே சோதிடரை அழைத்து, ஆர்ய சுகநாஸ ராவது தன் பிதாவாவது அவர்களை வினவினல், தாமத மின்றி தனக்குப் பிரயாணம் ஏற்படுமாறு ஓர் தினத்தைக் குறிப்பிட்டுச் சொல்லிவிடும்படி அவர்களுக்கு இரஹஸ்யமாய் ஆஞ்ஞாபித்தான். அவர்கள் 'தேவ! கிரஹங்கள் எல்லாம் இப்பொழுது இருக்கும் வகையை நோக்குங்கால், இச்சந்தர்ப் பத்தில் தேவரீர் பிரயாணம் போவதே பிரசஸ்தமல்லவென் பது எமது கருத்து; அப்பால், அரசாது இச்சையே காரிய கௌரவத்தை அனுஸரித்து, பொருந்திய காலமாம்; அப் பொழுது தினத்தை நிரூபிக்கவேண்டிய விஷயமே அவசிய மில்லை. காலத்திற்கு அரசரே காரணமாகின்றனர். எந்த வேளையில் மனம் தெளிந்து களிப்புற்றிருக்கின்றதோ, அது வே பணிகள் அனைத்துக்கும் பொருந்திய வேளையாகும்' என விண்ணப்பம் செய்யலாயினர். பிறகு சந்திராபீடன் மறுபடியும் 'தந்தை இங்ஙனம் ஆஞ்ஞாபித்தனரே என்று சொல்லுகிறேன்; இல்லையேல், காரியத்திற் கருத்துள்ள எம் போன்றவருக்கு வெகு துரிதமாகச் செய்யவேண்டி நேரிடும் வேலைகளில் நாளைத் தேடி நிரூபிப்பதென்பது எவ்விதம் முடி யும்? ஆதலால், நாளைய தினமே பிரயாணம் ஸித்தமாகுமாறு மொழிந்திடுங்கள்' எனக் கூறி, அத்தினத்தை வெகுப் பிரயா ஸத்துடன் கழித்தான். சந்திராபீடன் அன்றைய இரவிற் சந்திரோதயமானதும், விலாஸவதியினிடம் வந்தனம் செய்யப் போனன். அவள் அப்பெழுது அவனை நோக்கி துயரத்தாலும் ஆவலாலும் மனம் தடுமாற இங்ஙனம் கூறினள் :—'அப்ப! மடியிலேந்தித் தாலாட்டின அருமைப் புதல்வன், புதிதாகப் பிரயாணம் போகையில் இருதயம் பெருந்துயர முறுவதென்பது உசிதமே; இப்பொழுது உனது பிராயணத்தினல் ஏற்படும் மனத்துயரம்

போல், உன் முதற்பிரயாணத்திலும் உண்டான தில்லை. உனக்கு மங்களச் சடங்குகளை நிறைவேற்றுவதற்காகத் தேற்றிக் கொண்டபோதிலும், என் சித்தம் சிறிதும் ஸமாதானம் பெறவில்லையே! எனது இம் மனத் துயரத்துக்கு நிமித்தம் என்னவென்பதையும் யான் அறியேன்! ஆகிலும் வைசம்பாயனனை அழைத்துவரப் போகும் உன்னைத் தடுப்பதற்கு எனது நா வெழும்பவில்லை. இருதயமோ, உனது பிரயாணத்திற் பிரியப்படவே யில்லை! இவ்விதம் யான் துன்புறுவதை அறிந்தும், முன்போல இப்பொழுதும் எவ்விடத்திலாயினும் நீடித்தகாலம் நீ நின்றுவிடக் கூடாது' என்றாள். அதற்கு அவன் 'அம்மா! அப்பொழுது திக்விஜயத்தின் பொருட்டு அவ்விதம் தாமதிக்கவேண்டி யிருந்தது; இப்பொழுதோ, அவ்விடம் போவதற்கு வேண்டுவதெவ்வளவோ, அவ்வளவுதான் தாமதம். ஆகையால் நீ வருத்தமுற வேண்டாம்' என்று விஞ்ஞாபனம் செய்தாள். பிறகு அவள் சந்திராபீடனை ஆலிங்கனம் செய்து, உயிரை விடுவதுபோல அவனை விடுத்தனள். அப்பால் பிதாவினிடஞ் சென்று, தந்தையின் தாள்களைப் பணிந்தான். அவனைப் பிதாவும் பார்த்து, மனக்கலக்கத்துடன் மொழிந்ததாவது :—'குழந்தாய்! தந்தை உன்மீது குற்றம் சுமத்தினரோ யென்று நீ வருந்தாதே. ஒழுக்கப்பயிற்சி செய்வித்தது முதல் நன்கு எம்மால் பரீக்ஷிக்கப்பட்டு வருகின்றனை. உனது நற்குணங்களைக் கண்டு இராஜ்யபாரத்தை உனதிடம் ஏற்றிவைத்தேனல்லாது, புதல்வனென்னும் அபிமானத்தினால் அன்று. இவ்விராஜ்யமானது பெரும் பலம் பெறாதவனிடமும், அடைக்கலம் புகுந்தோரை ஆதரிக்காதவனிடமும் அடி வைப்பதில்லை. எவனொருவன் தன் குணங்களாகும் கயிறுக

ளால் வலிய இழுத்து கட்டுப்படுத்துவதில் திறமைசாலியோ, அவனிடந்தான் இந்தச் செங்கோல் நிலைபெறும். இதைக்கொண்டே உனதிடம் குற்றம் சுமற்ற அவகாசமில்லையென்பதை நான் கூறாமலே நீ யறியலாம். உலகத்தோரைத் திருப்திசெய்துவைக்க நீயேதான் இனி முயலவேண்டும்; நான் தவறுதலின்றி வெகு காலம் இப்பதவியை வகித்துவிட்டேன்: பேராசையால் பிரஜைகளைப் பீடிக்கவில்லை; கர்வத்தினால் குருமார்களுக்கு வெகுட்டலை யுண்டாக்கினேனில்லை; சிற்றின்பப் பற்றினால் பரலோக வாழ்க்கையையும் பாழாக்கவில்லை. நீ பிறந்ததால் யான் இன்னும் கிருதார்த்தனாய்விட்டேன். இனி எனக்குள்ள கோரிக்கை இரண்டு; ஒன்று உனக்கு மணம் புரிவித்து முழு இராஜ்யத்தையும் உனதிடம் ஏற்றிவைத்தல்; மற்றொன்று இராஜருஷிகள் சென்ற வழியைப் பின்பற்றி சாந்தி மார்க்கத்தைத் தேடுதல். இக்கோரிக்கை என் மனதில் உதித்ததும் வைசம்பாயனனுடைய இச்செய்தியொன்று வந்து தோன்றியதே! இஃதென்ன ஆச்சரியம்! வைசம்பாயனனெங்கே! இந்நடத்தை யெங்கே! நீ இப்பொழுது செல்லுகின்றனையாயினும், எனது கோரிக்கைகள் சீக்கிரம் நிறைவேறுமாறு நடந்து கொள்வாயாக' என மொழிந்து, தாம்பூலமளித்துத் தன் தநயனை அனுப்பினான். அப்பால் சுகநாஸன் முதலியவர்களிடமும் முறைப்படி விடைபெற்றுக்கொண்டு பிரயாணத்துக்குச் சன்னாஹம் செய்தான்.

பிரயாணத்திற்கு ஆயத்தமாயிருந்த சந்திராபீடனுக்கு எதிரில் இந்திராயுதம் கொண்டுவந்து நிறுத்தப்பட்டது. அக்குதிரைச் சற்று தூரம் விலகிப் போய், பிரயாணத்தில் உத்ஸாஹமற்று ஏதோ ஏங்கி நின்றது. ஆகிலும் அதையெல்லாம் இலக்ஷ்யம் செய்யாமல், அதன் மீதேறிக்கொண்டு

வேகமாய் வெளிக் கிளம்பினன். சிப்ராநதியைத் தாண்டி, ஆறு கிரோச தூரம் சென்று, ஜலம் நிரம்பி புற்கள் செழித்துள்ள ஓரிடத்தில் அன்றிரவு தங்கினன். இருதயம் துடி துடிக்க இரவும் சிறிது கழிந்தது; உதயமாவதற்கு முன்பே ஸேனையோடு எழுந்து, எவ்வெவற்றையோ எண்ணமிட்ட வண்ணம், பசியின் பாதையையும், தாஹத்தினுலுண்டான துன்பத்தையும், வெயிலின் வெட்கையையும், விடாயின் கொடுமையையும், கண் விழித்தலின் கஷ்டத்தையும் சிறிதும் கருதாமலே, அல்லும் பகலும் அப்பால் அவன் பிரயாணம் செய்தான். இங்ஙனம் இவன் சவாரி செய்துவருகையில், கடக்க வேண்டிய வழி வெகு நீண்டதாயிருந்ததால், நடுவழியிற்றனே—மார்க்கத்திற்குக் குறுக்கே கிருஷ்ண ஸர்ப்பம்போல் துரிதமாகச் செல்லுவதற்குத் தடையுண்டு பண்ணுவதாய்—மாரிகாலம் வந்து சேர்ந்தது. அக்காலே, நீர்கொண்ட மேகங்கள் திசைகள் தோறும் கிளம்பி காரிருளைப் பரப்பின: கருங்குவளைமலருக்கொப்பான இவனது கண்களிலிருந்து கண்ணீரும், திரளான கார்முகிலிலிருந்து தண்ணீரும் ஒருங்கே சொரிந்தன. அவன் வெகுதீரனயிருந்தும், காதம்பரீவிஷயமான காதலை அம் மாரிகாலம் இவனிடம் இன்னும் கரைபுரண்டதாகச் செய்து விட்டது. அக் கடுமழையிலும் இவ்வாசையினலேயே கொடிகோழும் நிற்காமற் பிரயாணம் செய்தான். கேவலம் உயிர் தரிப்பதற்காக ஒருவாறு உணவுண்டு இம்மாரி காலத்தில் பகற்பொழுதில்மட்டும் பிரயாணம் பண்ணினன்.

இங்ஙனம் படையுடன் போய்க்கொண்டிருக்கையில், இன்னும் செல்ல வேண்டிய மார்க்கத்தில் மூன்றிலொரு பங்கு மிகுந்திருக்கையில், மேகநாதன் இவனுக்கு எதிரில் திரும்பி வந்து கொண்டிருந்தான் சந்திரா

பீடனைக் கண்டு அவனும் சற்றுத் தூரத்திலிருந்தே வந்தனை செய்தான். அவனைச் சந்திராபீடன், 'முதலிற் பத்திரலேகை க்ஷேமமாகச் சென்ற செய்தியை வினவுதல் நிற்க, வைசம்பாயனனது விருத்தாந்தத்தையே வினவுகின்றேன். அச்சோதகுளக்கரையில் நீ வைசம்பாயனனைக் கண்டனையோ ? அவனது மற்றச் செய்திக ளென்ன ?' எனக் கேட்டான. அவன் மறுமொழி கூர்ந்ததாவது:—'ஆண்டவ ! அச்சோதஸரஸ்ஸின் பக்கமாய் வைசம்பாயனன் போனான் என்கிற வார்த்தையே வழியில் என் காதில் விழவில்லையே ! நாங்கள் அச்சோதத்திற்குப் போகு முன்பே, பத்திரலேகையும் கேயூரகனும் வேறு சில பிரயாணிகளும், மாரிகாலம் துவக்கிவிட்டதால் உங்களைப் பெற்றோர்கள் ஹேமகூடம் போகாமல் தடுத்து விடுவார்களோவென யோசித்தார்கள். ஹேமகூடஞ்சென்ற பிறகு நான் திரும்புவதைவிட முக்காற்பங்கு வழியிலேயே என்னைத் திருப்பி உமரிடம் அனுப்புவது நலமென்று அவர்கள் கருதினார்கள். ஆகவே தங்களைத் துரிதப்படுத்த இதோ நான் திரும்பிவந்துகொண்டிருக்கிறேன்.' மீண்டும் சந்திராபீடன் 'இருக்கட்டும் ; பத்திரலேகை இத்தனை நாட்களிற் போய்ச் சேர்ந்திருப்ப ளென்று நீ நினைக்கிறாயா ?' எனக் கேட்டான். அதற்கு அவன் 'ஆம்; நடுவழியில் தடையேதும் ஸம்பவிக்காமலிருந்தால் அவள் அவ்விடம் போய்ச் சேர்ந்திருப்பது திண்ணம்' என்றான். எற்கனவே மிகக் கவலையுற்ற இவன் மனம் அம் மாரிகாலத்துத் தோற்றத்தால் முற்றிலும் மயங்கிப்போயிற்று. பார்க்கப்படுபவை யனைத்தும் இன்பத்திற்குப் பதிலாகத் துன்பந்தருபவையாகத் தோற்றின. இவ்வின்பமற்ற நிலைமையோடு இவன் அவ்வச்சோதஸரஸ்ஸைப் போயடைந்தான். அம் மஹத்தான ஸரஸ் முன்போலவே மனோஹரத்

தன்மை பொருந்தியதாயிருந்தும் இவன் கண்களுக்கு ஏதும் களிப்பூட்டவில்லை.

ஆங்கு அருகிற் செல்லுகையில், குதிரைப்பாகரனைவரையும் நோக்கி, 'ஒருக்கால் இவன் வெட்கத்தினால் நம்மைக் கண்டு மறைந்து வேறிடம் போய் விடுவான்; ஆகையால் நீங்கள் குளத்தைச் சுற்றி நாற்புறமும் ஜாக்கிரதையாய் இருங்கள்' என ஆஞ்ஞாபித்து, தானும் அச்வத்தின்மீது இருந்தவாறே, தேடிக்கொண்டு நாற்புறமும் திரியலானான். ஓரிடத்திலும் அவன் இருந்த குறி எதுவுமே காணப்படவில்லை; பிறகு, இங்ஙனம் அவன் சிந்திக்கலானான்:—'பத்திரலேகையினிடமிருந்து எனது வரவை அறிந்து, முன்னமே இவன் இவ்விடம் விட்டுச் சென்றிருக்கவேண்டும்; ஆகையினாற்றான், இருந்த குறி எதுவும் காணப்படவில்லை. வைசம்பாயனனைப் பாராமல் இவ்விடம் விட்டு ஓடி வைப்பதற்கும் யான் துணிவு பெறவில்லையே. ஒருக்கால் மஹாச்வேதையும் இச்செய்தியை அறிந்தவளாகவே இருக்கக்கூடுமாதலால், அவளைப் போய்ப் பார்ப்போம்; அப்பால் ஏற்றவாறு செய்வோம்' எனத் தீர்மானித்து, மஹாச்வேதையின் ஆச்ரமம் சென்றான். ஆங்கு குஹையின்வாயிற்படியிலேயே ஒரு கற்பாறையின் மீது தாளிகையினால் தாங்கப்பெற்று முகம் கவிழ்ந்த வண்ணம் மஹாச்வேதை உட்கார்ந்திருந்தாள். காதம்பரீ தேவிக்கு ஏதேனும் அநிஷ்டம் ஏற்படாமலிருக்க வேண்டுமே; இல்லையேல், எனது வரவைக் கண்டு மஹாச்வேதை மனங் களிக்கவேண்டியிருந்தும் இவ்விதம் இருக்கிறாளே!' எனச் சங்கித்து, மனக்கலக்கத்தினால் தட்டுத் தடுமாறிக்கொண்டு அருகிற் சென்று, 'இஃதென்ன?' எனத் தாளிகையைக் கேட்டாள். பிறகு மஹாச்வேதையே துயரவெழுச்

சியை அடக்கக்கூடாதவளாயிருந்தும், தொண்டை தழு தழுக்க, மறுமொழி யுரைத்தாள்:—"மஹாபாக்கிய சாலியான மன்னவ! இவ்வறிவிலா மங்கை என்னென்று அறிவிக்கட்டும்? ஆகிலும் கேட்பீராக. நீர் சென்ற செய்தியைக் கேயூரகன் கூறக் கேட்டு, மனமுடைந்தவளாய், 'சித்திராதனது கோரிக்கையையும் நிறைவேற்றினேனில்லை; நமது கிருஹத்திற்கு வந்த சந்திராபீடனுக்கும் உதவியேதும் புரிந்தேனில்லை; பிரிய ஸகியான காதம்பரியின் இருதயத்திற்கு இன்பனான மணாளனைக் கூட்டி அவள் களித்திருப்பதையும் யான் கண்டவளல்லள்' என நினைத்துப் பன்மடங்கு அதிகமாய் வைராக்கியம் ஏற்பட்டு, மீண்டும் கடுந்தவம் புரிவதெனத் தீர்மானித்து, இவ்விடம் வந்தேன். அப்பொழுது ஓர் பிராம்மணவாலிபன் இவ்விடத்தில் உலாவி வருவதைக் கண்டேன். அவன் உம்மைப்போன்ற வடிவம் வாய்ந்தவனாகவும், ஆனால் எதையோ பறிகொடுத்து விட்டவன் போலவும் தோற்றினான். வேறெதிலும் நோக்கமில்லாமல் மெதுவாக என் ஸமீபம் வந்தான். அவன் என்னை அதற்கு முன் கண்டிராமலிருந்தும் எதையோ நினைவுக்குக் கொண்டுவருபவன் போல என்னை உற்று நோக்கி, இங்ஙனம் கூறினான்:—'ஓ ஸுந்தரி! பிறப்புக்கும் பிராயத்திற்கும் வடிவத்திற்கும் ஏற்றவாறு நடந்துகொண்டால் எவரும் உலகத்திற் பழிக்குப் பாத்திரமாகார். இதுவும் விதியோ! மல்லிகை மலர் போன்ற உனது இம்மேனியை அனுசிதமாய் இக்கடுந்தவத்தினால் துன்பப்படுத்துகின்றனையே! இவ்வுலக சுகங்களை முதலில் அனுபவித்து, பிறகு பரலோக ஸம்பந்தமான தத்துவங்களில் மனதைச் செலுத்துவது உசிதம். இவ்வளவு ரூபவதியான நீயும் தவம் புரிந்து துன்புறுவதை நோக்க யான் வருந்துகிறேன்! உன்னைப்போன்றவர் இவ்

வுலகத்து இன்பங்களிற் பராமுகமாய்விட்டால், அப்பால் இம்மன்மதனென்பவன் இருப்பதற்குப் பலன் தான் யாது'? அவன் அவ்வாறுரைத்ததும், நான் ஏதும் கூறாமலே, வேறிடஞ் சென்றேன். பிறகு தேவதார்ச் சனைக்காகப் பூப்பறித்துக்கொண்டு தாளிகையை அழைத்து, 'இதோ எவனோ ஒரு வாலிபன் பேச்சிலும் பார்வையிலும் வேறுமாதிரியாய் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது; ஆதலால் மறுபடியும் இவன் இங்கு வாராவண்ணம் தடுத்து விடுவாயாக., மறுமுறை இங்கு வருவானாகில், அப்பொழுது உண்மையில் இவனுக்குத் தீங்கு நேரிடுமென்று அறிவித்து விடு' என மொழிந்தேன். இவ்வாறு தடுக்கப்பட்டும், அவனுக்கிருந்த பற்றுதல் மாறவில்லை. சென்ற சில தினங்களுக்கு முன், ஒரு நள்ளிரவிற் சந்திரனை யான் உற்று நோக்கி, 'இந்த சந்திரன் உலகமனைத்துக்கும் ஆனந்தமளிக்கும் அமுதமயமான தன் கதிரொளிகளினூடே என் மணாளனையும் பொழிவனோ?' எனக் கோரியவாறு, போற்றக்கூடிய என் புண்டரீக நாதனைத் தியானித்துக் கொண்டிருந்தேன். அவ்விரவு வெண்ணிலாவினால் பகலைப்போலவே வெகு பிரகாசமா யிருந்தது. அதே வாலிபன் சற்றுத் தூரத்தில் காலடியோசை கேளாது வெகு மெதுவாக என்னை நோக்கியே வருவதைப் பார்த்தேன். பாவம் புரிந்தால் பரலோகத்திற் கடுந்தண்டனை யனுபவிக்க நேரிடுமென்பதையும், அவன் அறியாதவனாய் மன்மதவிகாரத்தினால் உன்மாத நிலைமையைப் பெற்றவனாகத் தோற்றினான். யான் என் தேகத்தில் அபிமான மற்றவள்; ஆகிலும் அவன் வருவதைக் கண்டு என் உடல் நடுங்கிற்று. 'ஓகோ! இவன் மன்மதவிகாரத்தினால் பித்துப் பிடித்தவன்; இவன் வலிய வந்து என்னைப்

பரிசித்துவிட்டால், அப்பால் எனது இவ்வுடலை உயிருடன் வைத்திருக்க முடியாது; அப்படியானால், புண்டரீக தேவனை மறுபடியும் காண்போமென்கிற ஆசையுடன் இவ்வளவு நாட்களாக நான் இத்தேகத்தைக் காப்பாற்றி வந்தது வீணாகவல்லவோ ஆய்விடுகிறது?' என்று நான் எண்ணமிட்டேன். இதற்குள் அவன் எனக்கு அருகில் வந்து, 'சந்திரமுகி! மன்மதனும் இச்சந்திரனும் சேர்ந்து என்னை இதோ மாய்க்க முயலுகின்றார்கள்! ஆதலால் உன்னை அடைக்கலம் புகுந்தேன்! நான் வேறு கதியில்லாதவன்! எனது உயிர் இப்பொழுது உன் வசத்திலிருக்கின்றது! என்னைக் காப்பாற்றுவாயாக! அடைக்கலம் புகுந்தோரை இரக்ஷிக்கவேண்டுவது தபஸ்விகளுக்கும் தர்மமே!' என்றுரைத்தான். நானும் அது கேட்டு, ஆவேசம்கொண்டவளைப்போல், மிகச் சினங்கொண்டு, 'அடா பா...! என்னை நோக்கி இங்ஙனம் உரைக்கும் உனது தலையிற் பேரிடி விழாதோ? நாவும் அறுபடாதோ? பகவன்! பரமேச்வரா! இவன் மனிதனாயிருந்தும் தவறுதலாகக் காமவிகாரம் கொண்டு கேவலம் கிளிப்பிள்ளையைப்போல் இவ்விதம் பகுத்தறிவின்றி பேசப்புகுந்தானாதலின், பிறருக்குத் தீமையிழைக்காவண்ணம் இவன் அக்கிளிப் பிறப்பாகப் போகக் கடவன்; என் நாதனான புண்டரீகனைத் தரிசித்தது முதல் மற்றொரு மனிதனை நான் மனதாலும் ஸ்மரித்ததில்லையென்பதுண்மையாயின், என் சொல் பலிக்க வேண்டும்' என்றேன். யான் இவ்வாறு சொல்லி முடித்ததும், அவன் உடனே வேரறுப்பட்ட விருக்ஷம்போல் நினைவற்று நிலத்தில் வீழ்ந்தான். அவன் உயிர் துறந்து சாய்ந்ததும், அவனைச் சேர்ந்த பரிஜனம் ஓடி வந்து கூக்குரலிட்டுப் புலம்பினர். அப்பால் அவர்களை யான் விசாரித்ததில், அவ்வாலிபன் உமது

நண்பனெனத் தெரியவந்தது" என்று மொழிந்து, வெட்கத்தினாலும், மனத்துயரத்தினாலும் முகம் குனிந்தவண்ணம் தாரைதாரையாகக் கண்ணீரைச் சொரிந்து அழுதாள். சந்திராபீடன் வெகு பொறுமையுடன் செய்திகளைக் கேட்டு, இறுதியில் துக்கத்தைத் தாங்கவியலாதவனாய், 'அம்மணி! நான் துர்ப்பாக்கிய சாலி! நீங்கள் பெரு முயற்சி செய்தும் காதம்பரீதேவியை யுபசரிக்குமின்பத்தை நான் பெறக் கூடவில்லை; மறுபிறப்பிலேனும் எனக்கு அதைச் சம்பாதித்தருள வேண்டும்' என்று கூறியவாறிருக்க, இயல்பாகவே வெகு கோமளமான அவனது இருதயம் பிளவுற்றது. உடனே, தாளிகை பரபரப்புடன் அவனைத் தாங்கியவளாய், 'இராஜகுமாரி! வெட்கமுறுகிறாயென்னை? தேவன் சந்திராபீடன் கழுத்துச் சாய்ந்து தலையைத் தாங்கக் கூடாதவராயினர்! அசைத்தாலும் நினைவுபெற வில்லையே! இருதயம் அசைந்து மூச்சுவிடுவதையும் காணேண்! ஆ! தேவ! சந்திர வடிவம் வாய்ந்த சந்திராபீட! காதம்பரீப்ரிய! உமது சரீரத்தைத் துறந்து விட்டீரே?' எனக் கதறினாள். மஹாச்வேதையும் சாய்ந்துபோன சந்திராபீடனது முகத்தைக் கண்கொட்டாமல் நோக்கி அசைவற்றுப்போனாள். அப்பால் 'அடி பாவி! துஷ்ட தாபஸி! நீ என்ன செய்தாயடி! உலகத்துப் பீடைகளைப் போக்கும் தாராபீடனது குலம் உன்னால் அழிந்துவிட்டதே!' என்று தன்னைத் தானே பழித்துக் கொண்டு பலவாறு புலம்பினாள். பிறகு இந்திராயுதமும் சந்திராபீடனது முகத்திலேயே திருஷ்டி வைத்ததாய், குதிரைத் தன்மையை விட்டுவிடப் போவதுபோல் ஏங்கியும் ஒங்கியும் கனைத்தது. காதம்பரியும், சந்திராபீடன் வருவதாகப் பத்திரலேகை கூறக் கேட்டு, தாய் தந்தையரது முன்னிலையில் மஹாச்வேதையைக் காணப்போவதாகக் கூறிவிட்டு, சிருங்கார

வேஷம் பூண்டு, கேயூரகன் முன் சென்று வழிகாட்ட, பத்தி
ரலேகையின் கரத்தைப் பற்றிக்கொண்டு, மதலேகையுடன்
ஸல்லாபம் செய்தவாறு, வழிநடக்கும் வருத்தத்தையும் அறி
யாதவளாய், சந்திராபீடனது தரிசனத்தின்பொருட்டு
அப்பொழுதே அவ்விடம் வந்து சேர்ந்தாள்.

வந்ததும், அமுதத்தைக கடைந்தெடுத்த கடலைப்போல
வும், பூந்தாது களைந்து நின்ற பங்கயம் போலவும் உயிர் துற
ந்திருக்கும் சந்திராபீடனைக் கண்ணுற்றாள். 'ஆ ஆ! இஃ
தென்ன!' எனத் தலை கவிழ்ந்தவண்ணம் தரையில் விழுந்
தாள். மதலேகையும் கதறியழுது கொண்டே அவளைத்
தாங்கிக் கொண்டாள். பத்திரலேகையும் காதம்பரியின் கர
த்தை விட்டு விட்டு, நினைவு தடுமாறி வீழ்ந்தனள். சிறிது
நேரம் சென்றபின் காதம்பரியானவள், நினைவு வந்தும் கண்
கொட்டாமல் நிச்சலமாயிருந்து, மூச்சுவிடுதலையும் மறந்து,
சந்திராபீடனது முகத்தையே பார்த்துக்கொண்டு, அழுகை
யையும் வெறுத்து அழுத்தமான மனத்துடன் இருந்தாள்.
அவள் அவ்வாறிருப்பதை நோக்கி, மதலேகை
'என் அருமைத் தோழி! அளவற்ற இத்துயரத்தைக் கூவி
யழுது கண்ணீர் சொரிந்து வெளியிடாமலிருக்கின், மிகக்
கோமளமான உனது இருதயம் பீடிக்கப்பட்டு, தடாகத்தைப்
போல் தானே பிளந்துவிடுமே! மதிராதேவியையும், சித்தி
ரததேவனையும் அபேக்ஷித்து நீ உயிருடன் இருக்கவேண்
டும். இரு குலமும் உன்னைவிட்டு இருக்கமாட்டாது' என்று
மொழியும் மதலேகையை நோக்கி நகைத்து, காதம்பரீ
கூறலாயினள்.—'அடி பேதாய்! வஜ்ராம்போல் வெகு வன்
மையான எனது இப்பாழும் இருதயம் பிளவு படுவதென்ப
தேது! மேலும் தாய்தந்தையர், தான், உறவினர், ஊழியர்,
தோழிகள் என்னும் இவ்வனைத்தும் உயிருடன் இருப்ப

வனுக்கல்லவோ? இறக்கப்போகிற யான், என் பிரியதமனது இச்சரீரத்தை எவ்வகையிலோ அடைந்தேன்! இவர் பிழைத்தாற் கூடிக் களித்தும், உயிர் துறந்தபின் உடன்கட்டை யேறியும், ஆக இரு வகையிலும் எல்லாத் துயரங்களையும் துறந்து நிற்பேன்! ஆதலால் இப் பிரபு என் பொருட்டு இவ்வளவு தூரம் வந்து, பிராணனையும் பறிகொடுத்து, என்றனை மேன்மை படுத்தி யிருக்க, அத்தகைய என்றனைக் கேவலம் கண்ணீர் சொரிந்து இழிவாகச் செய்துகொள்வதெதற்கு? எனது நாதன் விண்ணுலகம் ஏகுவதற்கிருக்க, யான் அமங்களமாக என் புலம்பவேண்டும்? எனக்கு நீ நன்மை செய்ய விரும்புவாயாயின், என் தாய் தந்தையர் சோகத்தி னால் எங்ஙனம் உயிர் துறவாமலிருப்பரோ, எப்படியானல் அவர் எனதிடம் கோரிய கோரிக்கையை உனதிடம் நிறை வேற்றுவரோ, எவ்வகையிற் பரலோகம் சென்ற என்றனக் குத் தர்ப்பணஜலம் அளிக்க உனதிடம் ஓர் குமரன் உற்பத்தி யாவனோ—அவ்வாறு செய்ய முயற்சிப்பாயாக. என் வாஸகிருஹத்தினுள் தலைமாட்டில் வைத்திருக்கும் காம தேவன்படத்தைக் கிழித்துப் போடவேண்டும். எனது சரீரத்திற்குபயோகமான மற்றப்பொருட்களையும் அந்தண ருக்கு அர்ப்பணம் செய். மற்றும் உன்றனுக்குப் பிரிய மானது எதுவோ, அதையும் நீ எடுத்துக்கொள்ளலாம். நானோ என் காதனது கண்டத்தைக் கட்டிக்கொண்டு, சிதை யிற் படுத்து பிராணபரித்தியாகம் செய்வேன்' என மொழிந்தவாறு, மஹாச்வேதையைக் கட்டிக்கொண்டு, 'அரு மைத்தோழி! உனக்காகிலும் ஓர்வகையான பிரத்தியாசையு ண்டு; மீண்டும் உனக்கு உன் கணவனுடன் சேர்க்கை யுண்டாகுமென எதிர்பார்த்தவண்ணம், வெட்கமுறுதவுமை

யிற் பிராணனை வைத்திருக்கின்றனை. அகில விதத்திலும் ஆசை யொழிந்தவளான எனக்கோ அதுவுமில்லை. ஆதலால் மறு படியும் மறு பிறப்பிற் கூடும்பொருட்டு உன்றனைக் கேட்டுக் கொள்கின்றேன்' எனக் கூறி, சந்திராபீடனது சரணங்களை வியர்வையாகும் அமுதத்தை வடிக்கும் தன் கரங்களால் எடுத்து, மடியில் அமர்த்திக்கொண்டாள். அவள் கைகளாற் பரிசித்தவுடனே, சந்திராபீடன் மூச்சு விடுவது போல் தோற்றியது. உடனே அவனது சரீரத்திலிருந்து திடீ ரென அவ்விடமனைத்தையும் பனிமயமாய் ஆக்குவதுபோல் நன்கு விளங்காத வகையில் சந்திரன் போல் வெண்மையான ஜோதியுடன் ஓர் உருவம் கிளம்பியது. உடனே காதுகளில் அமுதத்தையிடுவதுபோல் ஆகாயத்திலிருந்து ஓர் அசரீரி வாக்கு இங்ஙனம் கேள்வியுறப்பட்டது :—'வத்ஸே ! மஹாச்வேதே ! மீண்டும் உனக்கு நானே ஆறுதல் கூறு கிறேன். உன் புண்டரீகனது தேகம் என் உலகத்தில் என் தேஜஸ்ஸால் குளிரச் செய்து காப்பாற்றப்பட்டு உன்னிடம் வருவதற்கு ஆயத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது. என்னு டைய வேறொரு சரீரமான இச்சந்திராபீடனது தேகமோ சாபதோஷத்திலிருந்து இப்பொழுது நீங்கிவிட்டது ; இது இயற்கையிலேயே அழிவற்றது ; தேஜோமயமுமானது. முக்கியமாய் இப்பொழுது காதம்பரியினுடைய கரத்தின் பரிசத்தினால் இச் சரீரம் களிப்படைந்திருக்கிறது. உங்க ளுடைய நம்பிக்கைக்காகச் சந்திராபீடனது சரீரம் இங்கேயே இருக்கட்டும். உயிர்வந்து எழுந்திருக்கும் வரையில் சந்திரா பீடனது சரீரத்தைப் பெரு முயற்சியோடு பரிபாலித்து வருவீராக.'

பத்திரலேகையும் அந்த ஜோதியின் பரிசத்தி னால் நினைவு பெற்று எழுந்து, ஏதோ ஆவேசமுண்டவளைப்

போல் விரைவுடன் ஓடி, பரிவர்த்தகன் என்கிற குதிரைப்பாகன் கையிலிருந்து இந்திராயுதத்தை வலித்திழுத்துக்கொண்டு, தானும் இந்திராயுதமுமாக அக்குளத்தில் வீழ்ந்து மூழ்கிப் போயினர்.

ஆ! என்ன அற்புதம்? அவ்விருவரும் மூழ்கியவுடனே, சிரத்தில் அப்பொய்கையின் தண்ணீரிலிருந்து சிக்கிய பாசிக் கொத்துகளைப் போன்ற சடைமுடிகளுடன், திகிலடைந்த உருவத்தை யுடையவனான தாபஸகுமாரன் ஒருவன் திடீரெனக் கிளம்பி வந்தான்; சற்றுத் தூரத்தில் இதையெல்லாம் மஹாச்வேதையும் பார்த்துக்கொண்டே பிரமித்து நிற்கிறாள். அம்முனிகுமாரன் அவளுக்கு அருகில் வந்து, துயரத்துடன் நா தழு தழுக்க, 'கந்தர்வராஜபுத்திரி! மறுஜன்மமெடுத்துத் திரும்பிவந்தவன் போன்ற நான் உனது நினைவுக்கு வருகின்றேனோ?' எனக் கேட்டான். அதைக் கேட்டு அவளது மனம் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் இடையில் அலைபாய்ந்த நிலைமையைப் பெற்றது பரபரப்புடன் எழுந்து, நமஸ்கரித்து இவ்விதம் மறுமொழி கூர்ந்தனள் :—'மஹாபாக! கபிஞ்ஜலனல்லவோ நீர்? யான் உம்மையும் அறிய முடியாமற்போக வேண்டுமோ! ஆகிலும், இப்பேதையின் விஷயத்தில் இவ்விதமான கொள்கை உண்டாவதும் உசிதமே! ஏனெனில், யான் அஞ்ஞானத்தினால் ஏதும் அறியாதவளாய், புண்டரீகதேவன் விண்ணுலகமேகியும், தனித்துப் பிழைத்திருக்கின்றேனல்லவா? இஃதிருக்கட்டும். புண்டரீகனை யெடுத்தேகியவர் யார்? இவ்வளவு காலமாய் எச்செய்தியையும் வந்து சொல்லாமலிருக்குமாறு, உமக்கு நேர்ந்தது யாது? புண்டரீகனை விட்டு, நீர் இப்பொழுது தனித்து வந்ததேன்? அம்முனிகுமாரர் அதற்குக் கூறியதாவது:—'கந்-

தர்வராஜபுத்திரி! கேட்பாயாக; யான், நீ அப்பொழுது அவ்வாறு புலம்பிக்கொண்டிருக்கையிலும் உன்னைத் தனித்துவிட்டு, அத்தேவபுருடனைப் பின்பற்றியே விரைவுடன் எழும்பிச்சென்றேனல்லவா? அவன் எனக்கு மறுமொழி கூறாமலே, தாரகைத் திரளையுந் தாண்டி, சந்திரலோக மடைந்தான். ஆங்கு, மஹோதயம் என்கிற ஸபையின்கண் சந்திரகாந்தச் சிலாமயமான பெரியதோர் மஞ்சத்தின்மீது . புண்டரீகனது சரீரத்தை அமர்த்தி, பிறகு என்றனை நோக்கி இங்ஙனம் கூறினான் :—'கபிஞ்ஜல! என்றனைச் சந்திர மூர்த்தியென்று அறிவாயாக! உனது அருமைத்தோழனான இவன், காமனது குற்றத்தினால் உயிர் துறக்க, குற்றமற்றவனான என்றனை நோக்கி—'ஓ பாவி சந்திர! என்னை உனது கதிரொளிகளைக்கொண்டு தவிக்கச்செய்து, என் மனதுக் கிசைந்தவளைக் கூடிக் களிக்க முடியாமலே எனது பிராணனைப் போக்குகிறாய்! அங்ஙனமே நீயும் கர்ம பூமியான பாரதவருஷத்திற் பிறந்து ஜன்மஜன்மத்திலும் மனதுக் கின்பமான மணாட்டியுடன் கூடிக்களிக்கமுடியாமலே, மனவேதனையால் உள்ளமுந் தவிக்க உயிரை விடப்போகின்றனை!' எனச் சபித்தான். நானோ, இவனது அச்சாபமாகும் அனலால் உடனே எரிக்கப் பெற்றவன்போல்—இஃதென்ன! தன்னிடம் தோஷமிருக்க, இவன் பகுத்தறிவில்லாதவனாய், குற்றமற்றவனான என்றனைச் சபித்தானே!—எனச் சினங்கொண்டவனாய், 'நீயும் எனக்கேற்றவண்ணம் இன்ப துன்பங்களை யனுபவிக்கப் போகின்றனை!' என்று அவனுக்குப் பிரதிசாபம் தந்தேன். எனக்குக் கோபம் தணிந்தது; பிறகு பகுத்தறிவுடன் யோசித்தேன்; மஹாச்வேதைக்கும் இவனுக்கும் ஏற்பட்டிருக்கும் பற்றுதலையும் அறிந்துகொண்டேன். மஹாச்வேதையோ, என் கிரணங்களிலிருந்து ஆவிர்ப்பவித்த அப்ஸரஸுக்களின் குலத்

தில் தோன்றிய கௌரியினிடம் உண்டானவள். அவளும்
இவனைக் கணவனாகச் சுயமாகவே வரித்துக்கொண்டாள்.
இவனும் தனக்குத் தானே செய்து கொண்ட குற்றத்தினால்
என்னுடன் மானிடலோகத்தில் அவசியம் இருமுறை ஜனிக்
கவேண்டும். 'ஜன்ம ஜன்மத்திலும்' என்று இரு முறை
முனிகுமாரனது முகத்திலிருந்து வந்து விட்டதல்
லவோ? ஆனது பற்றி, சாபதோஷம் நீங்கும்வரையிலும்,
ஆத்மா வில்கிப்போனதால், இச்சரீரத்திற்கு அழிவுநேரிடா
மல் இருக்கவேண்டுமென நினைத்து, என் லோகத்திற்குப் புண்
டரீகனது சரீரத்தை யெடுத்து வந்தேன். வத்ஸையான
மஹாச்வேதைக்கும் தேறுதல் கூறினேன். ஆதலால் சாப
நிவ்ருத்தி யுண்டாகுமளவும் இத்தேகம் எனது தேஜஸ்வி
னால் நன்கு குளிர்ச்சியாகச் சீர்கெடா வண்ணம் வைக்கப்
பட்டிருக்கும். இப்பொழுது நீ சென்று, இச்செய்தியை
ச்வேதகேது மாமுனிவரிடம் விண்ணப்பம் செய்வாயாக.
அவர் மஹாமஹிமை வாய்ந்தவராதலால், ஒருக்கால்
இதற்கு ஏதேனும் பரிஹாரம் பண்ணக்கூடும்'
என்றுரைத்து சந்திரன் என்றனை விடுத்தான்.
நானும் நண்பனைப் பிரிந்த துயரவெழுச்சியினால் ஒன்றும்
தோன்றாதவனாய், விண்ணவரேகும் வழியில் ச்வேதகேது
முனிவரிடம் விரைந்து ஓடினேன். அப்பொழுது கடுங்கோ
பக்காரரான ஓர் தேவபுருடனை தாண்டிவிட்டேன். அவர் என்
னை எரித்திடுபவர் போல் நோக்கி, 'துராத்மாவே! இவ்வளவு
மிக விசாலமான விண்ணவரது வழியிலும் நீ ஒரு குதிரை
யைப்போல முரட்டுத் தனமாய் என்றனைத் தாண்டி யோடுகி
றாயல்லவா? ஆகவே நீ குதிரையாகவே மானிடலோகத்திற்
போய் பிறக்கக் கடவாய்' என்று சபித்தார். நானோ, கண்
களில் நீர் ததும்பக் கரங்குவித்து, 'ஸ்வாமி! யான் தோழனது

துயரத்தினல் உம்மைத் தாண்டிவிட்டேனன்றி, அலக்ஷ்யத்தி ஞல் அல்ல. ஆதலால் அருள்புரிந்து, இச்சாபத்தை உடனே உபஸம்ஹாரம் பண்ண வேண்டும்' என வேண்டினேன். அவர் என்றனை நோக்கி 'யான் கூறியது மாறக்கூடியதன்று. ஆகி லும் எவனுக்கு நீ வாஹனமாகப் போகின்றனையோ, அவன் இறக்கும்போதே, நீயும் நீரில் மூழ்கி, சாபம் ஒழிந்தவனுய் விடுவாய்' என மொழிந்தார். யான் மறுபடியும் அவரைப் பார்த்து, 'ஐயன்மீர்! இப்படியாகில், பின்னும் ஓர் விண்ணப் பம். எனது பிரியஸகாவான புண்டரீகனும், சந்திரனும் சாப தோஷத்தினல் மானிட லோகத்திலேயே பிறக்கவேண்டி யிருக்கிறது; குதிரைப்பிறப்பிலும் என் நண்பனுடன் கூடவே காலங்கழிக்குமாறு, மேன்மைதங்கிய தாங்கள் அருள்புரிய வேண்டும்' என வணக்கமாய் வேண்டிக்கொண்டேன். பிறகு அவர், சிறிது தியானஞ்செய்து, மீண்டும், 'உஜ்ஜயினியில் மக் கட்பேறு வேண்டித் தவம் புரியும் தாராபீடன் என்னும் மன்னவனுக்கு மதியானவன் மகனுகப் பிறப்பான்; உன் தோழனை புண்டரீகனும், அவனது அமைச்சனுகிய சுகநா ஸனிடம் ஜனிக்கப்போகின்ருன். நீயும் சந்திரரூபியான இராஜபுத்திரனுக்கே வாஹனமாகப் போகின்றனை' என்ருர் நானும், அங்ஙனம் அவர் மொழிந்து முடிந்தவுடனே, கீழே பெருங்கடலில் விழுந்தேன். அதிலிருந்து குதிரையாக மாறியே வெளிக்கிளம்பலானேன். குதிரையாகவிருக்கையி லும் எனக்கு முந்திய நினைவுமட்டும் நீங்கியதில்லை."

கபிஞ்ஜலன் கூறுவனவற்றைக் கருத்துடன் கேட்டு வந்த மஹாச்வேதைக்கு, வைசம்பாயனன் முதலியவர்து பூர் வோத்தரங்களெல்லாம் விளங்க மனதிற் படிந்தது. 'ஹா நாத! புண்டரீக! மறு பிறப்பிலும் நீர் எனது நேசத்தை மறக்கவில்லையே! நீர் பரலோகம் போயிருந்தும், மீண்டும்

வேறோர் உருவத்துடன் என் எதிரில் தரிசனந் தந்தும், யான் இராக்ஷஸியைப் போல உம்மை யொழிக்க நேரிட்டதே! இப் பாழும் நான்முகன் என்னைப் படைத்ததற்கும், என்றனக்கு நீண்ட காலம் ஆயுளை யளித்ததற்கும் உம்மை அடிக்கடிக் கொல்லுதல் பயன் போலும்!" என்று ஏங்கிப் புலம்பினாள்.

கபிஞ்ஜலன் மீண்டும் அவளை நோக்கி மனவிரக்கங்கொண்டு "கந்தர்வராஜபுத்திரி! உன்றனை நீ பழித்துக் கொள்வது தகாது; உன்றனிடம் ஏதும் குற்றமில்லையே! சாபதோஷத்தினால் உங்களிருவருக்கும் இத்துயரம் நேர்ந்த வகையை யான் விளங்கக் கூறினேனே; நீங்கள் இருவரும் சந்திரனது வாக்கையும் செவியுற்றிருக்கின்றீர்கள். இருவருடைய நன்மையின் பொருட்டும், நீ அத்தவத்தையே தொடர்ந்து செய்வாயாக. முறைதவறாது அனுஷ்டித்த தவம் எதையும் கைகூடச் செய்யும்' என்று ஹிதோபதேசம் செய்தான். மஹாச்வேதைக்கு ஒருவாறு மனத்துயரமடங்கியது. அப்பால் காதம்பரீ, கபிஞ்ஜலனை நோக்கி 'ஸ்வாமி! பத்திரலேகையும் இக்குளத்தின் தண்ணீரிற் பிரவேசித்தாள்; அவளுக்கு என்ன நேர்ந்தது?' என வினவினாள். அவன் அதற்கு 'இராஜபுத்திரி! யான் குதிரையா யிருந்து தண்ணீரில் வீழ்ந்தபின் அச்செய்தி யெதையுமே அறியேன். இப்பொழுது சந்திராபீடனுக்கு ஜன்மம் எவ்விடத்தில்? பத்திரலேகையின் செய்தியென்ன?—என்கிற இவ்விருத்தாந்தத்தை அறிய எனக்கும் ஆவலாயிருக்கிறது. இதை எமக்கு அறிவிக்கக்கூடியவர் மூவுலகத்தையும் தன் முன்புறத்திலிருப்பது போற் காணும் பிரபாவம் வாய்ந்த என் பிதாவான ச்வேதகேது மாமுனிவரே. இதோ யான் அவரிடம் செல்லுகிறேன்' எனக் கூறிக்கொண்டே ஆகாயத்தில் எழும்பிச் சென்றான்.

அவன் போன பின்பு, காதம்பரீ, மஹாச்வேதையைப்

பார்த்து, ‘பிரியஸகி! பிரம்மதேவன், ‘நம்மிருவரையும் துயரமனுபவிப்பதிலும் இப்பொழுது ஒரே சீராகச் செய்து விட்டதால், உயிருடன் இருப்பதோ இறப்பதோ எதுவும் எனக்குத் துன்பமாகத் தோன்றவில்லை. ஆதலால், இவ்வாறு நிகழ்ந்திருக்கையில் செய்யவேண்டுவது யாதென, நீதான் உபதேசிக்கவேண்டும்’ எனக் கேட்டாள். அதற்கு மஹாச்வேதை இங்ஙனம் பதிலுரைத்தாள்.—‘என் அருமைத் தோழி! இதிற் கேள்வி யென்ன! மனதுக்கின்பமான மணாளனைக் கூடுவதில் மறுக்க முடியாத இப் பிரத்தியாசையானது எதைச் செய்யத் தூண்டுகிறதோ, அதையே தான் நிறைவேற்ற வேண்டும். சந்திராபீடனது சரீரம் உன் மடியிலேயே இருக்க, நீ வேறென்ன செய்யப் போகின்றனை? இச்சரீரம் சீர்கெடாமலிருக்குமளவி லும், அதற்குப் பணிவிடை செய்வதை விடுத்து, நீ பண்ண வேண்டிய பணிதான் வேறு யாது? நன்மை பெறவேண்டி அப்பிரத்தியக்ஷதேவதையெனக் கூறி மண், மரம், சிலை முதலி யவற்றாலாகிய பதுமைகளையுமல்லவா கொண்டாடி யுபசரிக்கின்றனர்! அவ்வாறிருக்க, பிரத்தியக்ஷதேவமாய் சந்திராபீடனென்னும் நாமதேயங்கொண்டு மறைந்திருக்கும் சந்திரனது மூர்த்திக்குப் பணிவிடை செய்வதில் ஆக்ஷேபமென்ன?’ அதைக் கேட்டு காதம்பரீ, சந்திராபீடனது சரீரத்தைச் சற்றும் வருத்தப்படுத்தாது, மற்றொரு கற்பாறையின்மீது மெல்லென எடுத்துப் போய் அமர்த்தி, தான் மாங்கல்யத்திற்காக மட்டும காத்திற் கங்கணமொன்றணிந்து, நீராடி தூய்மையாயிருந்து, தைவத்தைத் தகுந்தவாறு தொழுது, அங்ஙனமே சந்திராபீடனது சரணங்களைத் தன் மடியின்மீது அமர்த்திக்கொண்டு, இதர இராஜ குமாரருடனும் தனது பரிஜனத்தோடும் பட்டினியாகவே

அப் பகற்பொழுதைக் கழித்தாள். அங்ஙனமே கனத்த கார் முகில்களாற் கவியப் பெற்று பயங்கரமாயிருந்த அவ்விரவை யும் உட்கார்ந்து கண்விழித்தவண்ணம் போக்கினாள். விடியற் காலத்திற் கண் மலர்ந்து, சித்திரத்தில் இருப்பதுபோல் தோற் றிய சந்திராபீடனது சரீரத்தைக் கண்டு, மெள்ள மெள்ள கரத்தினாற் பரிசித்து, பக்கத்திலிருந்த மதலேகையை நோக்கி, 'மதலேகே! இதோ பார்! இத்தேகம் முன்னிருந்ததுபோ லவே இருப்பதாய் எனக்குத் தோற்றுகிறது?' என மொழிய, மதலேகையும் அவளை நோக்கி 'எனதன்பார்ந்த தோழி! இதிற் பார்க்கவேண்டுவதென்ன? அந்தராத்மா பிரிந்திருப்பதால், இச்சரீரம் அசைவற்றுமட்டும் இருக்கின் றது. மற்ற வகையில் இம்முக வொளி மழுங்காது அவ்வித மேயுளது. இயற்கையான அழகும் அத்தகையதே. ஆனது பற்றி, அவ்வாகாயவாணியும், கபிஞ்ஜலன் கூறிய சாப விருத் தாந்தமும் உண்மையானவையே' என்று மொழிந்தாள். அப்பால் மனம் பூரித்தவளான காதம்பரியானவள், மஹாச் வேதைக்கும் மன்னவகுமாரனை வருக்கும் அத்தேகத்தைக் காட்டி, பிறகு அனைவரையும், ஆஹாராமருந்துவதற்குச் செல் லுமாறு ஆஞ்ஞாபித்தாள். தானும் மஹாச்வேதையினால் கொண்டு வரப்பெற்ற கனிகளைத் தனது பரிஜனங்களுடன் புஜிக்கலானாள். மறு நாள் மிகத் திட்மான நம்பிக்கை பிறந்து, மதலேகையினிடம் 'பிரியஸகி! நாதனுக்குச் சாபம் நீங்குமள வும், நாம் அவரது சரீரத்தைப்பசரித்துக்கொண்டு இவ்விடத் தில் இருக்கவேண்டுவது மிகவும் அவசியம். ஆதலால், இவ் வற்புதச் செய்தியை எனது தாய் தந்தையருக்கும் அறிவிப் பாயாக. இவர்கள் இவ்விதத் துன்பத்திற்கு ஆளாயிருக்கும் என்றனை இப்பொழுது வந்து பாராமலிருக்கும் விதமாகவும் நீ செய்ய வேண்டும். யான் அன்னையையும் தந்தையும் பார்

த்து, இத்துயர வெழுச்சியை அடக்கக்கூடியவளல்ல. நான் நாதன் உயிர்துறந்திருப்பதைக் கண்டும் புலம்பவில்லையே! அங்ஙனமிருந்தும், இவர் ஐயமின்றி மீண்டும் பிராணனைப் பெறுவதற்கிருக்க, விரதம்பூண்ட யான் வேறெதற்காகப் புலம்ப வேண்டும்?' என்றுரைத்து, அவளை ஹேமகூடத்திற்கு அனுப்பினுள். மதலேகையும் சென்றுத் திரும்ப வந்து, 'என தருமைத்தோழி! உன் கோரிக்கை நிறைவேறியது. உன் தாய் தந்தையர், சாபம் ஒழிந்ததும், தமது மருமகனையும் உன்னையும் வந்து பார்ப்பதாகப் பகர்ந்தருளினர்' எனக் கூறிய பின், உள்ளம் அமைதிபெற்று இருந்தனள்.

அப்பால் மாரி காலம் கழிந்தது; திசைகளெல்லாம் விசாலிப்பதுபோல் தோற்றின; நீரோடைகளின் கரையோரத்து மிருதுவான மணற் பந்திகள், தண்ணீர் கிரமமாய் வடிந்து ஒதுங்குவதற்கேற்பப் படிப்படியாய் அலைகளைப்போல் அமைந்து நின்றன; இங்ஙனமிருக்க, ஒருக்கால், மேகநாதன் காதம்பரியின் அருகில் வந்து, 'தாராபீடதேவன், இளவரசு இன்னும் திரும்பிவரவில்லையே யென மிகக் கவலையுற்று, தூதுக் காரரைச் செய்தி தெரிந்து வர அனுப்பியிருக்கின்றார். யாம் இன்னும் உமக்குத் துயரமளிக்க விரும்பாதவராய், நடந்த வரலாறனைத்தையும் மஹாராஜாவினிடம் சென்று தெருவித்து விடலாமென்றோம். ஆகிலும் அவர்கள் மிகத் துயரமுற்று இளவரசின் பாதவந்தனம் தமக்குத் தேவை யென்றும், இவ்வாறு நெடுதூரம் வந்து, யுவராஜனது திருமேனியைக் காணுமல் திரும்பிச் சென்றால் தாராபீடதேவன் தம்மைக் கோபிப்பார் என்றும் கூறுகிறார்கள்' என்று மொழிந்தான். காதம்பரீ, வெகு பிரயாசையுடன் யோசனை செய்து, மறுமொழி யுரைத்தாள்:—'அவர்கள் சந்திராபீடதேவனைக் காணுது திரும்பிச் சென்று என்னென்

தறு செப்புவர்? அன்றியும் செய்தியோ உலகத்திலில்லாத
விதமாய் இத்தகையதாயுளதே! இதை நேரிற் பார்த்தா
லுங்கூட நன்கு நம்பிக்கையுண்டாகாதே! அவர்கள் வந்து
தேவனைப் பார்த்துப்போகட்டும்' எனக் கட்டளை யிட்டாள்.
மேகநாதன் அச்சேவகர்களை உள்ளே யழைத்துவந்தான்.
அவர்கள் கண்களில் நீர் ததும்ப தூரத்திலிருந்தே, ஸாஷ்
டாங்கமாகப் புணிந்து நின்றனர். காதம்பரீ அவர்களைச் சற்று
நேரம் பார்த்துவிட்டு, இங்ஙனம் மொழிந்தாள்:—'ஸுமுக
ரான ஸேவகர்கள்! என் அழுகிறீர்கள்? துன்பமாகவே முடிவு
பெறும் நிகழ்ச்சியைக் கண்டு மனம் கரைந்து கண்ணீர்
சொரியவேண்டும்; இன்பமாக முடிவுபெறப் போகும்
துயரமோ இருதயத்தில் இடம் பெறுவதற்கில்லை.
சந்திராபீட தேவனது முகமும் மேனியும்
சற்றும் களை குறையாது இயற்கை நிலைமையிலிருப்
பதைப் பாருங்கள். ஆகவே சந்திராபீட தேவனைக் கண்
டதாகவும், அவர் அச்சோதஸரஸ்ஸின் கரையிலிருப்ப
தாகவும் ஸ்ரீ தாராபீட தேவனிடம் சென்று விண்
ணப்பம் செய்யுங்கள்; நெடுந்தூரத்திலிருக்கும் பெரி
யோரிடம் இவர் உயிரிழந்திருப்பதாகக் கூறுவதிற் பிர
யோஜனமில்லை. இவர் மீண்டும் பிழைத்து எழுந்
திருப்பது உண்மையாகிலும், அதை அவர்கள் நம்பார்கள்.
என் பிராணநாதன் மீண்டும் பிராணனைப் பெற்று எழுந்ததும்,
அவ்வானந்தச் செய்தி அவர்களுக்கும் உடனே தெரியப்
போகிறது' என்று கூறி, அப்பால் சற்று ஆலோ
சித்து, மேகநாதனை நோக்கி 'ஒருவருக்
கொருவர் பழகியவரிடம் உண்மையை மறைப்
பது உசிதமல்லவென்றறிவேன்; ஆகிலும் பெரியோ
ரது மனதுக்குத் துன்பம் நேரிடுமென்று பயந்து இங்ஙனம்

மொழியலானேன். நடந்த செய்தியை உள்ளபடி யுரைத்
திடுங்கள். ஆனால் நம்பிக்கையாகப் பேசக்கூடிய வேறொரு
வன் இவர்களுடன் இங்கிருந்து போகட்டும்' எனக் கட்டளை
யிட்டாள். உடனே மேகநாதன், 'த்வரிதகன்' என்னும்
இளவரசின் ஸேவகனை யழைத்து, அவர்களுடன் அனுப்பி
னன்.

அப்பால் சில நாட்சென்றபின், உஜ்ஜயினியில் விலாஸ
வதியானவள் செய்தியறியாது துன்பமுற்று, சந்திராபீடன்
சுகமாய் வந்து சேரவேண்டுமென வேண்டிக்கொள்வதற்காக
ஓர் அம்மன் கோயிலுக்குச் சென்றாள். ஆங்கு அவள் அம்
மனைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கையில், இளவரசினிடம்
சென்றிருந்த ஸேவகர்கள் வந்து சேர்ந்ததாய் பரிஜனங்கள்
வந்து அகமகிழ்ச்சியுடன் அறிவித்தார்கள். உடனே 'சந்திரா
பீடன் க்ஷேமமாயிருப்பதாக அவர்கள் கூறுகிறார்களா?'
என்று ஆவலுடன் கேட்டுக்கொண்டு வெளிவந்து, நூற்றுக்
கணக்கான நகரத்து ஜனங்களாற் சூழப்பெற்றுள்ள அச்
சேவகர்களைச் சற்றுத் தூரத்திற் பார்த்தாள். அவர்களிடை
யில் த்வரிதகனும் இருந்தான். அக்கோயிலின் அங்கணத்தி
லேயே அவ்வாட்களை அவள் வரவேற்றாள். அவர்கள் வந்து
தன்னை வணங்குவதற்கு முன்பாகவே, அவர்களை நோக்கி,
நா தழுதழுக்க 'அப்பன்மார்களே! என் வத்ஸனது விருத்
தாந்தத்தைமட்டும் துரிதமாய் மொழிந்திடுங்கள்! என் மனம்
என் குழந்தையைப்பற்றி ஏதோ வேறுவிதமாய் நினைக்
கிறதே!' என்று உரத்துக் கூறினள். இங்ஙனம் வினவ,
அவ்வூழியர் 'தேவி! நாங்கள் அச்சோதஸரஸ்ஸின் கரையில்
இளவரசைக் கண்டோம்; மிகுதியை நமது த்வரிதகன் தெரி
வித்துக்கொள்வான்' என்றார்கள். அவர்கள் சொல்லிய
வகையும், அவர்கள் ஊக்கங்குன்றியிருந்த முகத்தோற்ற

மும் விலாஸவதியை மிகத் துயரத்தில் ஆழ்த்தின. 'இவ் வேளை த்வரிதகன் வேறு என்ன செய்தி சொல்லப் போகின்றான்? என் வத்ஸன் உடனே வந்துசேராதபடி அவனுக்கு என்ன நேர்ந்ததோ? தான் சற்றும் தாமதிக்காமலே திரும்பிவருவதாகக் கூறிச் சென்றானே! அவன் புறப்படும்போதே என் மனம் என்னையுமறியாது அஞ்சித் துயருற்றதே! அவன் வழியச் சென்றானே!' எனக் கூறிக்கொண்டு மூர்ச்சையடைய, அருகிலிருந்த ஸகிகள் அவளைத் தாங்கிக்கொண்டனர். ஸேவகர்கள் திரும்பிவந்த செய்தியும், அம்மன் கோயிலில் அவ்விதம் விலாஸவதி மூர்ச்சையடைந்ததும் தாராபீடனுக்குத் தாமதமின்றி தெரிவிக்கப்பட்டன. மன்னவன் விரைவாக அவ்விடம் வந்து சேர்ந்தான். விலாஸவதிக்கும் மயக்கம் தெளிந்தது. அவளைச் சுகமாகத் தடவிக் கொடுத்து எழுப்பி, 'தேவி! உண்மையில் நமது சந்திராபீடனுக்கு ஏதேனும் அசுபம் நேரிட்டிருந்தால் நமதுயிர் நிலைக்குமாட்டாது. ஆனால் அழுவதிற் பிரயோஜனமில்லை. மார்பிலடித்துக்கொண்டு முறையிட்டபோதிலும் கொடுத்து வைக்காததை நமது இச்சையினால் அடைய முடியாது. அடைதற்கு அரிதான புத்திரனை இவ்வயதில் அதிருஷ்டவசத்தினால் பெற்றோம். அவன் ஸகலகலாவல்லவனானான். நற்குணங்களும் அவனிடம் குடிகொண்டன. இளவரசுப் பட்டம் பெற்று திக்விஜயஞ் செய்துவந்து, அவனை நாம் மனங்களித்து ஆலிங்கனமும் செய்துகொண்டோம். அவனுக்கு மணம்புரிந்து வைத்து, என் செங்கோலை முற்றிலும் அவனிடம் ஒப்புவித்துத் தபோவனம் செல்ல விரும்பியதுதான் என் கடைசி மனோரதம். எல்லாக்கோரிக்கைகளுமே

நிறைவேறி விடுவதென்றால், அதற்கு நாம் மஹத்தான புண்ணியம் பண்ணியிருக்க வேண்டும். மேலும் 'வத்ஸனது செய்தி எத்தகையதென்று இங்கு வந்திருப்பவரில் எவரும் விளங்கக் கூறியதாகத் தெரியவில்லை. நமது வத்ஸனின் பால ஸேவகனான த்வரிதகன் உண்மையான விருத்தாந்தங்களை யறிந்து வந்திருப்பதாகவும் கேள்விப்பட்டேன். அவனைக் கேட்டு உண்மைச் செய்தியைத் தெரிந்துகொள்ளாமல் நாம் ஏன் முன்னதாய் வீணில் துயரப்படுவது?' என்று சொன்னதும், ஒரு த்வாரபாலகன், கூட்டத்தினால் தகையப்பட்டிருந்த த்வரிதகனை அழைத்துவந்து மன்னவனுக்கு முன்னிலையில் நிறுத்தினான்.

இராஜன் 'என்னடா! வத்ஸனுக்கு நேர்ந்ததென்னை? நானும், அவனது அன்னையும், அமைச்சருமாகக் கடிதம் வரைந்திருக்க அவன் வராமல் இருப்பதேன்?' என்று த்வரிதகனை வினவ, அவன் சென்றதுமுதல் நடந்த வரலாறனைத்தையும் உள்ளபடி விளங்கக் கூறினான். அரசனும் சந்திராபீடனது இருதயம் பிளவுற்ற விருத்தாந்தமளவும் கருத்துடன் கேட்டான். உடனே துயரக்கடல் அவன் இருதயத்திற் கொந்தளித்தது. அரசன் தன் கரத்தை நீட்டி, த்வரிதகனைப் பார்த்து, 'போதுமடா! நான் கேட்கவேண்டியதைக் கேட்டுவிட்டேன்! ஆ! வத்ஸ! உன் இருதயம் பிளவுற, நீ அவ்வேதனையைத் தனித்திருந்து அனுபவித்தனையே! வைசம்பாயனன் மீதுள்ள பிரீதியை நீ நன்கு நிறைவேற்றினாய்! நாங்களோ,' துன்பமனுபவிக்கும் கொடிய கர்மசண்டாளர்! தேவி! எமது இந்த இருதயம் வஜ்ரத்தினும் வெகு வன்மையானதே! இஃது தானாகவே ஆயிரக்கணக்காய்ப் பிளவுறவில்லையன்றோ? நமது வத்ஸனது ஆத்மா தனித்து நெடுந்தூரம் போவதற்குள்ளாகவே, நாமும் பின்பற்றிச் செல்வதற்கு

முயலுவோம். சுகநாஸரே! இன்னுமா சும்மாவிருக்கின்றீர்?’ என்றவாறு ஏங்கிப் புலம்பும் தாராபீடனை நோக்கி, த்வரிதகன், ‘ஐய! இளவரசின் சரீரம் சிரழியவில்லை. வைசம்பாயனன் முதலியவருக்குச் சாபதோஷத்தினால் ஜன்மமேற்பட்ட வரலாறுகளையும் முற்றிலும் செவியுறவேண்டும்’ என்று ஆரம்பித்து, உண்மைச் செய்திகளை யனைத்தையும் மொழிந்தான். தாராபீடனும், ஆச்சரியகரமான அநேக அடையாளங்களால் நம்பிக்கையைத் தருவதான சந்திராபீட வைசம்பாயனரது விருத்தாந்தங்களைக் கேட்டு, முகத்தைச் சிறிது திருப்பி, சுகநாஸனைப் பார்த்தான். சான்றோர், தாம் துயரமுற்றிருந்தாலும் அதை யொரு புறத்தில் அடக்கிக்கொண்டு, நண்பரது சோகத்தைத் தீர்ப்பதற்கே முயலுவர்; சுகநாஸன், தன் புத்திரனைப்பற்றிய துயரத்தினால் வருந்துகையிலும், அதைச் சிறிதும் பாராட்டாமல் தைரியமாய் மன்னவனை நோக்கி இவ்வாறு மொழிந்தான்:—

‘வேந்தே! விந்தைகளுக்கிடமான இந்த ஸம்ஸாரத்தில் படைக்கப்பெற்றும், இருந்துகொண்டும், இறந்துகொண்டுமிருக்கும் பல வகைப்பட்ட ஸ்தாவர - ஜங்கமங்களுக்கு எப்பொழுதும் நிகழத்தகாத நிலைமை யேதுமிலது. ஆதலால், தேவரீருக்கு இவ்விஷயத்தில் ஆலோசனையேன்? யுக்தியினால் அனைத்தையும் ஆராய்ந்து நிர்த்தாரணம் செய்துவிட முடியாது. அப்படியாயின், யுக்திக்குட்படாது சாஸ்திரப் பிரமாணத்தைக்கொண்டே ஒப்புக்கொள்ளக் கூடியவையும் முரண்பட்டவையுமான எத்தனையோ விஷயங்கள் உலகிற் காணப் படுகின்றனவே; குளிசம் கட்டி, ஜபம் செய்து, விஷம் முதலியதால் மூர்ச்சையுண்டவனை யெழுப்புவதென்பதிலும், அயக்காந்தம் இரும்பு இவை ஒன்றையொன்று இழுப்பது அல்லது சுழற்றுவதென்பதிலும் நமது யுக்தி

களைக் கொண்டு என்ன ஸமாதானம் கூற முடியும்? வேதங்களிலும், புராணாதிகளிலும் சாபவிருத்தாந்தங்கள் பல கூறப்பெற்றுள. இந்திரபதவியை வஹித்த நஹுஷன் அகஸ்திய சாபத்தால் மலைப் பாம்பாய் விட்டான். அஸுரகுருவான சுக்கிராசாரியாது சாபத்தால் யயாதி இளம் பிராயத்திலேயே முதுமையைப் பெற்றான். வேறு என்ன வேணும்! ஸ்ரீ மஹாவிஷ்ணுவே ஜமதக்னிக்குப் புதல்வராய் அவதரித்தார். ஆகையால் மானிடரிடம் தேவதைகள் வந்து பிறப்பது நேரிடக்கூடாததல்ல. அன்றியும் கருத்தரிக்கும்போதே, தேவரீர், தேவியின் முகத்திற் பூர்ணசந்திரன் புகுந்ததாகவும் கனவிற் பார்த்தீர்; அங்ஙனமே எனக்கும் கனவிற் புண்டரீகத்தின் * தரிசனமும் உண்டாயிற்று. ஆனதுபற்றி, அவ்விருவருமே இவ்வாறு நமதிடம் ஆவிர்ப்பவித்தனரென்பதில் ஐயமே கிடையாது. இறந்தவரது உடல் அழிவு பெறுமலிருப்பதெங்ஙனம்? மீளவும் அவ்வுடலுக்கு உயிருண்டாவதுதான் எவ்வாறு? என்று கேட்பீர். இது அமுதத்திற்குள்ள அஸாதாரணமான பிரபாவம். சந்திரனிடம் அம்ருதம் உண்டென்பது பிரஸித்தம். ஆதலால் இவை யனைத்தும் உண்மையே. அவ்விருவருக்கும் நேரிட்டது சாபம்; புத்திர பாக்கியம் பெற அதுவே நம்மிருவருக்கும் வாணகப் போயிற்று. இந்நிகழ்ச்சிகளில் எவரும் துயர முறுவதற்குக் காரணமில்லை. தான தர்ம விரதாதிகளை இனியும் நன்கு நிறைவேற்று வீர்களாகில், எச்சங்கடமும் நீங்கி சுகம்' பெறலாம்.' அரசன், சுகநாஸன் கூறியதைக்

---

* புண்டரீகம்—வெண்தாமரை மலர். [புண்டரீக—என்பதற்கு வெண்தாமரைமலர் என்று பொருளீதலாலும், அவன் முதலிற் பிறந்தது தாமரைப் பூவிலமைகையாலும், புண்டரீகன் தாமரை மலருருவங்கொண்டு மனோரமையின் கர்ப்பத்திற் பிரவேசித்தான் எனக் கருத்து.]

கேட்டு சோகத்துடன் 'நீங்கள் உரைத்தது அனைத்தும் உண்மையே. வேறு எவர் எமக்குப் போதிக்கப் போகின்ற னர்? ஆயினும், என் வத்ஸனது இருதயம் பிளவு பெற்ற தென்னும் விஷயம் மற்ற எல்லாவற்றையுமே மறைத்துவிடு கின்றதே! ஆகையால் வத்ஸனது வதனத்தை நேரிற் பாரா மல், எனதுயிரைத் தாங்கவியலாதவனு யிருக்கிறேன். என் நிலைமையே இப்படியிருக்க, யான் தேவிக்கு எவ்விதம் தேறு தல் கூறுவேன்? ஆதலால் அவ்விடம் செல்வதை விட்டு, உயிருடன் இருப்பதற்கு வேறோருபாயமுமில்லை' என்று மொழிந்தான். வெகு நேரமாகத் துயாமுற்றிருந்த விலாஸ வதீ, வேந்தனுக்கு எதிரில் அஞ்ஜலி செய்து, ஆர்யபுத்திர! இப்படியானல், இன்னும் தாமதிப்பானேன்? குழந்தை யைக் காண்பதன் பொருட்டு எனதுள்ளம் பதைக்கின்றது! நமது குழந்தையை மீண்டும் காண்பதுண்மையானல், நான் எத்துன்பத்தையும் பொறுத்திருக்கத்தடையில்லை' என்றாள். இச்சமயம் வேதியன் ஒருவன் வந்து, வாழ்த்து கூறி மஹாராஜா இங்கிருப்பதை யறிந்து மனோரமாதேவி உள்ளே வர ஸங்கோசப்பட்டு, அவ்வாலயத்தின் பின்புறத்தில் நிற்ப தாகவும், குமாரர்களின் செய்தி யென்னவென்று அறிய அவள் விரும்புவதாகவும், இவ்வளவு கோலாஹலங்களைக் கண்டு அவள் மனங்குழம்பி யிருப்பதாகவும் கூறினன். அது கேட்டு, மன்னவன் மனங்குன்றி விலாஸவதியை நோக்கி 'தேவி! உன் பிரியஸகி, நமது குழந்தைகளைப் பற்றிய செய்தி யொன்றையும் அறியவில்லை யெனத் தெரிகிறது. நீயே நேரிற் சென்று, செய்திகளை விளங்கக் கூறி தைரியமா யிருக்கச் செய். ஆர்ய சுகநாஸரோடு மனோரமாதேவியும் அவ்விடம் வரவேண்டும்' எனறுரைத்து விலாஸவதியை மனோரமையினிடம் அனுப்பினன். உடனே தானும் சுகநாஸ

னுமாகப் பிரயாணத்திற்கு ஸந்நாஹம் செய்தார்கள்.

பிறகு, மன்னவன் முதலியவர் மனம் பதைக்க, இராப் பகலாய்ப் பிரயாணம் செய்து, அனேக தினங்கள் சென்றபின், அச்சோத ஸரஸ்ஸை அடைந்தனர். அரசன் அவ்விடம் சென்று, தூரத்திலிருந்தவாறே முதலிற் செய்தியறிவதன் பொருட்டு, த்வரிதகனுடன் ஆப்தரான சில குதிரைப் பாகரை அனுப்பினான். அப்பால் சந்திராபீடனைக் காத்திருந்த அநேகம் இராஜகுமாரர்கள் மேகநாதனை முன்னிட்டுக் கொண்டு தாராபீடனுக்கு எதிரில் வந்தார்கள். அப்பொழுதுதான் தாராபீடனுக்கு ஒருவாறு ஆச்வாஸமுண்டாயிற்று. மூடுபல்லாக்கிலிருந்த விலாஸவதியை நோக்கி, வத்ஸனை ஆச்ரயித்த இராஜகுமாரர் எதிர்கொண்டுவரும் வகையைப் பார்த்து, வத்ஸனது தேகம் உண்மையில் அழிவுறவில்லையென்றே தோன்றுவதாக மனக்களிப்புடன் மொழிந்தான். அவளும் அது கேட்டு, பல்லாக்கின் திரைச்சீலையைச் சிறிது விலக்கிப் பார்த்து, அவ்வளவு இராஜகுமாரருக்கிடையில் தன் புதல்வனொருவன் மாத்திரம் காணமுடியாமலிருப்பதைக் கருதி மிக்க வருந்தினாள். அரசன் அவளுக்கு ஆறுதல் சொல்லி, மேகநாதனை நோக்கி வத்ஸனது செய்தியை வினவினான். அவன் அதற்கு நினைவையும் அசைவையும் தவிர்த்து மற்ற தேககாந்தி முதலியவனைத்தும் ஒவ்வொரு நாளும் விருத்தியடைந்து வருவதாகப் பதிலுரைத்தான். அதைக் கேட்டு, தன் புதல்வன் பிழைப்பனென்று அதிக நம்பிக்கையுண்டாய், அவனது முகத்தைப் பார்க்கப் பேராவலுடன் விலாஸவதியோடு யானையின்மீது துரிதமாய் மஹாச்வேதையின் ஆச்ரமத்துக்குச் சென்றான்.

சந்திராபீடனது பெற்றோர் முதலியவர் வந்திருப்பதா

கத் திடீரென மஹாச்வேதையும் கேள்வியுற்றாள். அவர்களைக் காண அவளுக்கு வெட்கமாயிருந்தது. உடனே குகையிற் போய் மறைந்து கொண்டாள். காதம்பரியும் அவர்கள் வந்ததையறிந்து பிரஞ்ஞையற்றுப் போனாள். அப்பொழுது தாராபீடன், சுகநாஸன், விலாஸவதீ இவர்கள் மெதுவாக அவ்வாச்ரமத்தினுட் சென்று, சிறந்த காந்தி பொருந்திய சந்திராபீடனது சரீரத்தைக் கண்டார்கள். சந்திராபீடன் நித்திரையுறுவது போலவே தோற்றியதன்றி, உயிரிழந்தவனாகத் தெரியவில்லை. விலாஸவதி தன் கரங்களை நீட்டி 'குழந்தாய்! சந்திராபீட! உனக்கேன் இந்நிலைமை நேரிட்டதடா! நெடுந்தூரத்திலிருந்து உன் தந்தை முதலான நாங்கள் இதோ வந்திருக்கையில் எங்களை நீ எழுந்து காணவில்லையே!' என்று ஏங்கிப் புலம்பி, சந்திராபீடனது சரணங்களைப் பற்றிக் கொண்டு கதறியழுதாள். தாராபீடன், தன் துயரத்தை அடக்கிக்கொண்டு, 'தேவி! இவன் நமது ஸுக்ருதவசத்தால் நமக்குப் புதல்வனாகப் பிறந்தான்; இவன் தைவப் பிறப்பு. ஆதலால், மானிடவுலகத்திற்கேற்ப மனத்துயருற்று வீணிற் புலம்புவது யுக்தமல்ல, மேலும் நாமிருவரும் மனோரமையையும் சுகநாஸனையும் ஆறுதல் கூறித் தேற்றவேண்டும்; அவர்களுடைய புதல்வனான வைசம்பாயனன் இவ்வுலகத்தை விட்டு மறைந்திருக்கின்றானன்றோ? இவர்களும் இருக்கட்டும்! யாதொருத்தியின் பிரபாவத்தினாலேயே வத்ஸன் உயிர் பிழைக்கப் போகிறானோ, அந்த கந்தர்வமன்னனது மகளான உன் மருமகள் இன்னும் இதோ நினைவு பெறாமல் இருக்கின்றனளே! அவளையுடனே தேற்றவேண்டுமல்லவா?' என்றான்.

உடனே விலாஸவதி யெழுந்து, காதம்பரியினிடம் சென்று, நினைவின்றி வீழ்ந்திருக்கும் அவளைத் தன் மடியின்மீது அமர்த்திக்கொண்டு 'அம்ம! என் வத்ஸன் சந்

திராபீடன் ஆவி துறந்திருந்தும் அவனைப் பிழைப்பிப்பதற்கு
நீ அமிருத மயமாகப் பிறந்தனையே! எழுந்திருக்கவேணும்'
இவ்வாறு சந்திராபீடன் என்கிற பெயர் காதில் விழுந்ததும்,
மிகக் கோமளமான விலாஸவதியின் பரிசத்தைப்பெற்றதும்
காதம்பரீ மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து, வெட்கத்தினால்
ஒருவாறு தலைகுனிந்திருந்தாள். உடனே மதலேகை விலா
ஸவதியின் மடியிலிருந்து அவளை இறக்கினாள். காதம்பரீ
அப்பொழுதும் ஸ்வாதீனமற்றிருந்தாள். மதலேகை அவளைக்
கொண்டு தாராபீடன் முதலியவருக்கு முறைப்படி வந்தனம்
செய்வித்தாள். அப்பால் அவளுக்கு நினைவுவந்து நிஷ்களங்க
மான முகத்துடன் அவள் விளங்கினாள். தாராபீடன் அவ
ளைப் பார்த்துத் தன் புதல்வன் எழுந்து வந்துவிட்டதாகவே
கருதி இன்பமுற்றான். பிறகு மதலேகையை அழைத்து,
'எமக்கு இவர்களது தரிசனஸுகமொன்றுதான் வேண்டி
யது. அதுவும் கிடைத்துவிட்டது. ஆதலால், எமது மரு
மகள், வத்ஸனது சரீரத்தை இவ்வளவு நாட்களாய் உபசரித்
துப் பரிபாலித்துவருகிறாள். எங்களைக் கண்டு ஸங்கோ
சத்தினால் அவ்வுபசாரம் குறைவுபடக்கூடாது. நாங்கள்
அவனைப் பார்த்துக்கொண்டிருப்பவரேயன்றி வேறொன்றும்
செய்ய வியலாதவர். எங்கள் மருமகளின் அமிருத ஹஸ்
தம் பட்டுக் கொண்டிருப்பதால், இவனது சரீரம் சிரழியாம
லிருக்கிறது. இவள் அருகிலிருந்து உபசரிப்பதற்கு நாங்கள்
தடைசெய்பவராயிருத்தலாகாது. ஆகவே நாங்கள் வெளியே
போகிறோம்' எனக் கூறி வெளிவந்தனர். மஹாராஜாவுக்காக
வெளியே வாஸஸ்தலமொன்று அமைக்கப்பட்டிருந்தது.
ஆனால், தாராபீடன் அங்கே செல்லாமல் இருஷியைப்போல
அவ்வாச்ரமத்திலிருந்து ஓர் லதாமண்டபத்திற்குச் சென்
றுட்கார்ந்தான். தன்னைப்போலவே மனம் வருந்திய மன்ன

வர் பலர் இவனைச் சூழ்ந்து நின்றனர். இவன் அவர்களைக் கௌரவப் படுத்தி இங்ஙனம் மொழிந்தான்:--'இப்பொழுது, யான் இத்துயரம் நேர்ந்ததால் வைராக்கியங்கொண்டு இந்நிலைமையை ஏற்றுக்கொண்டதாக நீங்கள் எண்ணவேண்டாம். சந்திராபீடன் மனைவியுடன் இருக்கையில், யான் அவனது முகத்தைப் பார்த்துவிட்டு, இராஜ்யபாரத்தை அவனிடம் ஏற்றிவைத்து அப்பால் அடவியில் எவ்விடத்திலேனும் ஓர் ஆச்சிரமஞ் சென்று, அந்திமவயதைக் கழிப்பதாக முன்னமே ஆலோசித்திருந்தேன். அது தெய்வச்செயலாய் இவ்வாறு ஸம்பவித்தது. விதியை வெல்ல எவராலாகும்? வெகு நாட்களாகக் கோரியதை நிறைவேற்ற ஸங்கர்ப்பம் இப்பொழுது நேரிட்டது. நீங்கள் இதை ஆமோதிப்பீர்களாக' என்றுரைத்து, அதுமுதலாக அரசனுக்கேற்ற வைபவங்களையெல்லாம் விலக்கிவிட்டு, அரண்ணியவாஸத்திற்கு உசிதமான நடவடிக்கைகளை ஏற்றுக்கொண்டான். இருஷிகளைப்போலவே மாநிழலில் வஸித்து, காய்கிழங்குகளைப் புசித்து, ஐம்பொறிகளையும் அடக்கித் தவம்புரிந்துகொண்டு, காலை மாலைகளில் சந்திராபீடனது சரீரத்தைக் கண்டுகொண்டு, இன்பமாகவே விலாஸவதீ, சுகநாஸன் முதலியவர்களோடு அவ்விடத்தில் இருந்து வந்தான்."

ஜாபாலி மாமுனிவர் இங்ஙனம்மொழிந்து, புன்னகை புரிந்து, இக்கதையைக் கேட்டுக்கொண்டிருந்த முனிவர்களை நோக்கி முடிவாக இவ்வாறு கூறினர்:—"இக்கதையின் சுவை உங்களுடைய மனதைப்போல என் மனதையும் கவர்ந்துவிட்டது. எதைக் கூறவேண்டுமென முயன்றேனோ, அதை விளக்குவதற்குக் கதையின் சுவையினால் எதையெதையோ ஒன்றோடொன்றுள்ள ஸம்பந்தத்தைக் கருதி, வெகு தூரம் மொழிந்து கொண்டு வந்து விட்

டேன் : இக்கிளியின் வரலாற்றைப் பற்றிய முடிவான அம்ச
மென்னவென்றால் :—புண்டரீகன் என்பவன் சிற்றின்பத்திற்
பற்றுதலால் மனம் தடுமாறி தீவினைக்குள்ளானவனாய், தைவ
லோகத்திலிருந்து கர்ம பூமியில் விழுந்து சுகநாஸனிடம்
'வைசம்பாயனன்' என்னும் புதல்வனாகப் பிறந்தான். அவனே
மீண்டும் தனது ஒழுக்கத்தவறுதலாலேயே தன் தந்தையின்
கடுஞ்சினத்துக்கும் பாத்திரமானான் ; அத்தந்தையின் திட்டுத
லும், மஹாச்வேதையின் சாபமும் அவனையே இக்கிளியாகப்
பிறக்கச் செய்தன. இது இப்பறவையின் வரலாறு".

"சூத்திரக மஹாப்பிரபோ! அம்மஹான் ஜாபாலி
முனிவர் இவ்வரலாற்றை மொழிந்து வருகையிலேயே,
அவ்விளம் வயதிலேயே தூங்கி யெழுந்தவனையொப்ப
எனக்கு முற்றிலும் பூர்வஜன்ம நினைவு வந்து, ஸகல வித்தை
களும் எனக்கு விளங்கத் தோன்றின. மனிதனைப்போல்
தெளிவாகப் பேசுவதற்கு வாக்கும் எனக்கு உண்டாயிற்று.
இனி அதிகமாய் மொழிவதேன்! யான் மானிடவுடல் ஒன்
றைத் தவிர்த்து, மஹாச்வேதையினிடம் முன்னிருந்த அன்பு
முதலாக மற்றெல்லாவற்றையும் அந்த க்ஷணமே அடைந்து
விட்டேன். அங்ஙனமே உள்ளத்தில் ஆவல் அதிகரித்து,
மஹாமஹிமை பெற்ற ஜாபாலியை நோக்கி, மிக்க பயத்
துடன் மெதுவாக விண்ணப்பம் பண்ணலானேன் :—'ஐயன்
மீர்! யான், தமது அருளால் அறிவு பெற்றவனானேன்.
முற்பிறப்பிலுள்ள உறவினர் அனைவருமே எனது நினைவுக்கு
வந்தனர். அவர்களை நினைத்து என் மனம் துடிக்கின்றதே!
மற்றவர் இருக்கட்டும்; சந்திராபீடனைச் சிந்தித்தே என் சித்
தம் சிதறிப்போவதுபோல் தோற்றுகின்றது! யான் இறந்த
தாகக் கேள்வியுற்றதும், அவனது இருதயம் விரிந்து விட்ட
தல்லவா? அவனது பிந்திய பிறப்பின் வரலாற்றை தயை

கூர்ந்து கூறியருளவேண்டும். ஏனெனில், யான் அவனிருக்குமிடம் சென்று, அவனுடன் வஸித்தால் "இப்பறவையின் உடலை யடைந்திருப்பதும் துன்பமுண்டாக்காமலிருக்கும், இதைக் கேட்ட ஜாபாலிமாமுனிவர், அன்புடனும் கோபத்துடனும் 'அடா துஷ்ட! நீ எவ்வித சித்தசாபல்யத்தினால் இந்த நிலைமையை அடைந்தனையோ, அத்துர்க்குணத்தை இன்னும் விட்டாயில்லை! இன்னும் இரண்டு இறகுகள் கூட நன்கு முளைக்கவில்லையே! உனக்கு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் திறமை வரட்டும். அதன்பின்பு என்றனை வினவுவாயாக' எனக் கூறினார். ஹாரீதன் குதூஹல மேலிட்டவனாய், 'தந்தையே! இருஷிஜாதியைச் சேர்ந்தவனுக்கு, உயிரைத் தாங்கவுங்கூடாமல் சிற்றின்பத்தில் அவ்வளவு பற்றுதல் எங்ஙனம் உண்டாயிற்று? தைவலோகத்திற் பிறந்தவனுக்கு அங்ஙனம் ஆயுள் அற்பமாவதேன்?' என்று விஸ்மயத்துடன் வினவினான். ஜாபாலி முனிவர் அதற்கு மறுமொழி யுரைக்கலாயினர்.—'வத்ஸ! இதன் காரணம் வியக்தமானதே; இவன், கேவலம் காமமோஹாதிமயமான ஸ்த்ரீவீர்யத்திலிருந்து பிறந்தவன்; ஒரு பொருள் எத்தகைய வஸ்துவிலிருந்து உற்பத்தியாகின்றதோ, அது அத்தகையதாகவே இருக்கும் என்று வேதமும் கூறுகின்றது. உலகத்திலும், காரியங்களெல்லாம் பெரும்பாலும் காரணகுணங்களைப் பெற்றவையாகவே காணப்படுகின்றன. அங்ஙனமே ஆயுர்வேதத்திலும் பிரமாணமுண்டு. ஆதலால், இவனும் உற்பத்திக்கேற்றவாறு சிற்றின்பத்தில் அவ்வளவு பற்றுதலைப் பெற்றான். மரணமும் அங்ஙனமே உண்டாயிற்று. இப்பொழுதும் இதற்கு ஆயுள் அற்பமே. சாபத்தின் இறுதியில், இதற்கு அழிவற்ற ஆயுள் ஏற்படும். இத்துடன் கதை இருக்கட்டும். கதையின் சுவையினால்

நம்மையறியாமலே இரவும் கழிந்துவிட்டது. இதோ, சந்திர பிம்பமும் ஒளிமழுங்கி அஸ்தமிக்கின்றது. பம்பாஸரஸ்ஸின் நீர்ப் பறவைகளது உதயகால ஆர்ப்பரிப்பும் கேட்கின்றது. அக்னிஹோத்ராதிகளைச் செய்யும் நேரம் நெருங்கி விட்டது" என்று மொழிந்து, கூட்டத்தைக் கலைத்து எழுந்தனர்.

ஜாபாலிமஹர்ஷியும், இக்கதையைக் கேட்டு இன்பமுற்ற மற்ற முனிவர்களும் சென்றதும், ஹாரீதன் என்றனைத் தன் பர்ணசாலைக்கு எடுத்துப் போய் விட்டுவிட்டு, காலைச் சடங்குகளைச் செய்யப் போனான். உடனே எனக்கு மனதில் துயரம் குடிகொள்ள, இங்ஙனம் சிந்தித்தேன்:—'பல ஜன்மங்களிற் பண்ணிய ஸுக்ருதத்தால் மனித ஜன்மம் பெறுகிறோம். அந்தணர் குலத்திற் பிறப்பதோ அதிலும் மேலானது. முக்தியை யெளிதிற் பெறக்கூடிய முனிவர் தர்மம் அதினும் உயர்ந்தது. இவ்வினைத்தோடும் விண்ணுலக வாஸம் கிடைப்பது அரிதிலும் அரிது. இவ்வளவையும் அடைந்திருந்த யான், திடீரெனத் தீவினையில் மனதைச் செலுத்தியதன் பயனாக என்னை எதற்குமுதவாத நிலைமையில் வீழ்த்திக்கொண்டேன். பயனற்ற இச் சிறு பறவையுடலைப் பரிபாலிப்பதினும் மாய்த்துக் கொள்வதே மேல். பலவகையிலும் எனக்குத் துன்பம் தர விரும்பிய தைவத்தின் கோரிக்கையும் நிறைவேறட்டும்' என்று எண்ணி, உயிரிழக்க விரும்பி, மூச்சையடக்கிக் கண்களை மூடிக்கொண்டிருந்தேன். அச்சந்தர்ப்பத்தில் ஹாரீதன் வந்து, என் தந்தை ச்வேதகேதுமுனிவரிடமிருந்து கபிஞ்ஜலன் என்னைப் பார்க்க வந்திருப்பதாகக் கூறினான். 'அப்படியா' வென்று, ஆவலுடன் நன்றிகெட்ட துராத்மாவான நான் தலைநிமிர்ந்து பார்க்க, சடைமுடிகள் கலைந்தசையத் துரிதமாக ஆகாயமார்க்கத்திலிருந்து இறங்கிவரும், ஸற்குணசாலியான கபிஞ்ஜலனைக் கண்டேன். என் கண்

களில் உடனே நீர் சொரிந்தது. அவனை நோக்கி 'என் நண்ப ! கபிஞ்ஜல ! நான் இரண்டு ஜன்மங்களெடுத்த பிறகும் உன்னைக் காணக் கொடுத்து வைத்தேனே ! உனக்கு ஆதரவுடன் எழுந்து வந்து ஆஸனமளிக்கவும், உன்னை ஆலிங்கனம் செய்யவும் வகையில்லாமல் இவ்வெளிய நிலைமையிலிருக்கின்றேனே ! என் செய்வேன்!" என்று யான் துயரமுறுவதைக் கபிஞ்ஜலன் கண்டு, இரு கரங்களாலும் என்னை யெடுத்து, என் கால்களைத் தன் சிரத்தில் ஒத்திக்கொண்டு, புலம்பினான். அவனுக்கு மீண்டும் கூறலானேன்:—'நண்பனே ! நான் பிறவியிற் பறவையானேன் ; உன் துயரத்துக்கு எப்பரிஹாரமும் செய்ய வல்லமையற்றவன். நீ பாலனாயிருந்தும் இச்சம்ஸார பாசத்திற் சிக்கிக் கொள்ளவில்லை. விவேகமிழந்த என்னைப் போலவே நீயுமா அழுவது ? உட்காரு. தந்தை க்ஷேமமா ? என்மீது சினங்கொண்டாரல்லவா ?' அதற்குக் கபிஞ்ஜலன் "என் நண்ப ! நமது தந்தை க்ஷேமம். நமது செய்திகளை யோகத்ருஷ்டியினால் அறிந்து, இத்துன்பங்களுக்குப் பரிஹாரங்களையும் செய்ய முயன்றார். ஆகவே நான் குதிரை ஜன்மத்தை விடுத்து உடனே அவர் பாதங்களைப் போய் தொழும்படியான நிலைமை யுண்டாயிற்று. அவரிடம் முதலில் யான் நெருங்கிப்போக பயந்தேன். அவர் அது கண்டு என்றனை அன்புடன் அழைத்து 'வத்ஸ ! பயப்படாதே ! உன்றனிடம் குற்றமில்லை. குழந்தைகள் பிறந்ததும், தீர்க்காயுளையளிக்கவல்ல சடங்குகளைச் செய்யாமல் அலக்ஷ்யமாயிருந்தேன். இஃதனைத்தும் என் தவறால்நேர்ந்தது. உங்களுக்கு நேர்ந்த அச்சங்கடங்களைப் பரிஹரிப்பதற்கான சடங்குகள் பெரும்பாலும் நிறைவேறிவிட்டன. நீ வருத்தமுறவேண்டாம். நீ என்னிடத்திலேயே இருப்பாயாக' என்று ஆஞ்ஞாபித்தருளினார். இன்று காலை என்றனை யழைத்து, நீ கிளி

ரூபத்துடன் ஜாபாலியின் ஆச்ரமத்திலிருப்பதாகவும், பூர்வ ஜன்மத்து நினைவு முதலியது வந்து விட்டதாகவும், கூறி, உன்னை அனுக்கிரஹித்ததாகத் தெரிவித்துவருமாறு என்னை இங்கே அனுப்பினார். மேலும் உன் மாதாவான மஹாலக்ஷ்மியும் உன் துன்பம் நீங்குவதற்கான சடங்கில் ஒரு பரிசாரிகையா யிருந்து வருவதாகவும், இத்துஷ்கர்மம் உனக்கு முற்றுபெறும் வரையில், இன்னும் சொற்ப காலம் ஜாபாலி மாமுனிவரின் பாதங்களைத் தரிசித்து இவ்வாச்ரமத்திலேயே நீ இருந்து வரவேண்டுமென்றும் உன்னிடம் நமது தந்தை யறிவிக்கச் சொன்னார். இதைக் கூறிவிட்டு, கபிஞ்ஜலன் வருத்தமுற்று நின்றான். அதற்கு யான் 'நண்ப ! பாவியான என் பொருட்டு நீயும் அச்வமாகப் பிறந்தும், அமுதபானம் செய்யவேண்டிய முகத்திற் கடிவாளங்களால் இழுக்கப்பட்டு அளவற்ற ஆயாஸங்களையும் அனுபவிக்க நேர்ந்ததே!' என்று முற்பிறப்பின் செய்திகளைக் கூறிக்கொண்டு, யான் பறவையாயிருப்பதையும் மறந்து ஒருவாறு இன்பமுற்றேன். இதற்குள் மத்தியான்ன காலம் வரவே, கபிஞ்ஜலன் உணவுண்டு, சிறிதுநேரம் என்னுடன் இருந்து விட்டு, என்னை நோக்கி 'நமது பிதா உனக்குத் தேறுதல் கூறவும், வினைப் பயன் முடியும் வரையில் இவ்விடம் விட்டுச்செல்லவேண்டா மென்று உன்னிடம் சொல்லவும் என்றனை அனுப்பினார். மேலும் அவர் செய்துவரும் சடங்கில் நானும் பெரிதும் சில முயற்சிகளைச் செய்துவருகிறேன். ஆகவே நான் போய் வருகிறேன்' என்று கூறி, கபிஞ்ஜலன் ஆகாயத்திற் கிளம்பிச் சென்றான். பிறகு சற்றுக்கெல்லாம் ஹாரீதன் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வந்து, மூன்றாவது யாமத்தில் தன்னுடன் என்னையும் ஆஹாரம் அருந்தச் செய்தான்.

இவ்வாறு வளர்ந்து வருகையில், சிறிது நாட்களில்

எனக்குப் பறக்கும் திறமையுண்டாயிற்று. பிறகு ஒரு காட்
காலையில் அங்கிருந்து வடதிசை நோக்கி மஹாச்வேதை
யிருக்கு மிடத்தைக் கருத்தில் வைத்து வெளியே பறந்து
சென்றேன். புதியதாகப் பறக்க முயன்றதால், சிறிது தூரம்
போனதும் என் இறகுகள் மிகக்களைத்துப்போய், ஓர் மரப்
புதரின்மீது என்னையுமறியாது இறங்கியுட்கார்ந்து அங்ஙனமே
நித்திரை போனேன். சிறிதுநேரங் கழித்து விழித்துப்
பார்க்கையில் யான் கட்டப்பட்டிருந்தேன். அப்பொழுது
எனக்கு எதிரில் யமபடன் போல் ஒருவன் நின்றுகொண்
டிருந்தான். அவனைக் கண்டு இச்சரீரம் தொலைந்ததென்று
நிராசைகொண்டு, 'அப்பா! நீ யார்? ஏன் என்னைக் கட்டி
னாய்? என் புலாலில் உனக்கு விருப்பமானால் நான் தூங்கும்
போதே என்னைக் கொன்றிருக்கலாமே? நான் குற்றமேதும்
செய்யவில்லையே. விநோதத்திற்காக இவ்விதம் செய்தாயா?
அவ்வாறாயின் வேடிக்கைப் பார்த்தது போதும்! என்னை
விட்டுவிடு' என்று மன்றாடிக் கேட்டேன். அதற்கு அவன்
'நான் ஜாதியிற் சண்டாளன்; ஆயினும் உன்னைக் கட்டியது
உன் இறைச்சியில் இச்சையினாலுமல்ல, விநோதத்திற்கு
மன்று. என் யஜமானன் ஒரு பறைச்சேரிக்கு அதிகாரி.
அவனுக்கு இளம்பிராயத்தில் ஒரு மகள் உண்டு. அற்புதக்
கிளியென்று உன்னைப் பற்றி அவள் அறிந்தாள். உன்றனைப்
பிடித்து வரபலருக்கு அவள் கட்டளையிட்டாள். நான் செய்த
புண்ணியம், நீ என்னிடம் அகப்பட்டனை. அவளிடம் உன
னைக் கொண்டு சேர்த்து விடுகிறேன்; இனி உன்னைக் கட்டி
வைப்பதோ, விட்டுவிடுவதோ எதற்கும் அவள் அதிகாரி'
என்றான். அதைக் கேட்டு எனக்குச் சிந்தை யதிகரித்தது:—
'சீ! எனது கர்மம் இப்படியா? ஐயோ! பறைச்சேரியிலும்
யான் நுழையவேண்டுமா? யான் புனிதமான புண்டரீகனால்

லவா! என் ஜந்மத்தைச் சுடவேண்டும்' என்று பலவாறு சிந்தித்து, மீண்டும் அவனை மன்றாடி இங்ஙனம் கேட்டேன். 'அப்பா! யான் முற்பிறப்பை யறிந்தவன்; முனிவர் குலத்தி லுதித்தவன். யான் சண்டாள வாடியிற் புகுவது பெரும் பாதகம். இச்சங்கடத்திலிருந்து என்றனை மீட்பாயாயின், உனக்கு தர்மமுண்டு. இம்மையிலும் மற்றவர் எவருமறியாது என்றனை விடுத்ததனாற் கெடுதியும் உனக்கில்லை' என்றேன். அதற்கு 'ஓ! நீ யென்ன மூடனைப்போல் பிதற்றுகின்றாயே! யஜமானனின் கட்டளையை யாருமறியாமலிருந்தால் யான் மீறி நடக்கலாமோ? நாம் செய்யும் வினைகளுக்கு லோகபாலர் கள் ஸாக்ஷிகள் என்பதையும் அறியாயோ? என் அதிகாரியின் ஆஜ்ஞைப்படி நான் உன்றனைக் கொண்டு போகின்றேன்' என மொழிந்து கொண்டே, பறைச்சேரிக்கு என்னை யெடுத் துப் போனான். ஆங்கு சண்டாளச் சிறுவர்கள் பக்ஷி முதலிய பிராணிகளைப் பிடித்து வதை செயவதிலும், வேட்டை நாய் களை யேவி மிருகங்களைப் பிடிப்பதிலும் சுறுசுறுப்பாயிருந்த னர். மண்டையோடுகளைக்கொண்டு வீடு முதலியவற்றிற்கு வேலிகளிடப்பட்டிருந்தன. மாதங்கர்கள் மதுவையருந்தி மனம் போனவாறு திரிந்தலைந்தனர். முதுகாட்டிற் பிரவேசிப் பது போல அப்பறைச்சேரியில், அவனிடம் சிக்குண்டு யான் புகுந்தேன். என்னை அவன் கொண்டுபோய் அச்சண்டாள கன்னிகையிடம் ஒப்புவித்தான்.

யா[illegible], வெறுப்புடன் 'அம்மாதங்க மாது, தன் குலத் திற்கேற்றவாறு செய்யாமல், தூரத்திலேயே என்றனைக் கண்டு, கருணைபுரிந்து விடுதலை செய்வளா? இத்தகைய புண் ணியம் எனக்கு முண்டா? யான் இவ்விடத்தில் அடிவை யேன்.' என்றெண்ணுகையில் அவளும் மிக்க மலர்ந்தமுகத் துடன், இரு கரங்களாலும் என்றனை யெடுத்து, 'ஆ! எனது

அருமைப் புதல்வ! அகப்பட்டுக்கொண்டாய்! நீ தோன்றியவாறெல்லாம் திரிவதை இனி தகைந்துவிடுகின்றேன்' என மொழிந்துகொண்டே, ஓர் மரக்கூட்டைத் திறந்து, அதில் என்னை அடைத்து, இதிற் கவலையொழிந்து இருக்கக்கடவாய்' என்றாள். யான் இங்ஙனம் சிந்திக்கலானேன்.—'பெரும் ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டேனே! எனது நிலைமையைக் கூறி வேண்டிக்கொண்டு மீட்சி பெறலாமென்றால், யான் பேசுவதே எனக்கு இப்பொழுது பெருந்தீங்காக முடிந்தது. ஒரு கிளி அறிவுடன் நன்கு பேசுவதாயறிந்தல்லவோ என்னை இவள் பிடித்து வரச் செய்தாள்? யான் கஷ்டத்தை முறையிட்டால் இவள் என் இலக்ஷ்யம் செய்யப்போகிறாள்? இவளுக்கு யான் புதல்வனா? உடன்பிறந்தோனா! உற்றோனா? இனி மௌனமாயிருப்பதே நன்று. சண்டாள ஜாதியைச் சேர்ந்தவளாகையால், யான் பேசாமலிருப்பதைக் கண்டு அதிகமாக என்னைத் துன்பப்படுத்தலாம். பஞ்சமருடன் பேசுவதினும் துன்பங்களை யனுபவிப்பதே மேல். மௌனமாயிருந்தால் மனம் வெறுத்து என்னை விட்டுவிடவுங் கூடும். பேசினேனாயின் இவள் என்னை ஒருக்காலும் விடமாட்டாள். என் விதியிப்படியா? இருஷிகுலத்திற் பிறந்து, விண்ணுலகில் வஸித்து, அங்கிருந்து இக்கர்மபூமியில் வீழ்ந்ததென்ன! ஸாதாரண மானிடப்பிறவியிலிருந்து இப்பறவைப் பிறப்பையடைந்ததென்ன! பஞ்சமனது கையிற் பிடிபட்டு, கூட்டிலடைபட்டு, இப்பறைச்சேரியில் அகப்பட்டுத் தவிப்பதென்ன! இவ்வனர்த்த பரம்பரையெல்லாம் இந்த்ரியங்களைக் கட்டுப்படுத்தாததாலான குற்றமே; ஆகையால் வாக்கை மாத்திரமல்ல, ஸகல இந்திரியங்களையுமே இறுக்கக் கட்டிவிடு

கிறேன்.' என மனவுறுதி செய்துகொண்டு மௌனமாயிருந்தேன். பானமும் உணவும் கொண்டுகொடுக்கப்பட்டும், பட்டினியாகவே அத்தினத்தைக் கழித்தேன். மறுநாள் ஆஹாரவேளை அதிக்கிரமித்தது. என் மனம் துயரமுற்றிருந்தது. அச்சண்டாளகன்னிகை பலவகைக் கனிகளையும், நறுமணம் பொருந்திய குளிர்ந்த தண்ணீரையும் தானே எடுத்து வந்து, மிக்க அன்பார்ந்தவளை யொப்ப இங்ஙனம் கூறினாள் :—' சிந்தையொழிந்து ஜீவிப்பவையான பக்ஷிகளுக்குப் பசி தாஹம் உண்டா யிருக்கையில், உணவுகள் கிடைப்பின், அவை உபயோகிக்காமலிரா. நீயோ பூர்வஜன்மத்து அறிவு உண்டாய் பகுத்தறிவு பெற்ற ஓர் அபூர்வமான பிறவி. பகுத்தறிவில்லாப் பறவையின் ஜாதியிற் பிறந்தாய்; ஆகவே உனக்குப் புஜிக்கத் தகாதது யாது? ஆதியிலேயே நீ உன்னை விவேகந் தவறாது வைத்துக் கொள்ளவில்லை; இப்பொழுது, தான் செய்த வினைக்குத் தகுந்த ஜாதியிற் பிறந்தபின், இப்பிறப்புக்கேற்றவண்ணம் செய்வதால், உனக்குத் தோஷமில்லை. மேலும் நான் கொண்டுவந்தவைகளுள், பஞ்சமர் பரிசித்ததென்று பரிஹரிக்கக்கூடியதும் ஒன்றுமில்லை. கனிகளை எவர்களிடமிருந்தும் பெற்றுக்கொள்வதுண்டு. தண்ணீரும், சண்டாளரது கரத்திலிருந்து புவியில் வீழ்ந்தபின் புனிதமாகின்றதெனவே உலகத்தோர் கூறுவர். ஆனதுபற்றி, நீ பசியினாலும்நாவறட்சியினாலும் உன்றனை மாய்த்துக்கொள்ள வேண்டாம்' என்ற அவளது வார்த்தையினாலும், விவேகத்தாலும் யான் மனம் வியந்து, அவ்வுணவுகளையேற்றுக்கொண்டேன். ஆனால் மௌனத்தைமட்டும் யான் விட்டவனன்று.

இங்ஙனம் சில காலம் செல்ல, எனக்குப் பால்யப் பருவமும் கழிந்து வந்தது. ஒரு நாள் பொழுதுவிடிந்ததும்

யான் நித்திரையிலிருந்து விழித்துக்கொண்டதும் இப்பொற்கூட்டில் என்றனை இருக்கக் கண்டேன். சூத்திரகமஹாப்பிரபுவே! தேவரீர் அச்சண்டாள கன்னிகை எவ்விதமிருக்கிருள் என்பதையும் கண்டிருக்கிறீர். அப் பறைச்சேரி யாவும், தேவநகரம்போல் ஆய்விட்டது. இஃ தென்னவென்று என் மனம் அவ்விந்தையறிய ஆவல்கொண்டது. அப்பொழுது நியமமிழந்துவிஷயங்களை வினவுவதற்கும் ஆவல் கொண்டேன். உடனே இவள் இப்பொற் கூட்டுடன் என்றனை யெடுத்து இதோ தேவரிடம் கொண்டுவந்து விட்டாள்., ஸ்வாமி! இது செய்தி. இனி 'இக்கன்னிகை யார்? தான் பஞ்சமஜாதியைச் சேர்ந்ததாகப் பிரகடனம் பண்ணியதேன்? என்றனைக் கட்டிவைத்ததற்குக் காரணம் யாது? என்னை இங்கு ஏன் எடுத்துவந்தாள்?' என்கிற இவ்விஷயங்கள் எனக்கே தெரியவில்லை. இதை யெல்லாம் தெரிந்துகொள்ள உங்களைப் போலவே எனக்கும் ஆவலாயிருக்றது" என்று அக்கிளி கூறி முடித்தது.

சூத்திரகமஹாராஜன் இவ்வாலாறுகளைக் கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்தான். உடனே மற்றச் செய்திகளையறிய ஆவல் கொண்டு, வாயிற் காப்பவளை அனுப்பி, அச்சண்டாள கன்னிகையை அழைத்துவரச் செய்தான். சற்றுக் கெல்லாம் அவள் இம்மன்னவனுக்கு முன்பு வந்து, ஓர் மேடையின்மீது நின்று கொண்டு, கம்பீரமாக இங்ஙனம் மொழிந்தாள்:—"ஓ புவன பூஷண! ரோஹிணீநாயக! உன்னுடையவும், மதி கெட்டப் பிராணியான இதனுடையவும் செய்திகளை முற்றிலும் நீ இதன் வாயிலாகவே செவியுற்றாய். தான் செய்த தீவினைகளின் பயனுக்கே இப்பிறப்பு முதலிய துன்பங்கள் நேரிட்டதாகத் தனக்குத் தெரிந்த பின்பும், இது தந்தையான ச்வேதகேது மாமுனிவரின் ஆஞ்ஞையை மீறி, ஜாபாலியின் ஆச்ரமத்தை

விட்டு, மனைவியினிடம் போகப் புறப்பட்ட வரலாற்றை யும் தானே பெற்றித்ததல்லவா? யான் இத்துராத்மாவின் மாதா, மஹாலக்ஷ்மி. இது அவிவேகத்தினால் அவ்விதம்மோசு முயன்றதை ச்வேதகேது திவ்ய திருஷ்டியால் தெரிந்து கொண்டு, எனதிடம் இவ்வாறு கூறினார்:—'தகாத தைச் செய்ய முயன்றவன் எவனும் தானே தன் தவறுதலை யறிந்து அனுதாபப்படும் நிலைமை நேர்ந்தாலேயொழிய துன் மார்க்கத்திலிருந்து திரும்பமாட்டான். உன் புதல்வன், பறவைப்பிறப்புக்கும் கீழான ஜாதியில் விழுந்திடு வான். ப்ராரப்தமான இக்கர்மம் முடிவு பெற்று, மற்றொரு கர்மம் இவனுக்கு ஸம்பவிப்பதற்கு முன்பே, மானிடலோகத் திலேயே இவனைக் கட்டிப் போடுவது நலம். இதற்குத் தன் துர்நடத்தையை நினைத்து அனுதாபமுண்டா குமாறு நீ முயலவேண்டும்'. இவ்வுத்தரவின்படி, இதற்கு விநயமுண்டாகவேண்டுமென இதைக் கட்டிப் போட்டேன். இதன் கர்மம் முடிவடைந்தது உங்கள் இருவரையும் கொல் லைப்படுத்திய சாபமும் விமோசனமாயிற்று. இச்சமயத்தில் நீங்கள் இருவரும் ஓரிடத்தில் இருந்து இன்ப மனுபவிப்பீர்கள் எனக் கருதி, யான் இதை உன்றனிடம் கொண்டு சேர்த்தேன். இவ்வுலகத்தோரிடம் சேராமலிருப்ப தற்கே யான் பஞ்சமஜாதியைச் சேர்ந்தவளாகப் பிரகடனமா கிசெய்தது. இனி நீங்கள் இருவரும் ஒன்றாகவே, பிறப்பு, மூப்பு, பிணி முதலான துன்பங்கள் நிறைந்த அத்தேகங்க ளைத் துறந்து, தம் மனமுவந்த ஜனத்துடன் கூடி இன்பமநு பவிக்கக் கடவீர்கள்" என அவள்மொழிந்து கொண்டு, அந்த க்ஷணமே ஆகாயத்திற் கிளம்பி அந்தர்த்தானமானாள்.

உடனே சூத்திரகனுக்கு முற்பிறப்பின் நினைவு முற்றி லும் உண்டாய், அவன் மனம் காதம்பரியை அடைக்கலமாய்

அடைந்தது. அவன் கண்கள் தாரைதாரையாக நீரைச் சொரிந்தன. அவனது முகவொளி முற்றிலும் மாறிற்று. அனலால் வாட்டிய பசுமரத்திலிருந்து சாறு வடிவதுபோல் தாங்கக்கூடாத மன்மத தாபத்தினால் அவனுடலிலிருந்து வரிவரியாக வியர்வை நீர் வடிந்தது. தன் கடமையான இராஜ தர்மங்களிலும் கருத் தொழிந்தது. விரிவாகக் கூறுவானேன்? அவனுடல் அசைவற்று கட்டையைப்போலாயிற்று. வைசம்பாயனனும் தன்னைப் புண்டரீகத் தன்மையனாகவே தியானித்து, அவனது மனதும் மஹாச்வேதையினிடம் லயித்து, சூத்திரகனுக்குக் கூறிய நிலைமையை முற்றிலும் பெற்றான்.

மனதைக் கலக்கும் மன்மதனது வலதுகைபோன்ற வஸந்தருதுவும் தோன்றிற்று. தம்பதிகளுக்குள் அன்னியோன்னியப் பிரீதிபாகும் பாசத்தை வலுப்படுத்துவதல்லவோ வஸந்தருது? காதம்பரிக்குச் சந்திராபீடன் மீது அச்சமயம் அதிகரிக்கும் காதலைப்பற்றி நாம் விஸ்தரித்துக் கூற வேண்டிய அவசியமில்லை. ஒரு நாள் மாலைப் பொழுதில் மிகக் கவலை கொண்ட காதம்பரீ, மஞ்சனமாடிவிட்டு, மன்மதபூஜை செய்து, அம்மன்மத தேவதையின் முன்பாகவே, ஸுகந்தம் நிரம்பிய ஜலத்தைக் கொண்டு சந்திராபீடனை நீராட்டி வைத்து, தன் உள்ளம் கசிய, கண்களும் பொசிய நெடு நேரம் அவனைக் கண்ணோக்கி, ஜீவித்திருப்பது போலவே தோற்றிய சந்திராபீடன் கழுத்தைத் தன் கண்களை மூடிக்கொண்டே கட்டிக் கொண்டாள். நெடுந்தூரம் சென்றிருந்த அவன் ஆவி உடனே அவனது தேகத்திலூடுருவிப் பாய் அவன் உணர்ச்சியுள்ளவனானான். விடியற்காலத்துக் கமலமலர்கள் போல அவனது கண்களும் மெதுவாக மலர்ந்தன. நித்திரையிலிருந்து விழித்தவன் போலப் புரண்டெழுந்தான். காதம்பரீ அவனது கழுத்தை

ஆலிங்கனம் செய்தவாறு அவன் உயிர்த்தெழுந்திருப்பதைக் கண்டு, மிகவும் திகைத்துப் போனாள். அப்பொழுது சந்திரா பீடன் 'என்ன காதம்பரி! உனக்கு இவ்வளவு பயமா? நீ ஆலிங்கனம் செய்து கொண்டதாலல்லவோ யான் உயிர் பிழைத்தெழுந்தேன்? நீ, அமுதத்திலுதித்த அப்ஸரஸுக்களின் குலத்திற் பிறந்தவளாயிற்றே! நீ இவ்வளவு நாட்களாக என்னைப் பரிசித்துக்கொண்டிருந்தும், சாபவிமோசனமாகாமையால், யான் பிழைத்தெழுந்தேனில்லை. ஆனால் ஆவி துறந்திருந்தும் என் தேகம் உன் கரத்தின் பரிசத்தினால் சிதழியாமல் இருந்து வந்தது. இப்பொழுதே இரண்டாம் முறை யான் சாபத்திலிருந்து நீங்கினேன். உன் பிரிவாற்றாமையால் பெருந்துயரமளித்த தான சூத்திரகன் என்று பெயர் கொண்ட அம்மானிட தேகத்தையும் விட்டேன். இச்சரீரத்தினிடம் உனக்கு விசேஷப் பிரீதியாகையால், யான் இது காறும் உனதுதவியால் பரிபாலிக்கப் பெற்று வந்த இதை வந்தடைந்தேன். இனி இவ்வுலகமும் சந்திரலோகமும் உன் கால்களிற் கட்டப்பட்டன. அன்றியும் உனது உயிர்த்தோழியான மஹாச்வேதையின் காதலனும் என்னுடன் கூடவே சாபத்திலிருந்து விடுதலையடைந்தான்' என்று சந்திராபீடனது சரீரத்தில் மறைந்துள்ள சந்திர மூர்த்தி மொழிந்து வருகையில், புண்டரீகன் கபிஞ்ஜலனது கரத்தைப் பிடித்துக்கொண்டு ஆகாயத்திலிருந்து இறங்கிவந்தான்; முன்பு மஹாச்வேதையின் மீது மோஹங்கொண்டு உயிர் துறக்கையிலிருந்த அதே வேஷத்தோடும், மார்பிலணிந்த அம்முத்து மாலையோடும் அவன் மிகுந்த மனோஹரமாயிருந்தான்.

சந்திராபீடன் அவனைக் கண்டு ஆலிங்கனம் செய்து 'நண்ப! புண்டரீக! முதல் ஜன்மத்து ஸம்பந்தத்தினால் நீ என்றனக்கு மருமகனென்றாலும், மறு ஜன்மத்தில் ஏற்பட்ட

மித்திரன் என்னும் பிரீதியைக்கொண்டே என்னுடன் நீ பழக 'வேண்டும்' எனக் கேட்டுக் கொண்டான். அச்சமயம் கேயூரகன் சித்திரரதனையும் ஹம்ஸனையும் பேரின்பச் செய்தியைச் செப்பிக் களிப்பூட்ட ஹேமகூடம் சென்றான். மதலேகையும் ஓடிப் போய், மிருத்யுஞ்ஜயமந்திரத்தை ஜபித்துவரும் தாராபீடன் முதலியவர்களது பாதங்களைப் பணிந்து, 'தேவ! பாக்கியசாலிகளானீர்கள்! இளவரசு, வைசம்பாயனன் இருவரும் உயிர்பிழைத்து எழுந்தனர்' என்று செய்தி யறிவித்தாள். பார்த்திவன் ஆனந்தபரவசனாய் விலாஸவதியை ஆலிங்கனம் செய்து கொண்டான்; சுகநாஸனையும் கட்டிக்கொண்டு பெருமைப்படுத்தி, அவ்விடம் சென்றான். சந்திராபீடனும், பரமானந்தத்துடன் முன் போலவே பிதாவைத் தொழுதான். தாராபீடன், உடனே ஒதுங்கி தன் பாதங்களிற் பணிந்த சந்திராபீடனை யெழுப்பி 'புதல்வ! உனது [illegible]வதோஷத்தினாலோ, அல்லது எமது புண்ணியங்களாலோ யான் உன்றனக்குப் பிதாவாக ஆனேன்; ஆயினும், உலகத்தோரால் பணியத்தகுந்த லோகபாலகனாயிருக்கின்றனை. அன்றியும், அடிபணியக்கூடிய அம்சம் யாதொன்று எனதிடம் உண்டோ, அதையும் உனதிடமே சேர்த்துவிட்டேன். ஆனதுபற்றி, இருவகையிலும் நீயே எம்மால் வணங்கத் தகுந்தவனாகிறாய்' என மொழிந்து கொண்டே, ஆயிரக்கணக்கான இராஜகுமாரரும் தானுமாக அவனைப் பணிந்தனர். விலாஸவதியோ அவனை உச்சிமுகந்து, ஆலிங்கனம் செய்துகொண்டாள். அவனும் அவளது அடிகளைப் பணிந்து, சுகநாஸனையும் வணங்கினான். சுகநாஸன், தன்னை அநுக்கிரஹித்ததும், இவன் தாய்தந்தையருக்கும், சுகநாஸனுக்கும், மனோரமைக்கும் 'இதோ தமது வைசம்பாயனன்!' எனப் புண்டரீகனைக் காட்டினான்-

அந்நிகழ்ச்சியிலேயே, கபிஞ்ஜலன் சுகநாஸனிடம் சென்று ச்வேதகேதுமாமுனிவர் தன்னிடம் சொல்லியனுப்பிய ஆஜ்ஞையைக் கூறினான்: 'இப்புண்டரீகனை வளர்த்தது மட்டுமே யான்; ஆயினும் இவன் உமது புதல்வனே. இவனுக்கும் உங்களிடமே பற்றுதலும் உண்டாய் விட்டது. ஆகையால் நீங்கள் அவன் வைசம்பாயனன் என்றே கருதுவீராக. ஆகவே சாபம் நீங்கியதும் உமதிடமே அனுப்பிவிட்டேன். மேலும் உலகத்திற் சந்திரனிருக்கு மளவும் அவன் தீர்க்காயுளைப் பெற்றுவிட்டான். அவனிடம் எனது ஆயுசத்தைச் சேர்ப்பித்து, எனது ஸத்வம் என்னும் ஜோதி இப்பொழுது தைவலோகத்திற்கும் மேலான ஸ்தானத்திற்குப் போகிறது.' இது ச்வேதகேது முனிவர் தமக்கு அனுப்பிய செய்தி எனக் கூறினான். சுகநாஸனும் 'கபிஞ்ஜல! மஹா மஹிமை வாய்ந்த அம்முனிவர் உலகத்தோர் அனைவரது மனதையும் உள்ளபடி யறிந்தவர். ஆகிலும் நமதிடம் பேரன்பினால் இங்ஙனம் ஆஜ்ஞாபித்ததாய் அறிகிறேன்' என்றான். அவரனைவரும் இவ்விதம் முற்பிறப்பின் செய்திகளைப்பற்றி ஸல்லாபம் செய்துவருகையில், அவர்களுக்கு இரவு கழிந்ததும் தெரியவில்லை. விடியற் காலத்திலேயே சித்திரரதன், ஹம்ஸன் இருவரும் முறையே தமது மனைவிகளான மதிரை, கௌரீ இவர்களுடன், ஸகல கந்தர்வராலும் பின்தொடரப்பட்டவராய் அவ்விடம் வந்து சேர்ந்தனர். அவ்விருவரும் வந்து, தைவச்செயலாய், தாராபீட சுகநாஸருடன் ஸம்பந்தம் ஏற்பட்டதை உவந்து மஹோத்ஸவஞ் செய்து மனமகிழ்ந்தனர்.

அச்சமயம் சித்திரரதன் தாராபீடனை நோக்கி 'நமது மாளிகையிருக்கையில் இவ்வரண்ணியத்தில் ஏன் இவ்வுத்ஸவத்தைச் செய்யவேண்டும்? உலக நடவடிக்கையை நாட

வேண்டுவதும் அவசியமே. ஆதலால் நமது இல்லத்திற்குச் செல்வோமாக. பிறகு, தமது தேசத்திற்கேனும், சந்திரலோகத்திற்கோ போகலாம்' என்றனன். தாராபீடன், 'ஓ. கந்தர்வமன்னவ! எவ்விடத்திற் பெரும் பாக்கியத்தினுல் ஒப்பற்ற இன்பம் ஏற்படுகின்றதோ, அதுவே காடாயிருப்பினும் வீடாம். அன்றியும், யான் இப்பொழுது இல்லறவாழ்க்கையனைத்தையுமே உமது மருமகனிடம் சேர்த்துவிட்டேன். மனைவியுடன்கூட இவனை இல்வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்க அழைத்துப்போவீராக' என மறுமொழி கூறினுன். அங்ஙனமே சித்திரரதனும் சந்திராபீடனை அழைத்துக்கொண்டு ஹேமகூடம் சென்று, காதம்பரியுடன் தனது இராஜ்யம் அனைத்தையுமே சந்திராபீடனிடம் ஒப்புவித்தான். ஹம்ஸனும், மஹாச்வேதையுடன் தனது செங்கோலைப் புண்டரீகனுக்குத் தந்தான். சந்திராபீட வைசம்பாயனர்; தமது மனதுக்கின்பமான மனைவிகளைப் பெற்றாலேயேகிருதார்த்தர்களாய், மற்றெதையும் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. இவ்வாறு அனைவரும் இன்பமுற்று வாழ்க்கையில், காதம்பரீ மற்றொரு கால், ஒருவாறு வருத்தமுற்று சந்திராபீடனுருவமான சந்திரனை நோக்கி 'ஆர்யபுத்திர! அனைவரும் மீண்டும் உயிர் பிழைத்தெழுந்து நாம் ஒன்று சேர்ந்தோமே! அவ்வேளைப் பத்திரலேகை மட்டும் [illegible] தியிற் காணப்படவில்லையே! அவள் செய்தி யாது?' என வினவினுள். அவன் அதற்கு "என் காதலி! அவள் எது இவ்விடத்தில்? அவள் ரோஹிணியல்லவோ? அவள், எனக்குச் சாபம் நேர்ந்ததால் வருத்தமுற்று, யான் தனியாக மர்த்யலோகத்தில் வருத்தமுறுவதை விரும்பாதவளாய், யான் பிறந்ததும், எனக்கு முன்பே பூலோகத்திற் பத்திரலேகையென்னும் பெயருடன் பிறந்தாள். நான் மீண்டும் சூத்தி

கனக ஜன்மமெடுக்கையிலும், அவள் என்னுடன் வர விரும்பி, யான் பலமாகத் தடுத்துச் சந்திரலோகத்திலேயே நிறுத்தி விட்டேன். நீ அவளை அவ்விடத்திற் காண்பாய். காதம்பரி அதைக் கேட்டு, சந்திரபத்னியான ரோஹிணியின் பதிவ்ரதா தர்மத்தையும் பெருந்தன்மையையும் வியந்து, பெரிதும் இன்பமுற்றாள்.

இங்ஙனம் சந்திராபீடன், ஹேமகூடத்திற் பத்து நாட்கள் இருந்தான். பிறகு மனமகிழ்வடைந்த மாமி மாமனார்களிடம் விடை பெற்று, பிதாவின் பாதமூலத்திற்கு வந்தான். அங்கு வந்திருந்து தன்னைப்போல் அவ்வளவு நாட்களும் கிலேசங்களை அனுபவித்த மற்ற அரசரனைவரையும் அவரவருக்கேற்றவாறு புகழ்ந்து கௌரவித்து, புண்டரீகனிடம் இராஜ்யபாரத்தையு மேற்றிவைத்தான். பிறகு சில காலம் அவன் பிறந்தவிடமென்னும் பிரீதியினால் உஜ்ஜயினியிலும், சில ஸமயம் கந்தர்வராஜனிட்டு கௌரவத்தினால் ஹேமகூடத்திலும், மற்றும் சில காலம் ரோஹிணியினிடமுள்ள அபிமானத்தினால் சந்திரலோகத்திலும், காதம்பரியின் விருப்பத்திற்கேற்ப மற்றும் பல மனோஹரமான இடங்களிலும் வஸித்து, நீடூழி காலம் நிகரில்லாவின்பம் அனுபவிக்கலானான். சந்திராபீட ரூபியான சந்திரனேயல்ல. [illegible]னுமே எதுங்குறைவின்றி அவனைப் போலவே சாச்வதமான ச்ரேயஸ்ஸைப் பெற்று வாழ்ந்தனர்.

முற்றிற்று

